கல்கல்வி இம்மை பயக்கும்! நம்மை விளக்கும்!!

ஸ்ரீ

# கற்பரசி

அல்லது

# சுகாதலர் பெருமை



எம். எஸ். சுப்பிரமணிய ஐயர்
எழுதியது

விலை அரையணா

உ

# தமிழன்பருக்கும் பெரியாருக்கும் வந்த

ஸ்ரீ

## சாரதா சதங்கை மணி.

1. கற்பாசி
காதலர் பெருமை
2. கிருஷ்ண குமாரி
வீரமகளின் வெற்றி
3. சடையப்ப வள்ளல்
கம்பநாடன் நன்றி
4. நீலி பாராக்கிரமம்
சத்திய விஜயம்
5. இன்பாசக் கதைகள்
அற்புத சம்பவம்
6. மன்மத மஞ்சரி
ஓாதியின் புலம்பல்
7. விகடக் களஞ்சியம்
நகைச்சுவைச் சரிதம்

எங்கும் ஏஜண்டுகள் தேவை.

நல்ல கமிஷன் உண்டு
உடனே எழுதவும்.

அன்பர்காள்!

இணையிலாதது நமது தே ம். இதற்கு, நமது முன்னோ களின் மொய்புகழே காரணம். நம்மவரோ இப்போது நலிந்து நிற்கின்றனர். அன்னவரைத் தட்டி எழுப்புதல் நமது ஆசை. ஆதலின் வேந்தர் வீரர் வர் பெரியோர், கற்ப காரிகையர், முதலியோ சரிதங்களை வெளியிடத் டங்கியுள்ளோம். மேலும் சரிதங்கள் இனிய நடை எளிய விலையில் இருத்தல் வேண்டும் என்பதும் நமது நோக்கு. இதனைக் கருதியே அரையணு விலையில் சிறிய நூல்கள் வெளிவருகின்றன. வாரம் ஒரு நூல் பிரசுரமாகும். அவ்வரிசை "ஸ்ரீ சாரதா சதங்கை மணி" என்று பெயர் கொண்டுளது. அன்பரின் ஆ ரவும் ஆண்டவன் அருளும் மிகவும் தேவை.

எம். எஸ். சுப்பிரமணிய ஐயர்,
ஆசிரியர்
ஸ்ரீ சாரதா சதங்கை மணி
மயில்வாகன் கம்பனி,
32, ஐயப்பசெட்டி வீதி, மண்ணடி, மதராஸ்.

by T. M. Natarajan

கல்வி இம்மை பயக்கும் ! நம்மை விளக்கும் ! !

ஸ்ரீ

# கற்பாசி

அல்லது

# காதலர் பெருமை

## 1. கண்ணபுரக் காதலர்

அமிழ்தினும் இனிய நம் தமிழ்மொழி வழங்கும் பூமி தமிழ்நாடு எனப்படும். அந்நாட்டின் ஒரு பகுதி சோழ வளநாடு. அவ் வளநாட்டை முன்னம் ஆண்டுவந்த அரசர் பலர். அவ் வேந்தரில் ஒருவன் பெயர் வீரசோழன். அச்சோழனது அரசாட்சியிலே முனையதரையன் என்னும் ஓர் அதிகாரி இருந்தனன். குடிமக்களிடம் பகுதிப் பணம் வாங்குவதே அம் முனையதரையனது வேலை. அவ் வேலை பற்றி அவனுக்குத் தண்டநாயகன் எனும் பெயருண்டாயிற்று. அம் முனையதரையன் இராஜநீதிக்கேற்ப வேலை பார்ப்பவன்; குடிமக்களிடம் பேரன்பு காட்டுபவன்; பரந்தாமனிடம் பரம பக்தி பூண்டவன்; ஆதலின் வீரசோழ வேந்தனால் அவன் மிக்க பெருமை பெறலானான்.

கண்ணபுரம் என்னும் திருநகரம் அவனது உறைவிடமாயிருந்தது. அங்கே கோயில்கொண்டு எழுந்தருளியிருக்கும் எம்பெருமான் பெயர் சௌரிராஜப் பெருமாள். காலையிலும் மாலையிலும் கடவுளைத் தொழுதபின்பே அவன் போஜனங் கொள்வான். அக் கோயிலில் பணிவிடை புரியுங் கணிகையொருத்தி அவனது காதலி ஆயினள். அவள் பெயர் மோகனாங்கி. அவளும் ஆண்டவன்பால் அளவிலா

பக்தி பூண்டவள்; நல்லொழுக்கமும் நற்குணமும் நிரம்பியவள். அவ் விருவரும் கருத்தொருமித்து, பூவும் அதன் மணமும்போல் பொருந்தி வாழ்ந்து வந்தனர்.

ஒரு சமயத்திலே, நாடெங்கும் பஞ்சம் தோன்றி விட்டது. அதனால் மக்களனைவரும் பெரிதும் வருந்தினர்; கால்நடைகளும் கலங்கின. அது கண்ட காதலர் இருவரும் தங்களிடமிருந்த பொருள் பலவற்றையும் ஏழைகளுக்கு ஈந்து வந்தனர். அப்பொருள் போதவில்லை. உடனே, முனையதரையன் தான் அரசிறையாகத் தேடிய பொருளையும் பசிப்பிணியால் வாடும் ஏழைகளுக்கு உதவி விட்டான். நாடு செழித்ததும், அப்பொருளை அரசனிடம் எங்ஙனமேனும் சேர்ப்பித்து விடலாம் என்பதே அவன் கருத்து. ஆயினும் அசூயை கொண்ட அமைச்சனொருவன் அவனைச் சிறையில் அடைத்துவிட்டான் பழம் பகையைக் கருதி.

அதுகேட்ட மோகனாங்கி, நடமாடும் கோயில்களான ஜீவராசிகளிடம் கருணை பூண்டதற்கு இதுவோ பலன், என்று முதலில் மனமழிந்தனள். பின்னர் அவள் ஒருவாறு தேறித் தனது நாயகனை மீட்கும் வகையில் கவலை கொண்டாள்; தான் தரித்திருந்த அணிகலன்களையும், முன்னோர் வைத்துப்போன பொருள்களையும் விலைக்கு மாறினாள்; உடனே அத்திரவிய மனைத்தையும் அமைச்சனிடம் சேர்ப்பித்துத் தனது காதலனைக் கடுஞ்சிறையிலிருந்து விடுவிக்கவேண்டுமென வேண்டி நின்றாள். கெடுமதி படைத்த மந்திரியோ அப்பணமனைத்தும் வந்த ஆட்கூலிக்கென்று கூறிவிட்டு, முனையதரையனை விடுவிக்கவில்லை. அக்கணிகை உடனே அரசவை யடைந்து குறையிரக்கக் கருதினாள். ஆனால் அவ்வமைச்சனே அதற்கு இடந்தராமல் இடர் செய்யலானான்.

அதன்மேல் மோகனாங்கி, இனி தெய்வமே துணையெனக் கொண்டு, சௌரிராஜப் பெருமான் சந்நிதி சென்று மந்திரியின் மோசத்தைக் கூறி முறையிட்டனள்; “கண்ணபுரத்துக் கருணை வள்ளலே! இன்னும் ஐந்து தினங்களுக்குள் எனது தலைவன் விடுதலை பெறவேண்டும். அதுவரையில் யான் உண்ணா நோன்பு கொள்வேன்; ஐந்

தாம் நாளிலே நாதன் வாராதுபோயின், தீயில் குளித்து விடுவேன்,'' என்று அவள் சபதங்கொண்டாள். அவ் விதமே ஐந்துநாள் வரையில் அப்பெண்பால் அன்ன பானஞ் செய்யவில்லை. ஐந்தாநாள் அந்திப்பொழுது வந்தும் அவளது ஐயன் வரக் காணேம். உடனே மோகனங்கி சிறிதும் தாமதியாமல் தீ மூட்டினள்; அதனை மும்முறை வலம்வந்து வணங்கினள்; அக்கினியில் குளிக்கப்போகும் சமயத்தில், "மறுநாள் பொழுது சாய்வதற்குள் புண்ணியன் வருவான்,'' என்று அந்தரத்தே அசரீரி மொழிந்தது. ஆதலின் அம்மங்கை நல்லாள் தீயில் குளியாது, கணவனது வரவை எதிர்நோக்கி யிருந்தனள்.

ஈதிங்ஙனமிருக்க, எம்பெருமான் வீரசோழனது கனவில் தோன்றி, நடந்தவற்றைச்சொல்லி,"உடனே பக்தனை விடுவிப்பாயாக,'' என்று கூறி மறைந்தார். அவ்விதமே சோழவரசன் முனையதரையனது சிறையை நீக்கிச் சிரும் சிறப்பும் செய்து அவனைப் போகவிடுத்தனன். வழிமேல் விழி வைத்து வாடிநின்ற கணிகையும் தனது காதலனைக் கண்டு களிகூர்ந்தாள். அதுவரையில் அன்னம் புசியா திருந்த மோகனங்கி அறுசுவையுங்கலந்த உண்டி சமைக்கலாயினள். அது பாலும் பயரும் பாகமாக விரவி, ஏலமும் சர்க்கரையும் இனிதிட்டு, கமகம வென்றிருந்தது. அது கண்டு சாலவும் மதுரமெனச் செப்பினன் அம்முனையதரையன். உடனே காதலியோ, "இவ்வன்னம் சௌரிராஜனுக்கே தகும்'', என்று சொல்லினள். இங்ஙனம் உரையாடிய பின் அவ்விருவரும் அன்னமருந்தி இன்பமா யிருந்தனர்.

மறு தினம் பொழுது புலர்ந்தது. காலையில் அர்ச்சகர் வந்து கோயில் கதவைத் திறந்து நோக்கினர்; நோக்கவே ஈசனது மேனி முழுவதும் அன்ன மயமா யிருந்தது. அது கண்டு, "ஐயோ! இஃது யாரிழைத்த அபசாரம்; என் செய்குவேன்,'' என்றலறினர் அர்ச்சகர். உடனே, "அர்ச்சக! அச்சம் வேண்டாம்,'' என்று ஆகாயத்திலே ஓர் ஒலி கிளம்பிற்று. பின்பு அவ்விரு காதலருக்கும் அச்செய்தி தெரியவந்தது. அவ்வளவில், இருவரும் ஆச்சரியமடைந்து, ஓடோடி வந்து உமைசோதரனை வணங்கி அர்ச்சகருக்கு ஆறுதல் கூறினர். நடந்ததை யுணர்ந்த

றும், அர்ச்சகர் ஆறுதலடைந்தார். அப்பால் அவ்விரு வரும் விரும்பியபடி, அப் பாகப்படியே அர்த்த ஜாமக்கட் டளை நடந்து வரலாயிற்று. என்றும் அக் கட்டளை நிலை யாக நடைபெற, அக் காதலரிருவரும் மூலநிதி வைத்துப் போயுளர். இன்றும் நாளையும் அக் கோயிலிலே அவ் விதம் அமுது படைத்து, ஆராதித்து வருவதைப் பார்க்க லாம். அவ்வமுதில் ஒருபாகம் அடியார்க்கு அளிக்கப் பட்டு வருகின்றது. மற்றொரு பாகமோ விலைக்கு விற்கப் படுவதாக அறிகிறோம். பரந்தாமன் பரிந்துண்ட அவ் வமுதை வாங்கி யுண்ணுதல் பெரும் பாக்கியமென்றே பக்தர் பலரும் கருதியுளர். அன்று முனையதரையன் திட் டப்படுத்திய பொங்கலமுதே இன்று உலகவழக்கில் "முனியோதரன் பொங்கல்" என மாறி வழங்குகின்றது.

## 2. கற்பரசி

தமிழ் நாட்டிலே ஒரு பாகம் பாண்டி வளநாடு. அப் பாண்டி நன்னாட்டிலே பதுமபுரி என்றொரு பட்டி னம் உண்டு. அப்பட்டினத்திலே விவேகன் எனும் ஒரு வேதியன் இருந்தான். அவன் அழகில் சிறந்தவன்; அருங்கலை பலவும் பயின்றவன்; அதிக செல்வம் படைத் தவன்; ஆரறிவும் வாய்ந்தவன். அவன் மனைவியின் பெயர் இரதிதேவி. அவள் தன் பெயருக்கேற்பப் பேரழகுபொருந் தியவள்; கணவனே கடவுளெனக் கொண்டவள்; அவனைத் தொழுவதே தவமென மதித்தவள்; அவனுக்குப் பணி விடை புரிவதே பரம பூஜை யெனப் பாவிப்பவள்.

பெண்களின் நாயகமாக விளங்கும் இத்தகைய மனை யாள் வாய்த்தல் பெரும் பாக்கியம் அன்றோ? விவேகனும் இரதிதேவியும்போல் தம்பதிகள் வாய்த்தல் அருமை அரு மையென அனைவரும் புகழ்ந்து போற்றி நின்றனர். விவே கனோ விதிவசத்தால் பரத்தையர் வசத்தனாகிவிட்டான். அவன் தனது தேவியுடன் உரையாடுவதில்லை; அவளைக் கண்ணெடுத்தும் பார்ப்பதில்லை; அவளிட்டதை உண்பான்; உண்டியின் சுவையையும் கருதான்; புசித்தவுடனே விலை மாதின் வீடுசென்று விடுவான். நம்பன் அடியவர்க்கு நல் காத் திரவியங்கள் பம்புக்காம், பேய்க்காம், பரத்தையர்க்

காம் என்றுள் ஔவை. அவ்விதமே விவேகனது பொருளனைத்தும் பரத்தைக் காயின. இரதிதேவியின் நிலையை என்னென்று சொல்வது! உடலை மூடிக்கொள்ளவும் நல்லாடை இல்லாது போயிற்று. சூரிய சந்திரரும் வருண பகவானும் அவ்வீட்டிலே வாசஞ் செய்ய வந்துவிட்டனர். இவ்வளவு ஏழ்மை நிலைமைக்கு ஆளாகியும், வேசையின் மீதிருந்த ஆசை அவ் வேதியனை விட்டகலவில்லை. நிதியும் கணவனும் நேர்படினும், தம் தம் விதியின் பயன் அல்லவா? மாலையிட்ட நாள்முதல் அம்மங்கை தன் மகிழ்நனுடன் ஒருநாளும் மகிழ்ந்திருந்ததில்லை; வார்த்தையாடியது மில்லை. சுருங்கச் சொல்லின், பெண்களுக்குரிய பாக்கியமெதுவும் அவள் பெறுது போயினள். ஆயினும் அக் கற்பரசி தன் சிந்தையிலேனும் கொழுநனை வெறுத்ததில்லை; ஆனல் எல்லாம் விதியின் பயன் என்று எண்ணி ஏங்கி யிருந்தாள். இத்தகைய தர்ம பத்தினியின் பெருந்தன்மையை அவ்வேதியன் வாய்க்கொண்டு போற்ருவிடினும், அவன் மனம் மாத்திரம் அவளையறியாது போற்றிப் புகழும். ஊராரும் அவளை ஏற்றி நின்றனர்.

ஒரு தினம் பரத்தைக்கு அளிக்க அவனிடம் பணம் இல்லை. காசில்லாமல் தாசியின் இல்லம் ஏகுதல் எங்ஙனம்? வீட்டிலே தங்கியிருக்கவும் மனம் உடன்படவில்லை. என்ன செய்வான்! அவன் ஆந்தைபோல்விழித்தான்; இங்கு மங்கும் நடந்து திரிந்தான்; கொண்டான் குறிப்பறிவாள் பெண்டாட்டி என்பது பண்டைமொழி; அக்கணமே அம் மாதரசி தன் கணவன் கருத்தறிந்து, தாலிச்சரட்டைமட்டும் கழற்றி ஒருதட்டிலிட்டு, முழுமனதுடன் தனது நாதனுக்கு ஈந்தனள். அவ்வளவுதான் தாமதம். விவேகன் வெகு மகிழ்ச்சியுடன் அந்நகைகளுடன் விலைமாதின் வீடு போகலானன். மனைவியின் பரிவைக் கண்டும், அவனுக்கு நன்மதி உதிக்கவில்லை. காலத்தின் கோலம்!

ஒருநாளிரவு அன்னமுண்டதும் விவேகன் புறப்பட்டான் வேசையின் வீட்டிற்கு. அச்சமயம் காளமேகம் கன உக்கிரமாக மழை பொழிந்தது. மேனியின்மீது மாரி படாதுசெல்ல, அவ்வேதியனிடம் குடையில்லை. உண்ண உணவும் உடுக்க உடையும் தட்டிய காலையில், குடைக்கு

எங்கேபோவது? விவேகன் விழித்தான் ஒன்றுந்தோன்ரு மல். தனதுபதியின் நிலையைப் பார்த்த அக்கற்பரசி தனது முன்தானையைக் கிழித்துக் கணவன் சிரமீது வீசினள். அவ்வளவில், அத்தானை பெருங் குடைபோல் அந்தரத்தே பறந்து வரலாயிற்று. அந்த அற்புதத்தைக் கண்டும், விவேகன் மனம் மாருமல் வெகு வேகமாக விலமாதின் வீடு சென்ருன். மனமோ முந்திச் சென்றது.

போகும் வழியிலே ஓர் ஒற்றையடிப் பாதை உண்டு; அப் பாதையின் இரு பக்கத்திலும் சப்பாத்திக்கள்ளி ஆளுயரம் வளர்ந்திருந்தது. அவ்விடம் விஷப்பாம்புகள் பகலிலே விளையாடுவதை அவன் பல சமயம் பார்த்துள் ளான். அப்பாதையின் குறுக்கே வைக்கோல்புரி யொன்று கிடக்க, அதனைக் கண்டதும் அரவமென விவேகன் அஞ்சி விட்டான். அப்பால் எட்டி யடி வைக்க அவன் கால் எழவில்லை. மழையுடன் காற்றும் வீசியதால், அசைந் தாடும் வைக்கோல் புரியைக் கண்டு, பாம்புதான் புரளு கின்றதென எண்ணி, அவன் பயந்தது வியப்பாமோ? அவ்வழியை விடுத்து, வேசிவீடு செல்ல வேறுவழி கிடை யாது. வீட்டுக்குத் திரும்பவும் மனம் வரவில்லை. ஆத லின் பாம்பு போய்விடுமென அவன் வெகுநேரம் காத் திருந்தான். அரவமோ அவ்வழியைவிட்டு அகலுவதா யில்லை; புரண்டுகொண்டே கிடக்கலாயிற்று.

முடிவிலே விவேகன் வேறு வகையின்றி வெகு வாட்ட முடன் தன் வீடடைந்தான்; மழை நின்றபாடில்லை; வீட் டுத் திண்ணையிலே வருணன் வாசம் பண்ணுகின்ருன்; ஆத லின் அங்கே எங்ஙனம் அமர்ந்திருப்பது? கதவைத்தட்டி, உள்ளே போகலாம் என்ருலோ, வெட்கம் வந்து குறுக்கே நின்றது. தாலி கட்டின காலந்தொட்டு மனைவியுடன் தங் காத வேதியன், இன்று தங்க மனங் கொள்வது எப்படி? திண்ணையிலும் படுத்துறங்க முடியவில்லை; உள்ளே போக வும் உள்ளம் ஒருப்படவில்லை. தத்தளிக்கின்ருன் விவே கன் விவேகமின்றி. அவனை இம்மட்டோடு நிறுத்தி இரதி தேவியின் நிலையைச் சிறிது ஆராய்வாம்.

வேதிய விவேகன் விலமாதின் வீடுசென்றதும், இரதி தேவி, "எல்லாம் வல்ல எம்பெருமானே! என் கணவர்

மழையில் நனையாமல், அம் மடந்தையின் வீடு சென்ருரோ? மழைக்கா லிருட்டில் ஆபத்தில்லாது போய்ச்சேர அவரை அடுத்துக் காப்பது உனது கடமை. ஈச! எப்போது தொலையும் இத் துன்பம்? என் கொழுநர் எந்நாள் என்மீது கருணை கொள்வார்? அவரது அருளை யடையும் காலமும் கிட்டுமோ? எல்லாம் உனது திருவிளையாடல்,'' என்று மங்கைபாகனை மனத்தே வழுத்தினுள். பின்னர் அவள் சிறிது கண்மூடினள்; மூடியதும், நாதன் நொந்துவந்து, கதவருகே நிற்பதுபோல் கனவு கண்டனள்; உடனே, கண் மலர்ந்து, நாதா நாதா என்று நவின்றுகொண்டு, விரைந்தோடி வந்தாள்; வாயில் கதவைத் திறந்தாள்; கணவனது பாத கமலங்களில் வீழ்ந்து வணங்கினுள்; கனிவுடன் கைலாகு கொடுத்து, உள்ளே அழைத்துச் சென்ருள்; பாயின் மீதிருத்திப் பரிவுடன் பாதங்களைத் தனது புடவையால் துடைத்தாள்; பணிவிடை பலவும் பாங்காகச் செய்தாள். முடிவில் அவள் தன் பதியை நோக்கி, "வாழைப்பழந் தின்ருல், வாய் நோகும் கை நோகும் என்று சொல்லித் தாழம்பழம் தின்னப்போன தார்வேந்தா! தாழம்பழம் கசந்ததோ? உன்னைத் தனிவழியே விட்டதோ? மாடுதின்னி (வைக்கோல்புரி) கிடந்து, வழி மறித்ததென வந்தனையே! தாளைத் திற என்ருல், உங்கள் குலம் தாழ்ந்துபோமோ?'' என்று கூறி, இரு கண்ணிலும் நீர்பெருகக் கதறினுள்.

அவ்வுரை கேட்ட வேதியன் மிகவும் மனந்திடுக்கிட்டுச் சிறிதுநேரம் ஏதுமுரையாது மோனவிரதம் பூண்டிருந்தான். அப்பால் அவன், "ஆ! ஆ! வழிநடுவே நாம் பட்டபாட்டை இவள் எங்ஙன மறிந்தாள்? நம்மைத் தொடர்ந்து வந்து பார்த்தனளோ? இன்றேல், தனது கற்பின் நலத்தினுல் மதித்து அறிந்தனளோ? கற்புமிக்க காரிகையர் காலனையும் கலங்கச் செய்வரே! இவளது கற்பின் நலமே உண்மையை உணர்த்தி யிருக்கவேண்டும். ஒற்றையடிப் பாதையில் புரண்டு கிடந்தது பாம்பன்று; அது வைக்கோல் புரியே; இவ்வுண்மையினை இவளது வாய்மொழியாலன்ருே கண்டு கொண்டோம்! எனவே இவளை இதர பெண்களுடன் ஒப்பிட்டு உரைக்க இயலாது; இவளை

னையிலாக் கற்பரசி என்றே கூறவேண்டும். இத்தகைய பதிவிரதையை இவ்வளவு நாள் பரிதபிக்க விட்டேன் பாவியேன். இப்பாவத்தை எவ்விதம் தொலைப்பேன்? எம்பெருமானே! இக்கற்பரசிக்கு ஏழையேன் இழைத்த தீமை யனைத்தையும் பொறுத்தருளவேண்டும். விவேகன் என்னும் பெயர் படைத்த பாவியேன் இந்நாள் வரையில் அவிவேகனாக அல்லவோ இருந்துவிட்டேன்," என்று வருந்தினன்; வாய்விட்டழுதான்: அப்பால் அவன் வேசை யாசையை விட்டுத் தள்ளினன்; இல்லற தர்மத்தைச் செவ்வனே நடத்தவும் தலைப்பட்டான். அதுகண்ட கற்பரசி அகமிக மகிழ்ந்தனள். மாதரசியின் உள்ளம் குளிரவே, இல்லம் இனிது செழிக்கலாயிற்று. திருமகளும் முன் போல் அவ் வீட்டிலே நடனஞ்செய்யத் தலைப்பட்டனள்.

## 3. பத்தினி

பாரத பூமியின் வடபாகத்திலே சிந்து தேசம் என்னும் திவ்ய தேசம் ஒன்றுளது. ஸிந்துமாநதி பாயப்பெறுவதால், அது அப்பெயர் பெற்றதென்பர் பெரியோர். பல்லாண்டுகளுக்கு முன்னம் பர்த்திருஹரி என்பான் அத்தேசத்தைப் பரிபாலித்து வந்தான். அவன் ஆடவர் திலகன்; அருங்கலை விநோதன்; பெரும்புகழ் கொண்டோன்; பேரறிவாளன்; வீரர் வீரன்; சூரர் சூரன். அவனது ஆட்சியின் நேர்மை நவிலுந் தரமன்று; சுருங்கச்சொல்லின் மநு நீதிக்கு ஓர் இலக்கணமாக அவனது ஆட்சி விளங்கி வந்தது. ஆதலின், மாதம் மும்மாரி தட்டாது பெய்து வரலாயிற்று. நான்கு வருணத்தினரும் தத்தமக்குரிய கருமத்தில் தவறாது நடந்து வந்தனர். இத்தகைய வேந்தனது பட்ட மகிஷியின் பெயர் ஜோதிபாய். அவள் பெயர் காரணப் பெயராகும். அவளது அழகும் குணமும் எங்கும் ஜோதிப்பிரகாசமாக விளங்கி வந்தன. பிங்களை எனவும் அவளுக்குப் பிறிதொரு செல்வப் பெயருண்டு. அக்கோமானையும் கோமகளையுங் கண்டு, குடிமக்கள் அனைவரும் களித்து இன்பமுடன் வாழ்ந்து வந்தனர்.

ஒரு நாள் அவ் வேந்தன் வேட்டையி னிமித்தம் கானகம் போனன். வீரர் பலர் வேலும் வில்லும் கவணும்

கல்லுங் கொண்டு அவ்வரசனுடன் சென்றனர். வேட்டை மிகவும் மும்மரமாக நடைபெற்றது. மாலையிலே மன்ன வனுக்கு மிக்க களைப்பு உண்டாயிற்று. ஆதலின் அவன் அருகே யிருந்த குளக்கரை யொன்றில் சற்றே இளைப் பாறலானான். அப்போது, வேட்டையிலே படுகாய முண்ட கலைமானொன்று விரைந்து வந்து, தடாகத்தை யடைந்து தொப்பென்று தரையில் சாய்ந்து உயிரைவிட்டது. அத னைத் தொடர்ந்துவந்த பெண்மானும் தீயில்பட்ட புழுவே போல் துடித்து, அரைக்கணத்தில் மரித்துப்போயிற்று. இவ்வதிசயத்தைப் பார்த்த அப் பார்த்திபன் இன்பமும் துன்பமும் ஒருங்கே கொண்டு விலங்கினத்திற்கும் இவ் வளவு பாசமா? என்று வியப்பெய்தினான்.

இது நிற்க, அக் குளக்கரைக்குக் கூப்பிடு தூரத்திலே கொடிய நாகமொன்று சீறிக்கொண்டு சென்றது. அரசன் அத்திசை நோக்கிப் பார்க்கவே, விற்கிடை தூரத்தில் வேடுவனொருவன் அயர்ந்து தூங்குவதைக் கண்டான். கண்டதும், ஒருசமயம், மாநாகம் அவ் வேடுவனைத் தீண்டி யிருக்குமோ என்று அவனுக்கு ஐயமுண்டாயிற்று. உடனே அவ்வேடுவனது மனையாள்வந்து, அவனைத் தட்டி யெழுப்பினள்; இங்கு மங்கும் அசைத்துப் பார்த்தனள்; அவ்வேடுவன் கண்விழிக்கவில்லை. அரவந் தீண்டியதனால் ஆருயிர் தீர்ந்தவன் எங்ஙனம் விழித்தெழுவான்? பார்த் தாள் அப்பெண்பால்; இனி வருந்திப் பயனில்லை யென்று புத்திகொண்டாள். உடனே அருகில் கிடந்த கொம்பும் தழையுங் கொண்டு, கொடுந்தீ மூட்டித் தனது கணவ னுடலை அக் கட்டையில் அமர்த்தித் தானும் அருகே அமர்ந்துவிட்டாள். அப் பரிபவங் கண்ட பர்த்திருஹரி பரவசமாகி நின்றனன். இதற்குள் பரியுடன் வீரர் வந்து பர்த்திருஹரி வேந்தனை யழைத்தனர்.

உடனே, பரிமீதேறிச்சென்று தன் மாளிகைசேர்ந்த மன்னவன் மனம் நிம்மதிகொள்ளவில்லை. பரவசமும் பரம துயரும் அவனை அடிமைகொண்டுவிட்டன. இரவில் நெடு நேரமாகியும் அவன் அன்னம் புசிக்கவில்லை; அயரவுமில்லை; அஃதறிந்த அரசி அவ்வேந்தனைச் சிறிதே ஆற்றினள். பின்பு அவன் தான் வனத்தில் கண்டகாட்சியை அரசிக்கு

அறிவித்து, "என்னே! என்னே!" என்று கூறினன். அது கேட்ட ஜோதிபாய் "அரசே! ஆரணியத்தில் கண்டகாட்சி ஓர் அற்புதமன்று. கற்பின் இலக்கணத்தைத் தாங்கள் அறியீரோ? பதிபட்டதும், சதி மரிப்பதன்றோ சாலச் சிறந்தது? அதுவே தலைக் கற்பு அல்லது உத்தம கற்பு எனப்படும். நாதன் ஆவி நீங்கினன் என்று கேட்டபின்னர், உத்தம பத்தினிமாரின் உயிரைக்கொள்ளக் கனலும் வேண்டுமோ? துயரொன்று போதாதோ? வேந்தே! காதலன் இறந்தான் என்றுகேட்டவுடன், உத்தம பத்தினிப் பெண்டிர் உலைக்களத்திலுள்ள ஊது துருத்தியைப்போல் பெருமூச்செறிந்து, அக் கணமே ஆருயிர் விடுவர். மத்திம பத்தினிப் பெண்களோ, கொழுந்து விட்டெரியும் கனல் நிரலைத் தாமரை நிறைந்த தடாகமெனக் கருதித் தழுவி இன்னுயிர் ஈவர். இவ்விரு வழியையும் மேற்கொள்ளாமல், காயத்தைக் காயச்செய்து காலங்கழிப்போர் கடையாவர். ஆயிரத்தெட்டு அண்டங்களையும் கட்டியாண்ட சூரபதுமனது மனைவியாம் பதுமகோமளை யென்பாள் தனது நாதன் தீர்ந்தானென்றுகேட்டவளவிலேயே ஆவி துறந்தாளன்றோ? அம் மடந்தை யன்றோ உத்தம பத்தினிப் பெண்!" என்று வியந்து கூறினள்.

அவ்வுரைகேட்ட அரசர் பெருமான் அளவிலா வியப்புக்கொண்டு, "பெண்ணே! நீ சொல்லுவது உண்மையே! ஆயினும், இக் கலியுகத்திலே அத்தகைய உத்தம பத்தினிப் பெண்டிர் உளரோ?" என்று வினவினன். அவள், "என் அரசே! பதுமகோமளை போன்ற பத்தினிப் பெண்டிர் பலர் இல்லாது போயினும், இரண்டொருவரேனும் இருப்பர்; இல்லையேல் இப்பாரத பூமியின் பழைய வாசனையேனும் நிலைத்திருக்க இயலுமோ," என்று விடை தந்தனள். அது கேட்ட காவலன், "என்னே! நமது மனைவியின் மமதை! கணவனது மரணமறிந்த கணமே மரிப்பவர் தாம் உத்தமபத்தினிப் பெண்டிராம்; மற்றையோர் மத்திமராம். நன்று! நன்று! இவளைச் சமயம் பார்த்துச் சோதித்தல்வேண்டும்", என்று தனக்குள்ளே சிந்தித்துக் கொண்டான். பின்னர், இருவரும் வேறு விஷயமாகப் பேசி நின்று இராப்பொழுதைப் போக்கினர்.

நாட்கள் பல சென்றன. மீண்டும் ஒரு தினம் அம் மன்னவன் வேட்டையை நாடி வீரருடன் வனஞ்சென்ருன்; பகல்பொழுதெல்லாம் வேட்டையாடிவிட்டு, அந்திப்பொழுதிலே ஓர் நீர்நிலையின் அருகில் உலாவி நிற்கலாயினன். அப்போது, இரு குருவிகள் மரக்கிளையில் மகிழ்வாக வீற்றிருந்தன. உடனே, முன்னம் தனது தேவியுடன் உரையாடி நின்றதை அம் மன்னவன் சிந்திக்கலாஞன். கேடு வரும் பின்னே, மதிகெட்டு வருமுன்னே என்பர் பெரியோர். அங்ஙனமே, "வனத்தில் கொடிய வேட்டையிலே மாண்டு போனுன் மகிபன்," என்று தனது தேவிக்குத் தூதுபோக்கினன். அம் மாயச் சாவோலை தாங்கிய பணியாளன் யாது செய்வான்? விதியின்றி அந்தப்புர மடைந்து, அரசியை யணுகி, "ஐயகோ! மரித்தான் மகிபன்," என்று மொழிந்தான். அவ்வுரை செவியில் பட்டதுதான் தாமதம். ஜோதிபாய் ஆவி துறந்து அமரர் உலகம் போய்விட்டனள்.

உடனே அரண்மனை யெங்கும் அழுகுரல் கிளம்பிவிட்டது. சிறிது நேரத்திற்கெல்லாம் அப் பார்த்திபன் தனது பதியடைந்தான்; அடைந்ததும், அழுகை யொலியின் காரணங்கண்டு, "அந்தோ! விஷப் பரிட்சை பார்த்த பாவியன்ருே யான்? ஜோதிபாய்! யான் சித்தங்கலங்கி, உன்னையும் சோதித்தேனே! பிங்களா! நீயன்ருே உத்தம பத்தினி! உன்போன்ருர் யாவருளர்?" என்றலறிஞன். இவ்விதம் சிறிதுநேரம் புலம்பியதும், நெடுநேரம் மூர்ச்சை கொண்டு மன்னவன் மண்ணில் சாய்ந்து கிடந்தான். அப்பால், அவன் நினைவுகொண்டு, "பிங்களா! இனி யாரைக் கொண்டு உயிர் வாழ்வேன்! எனது மதியீனத்தை என்னென்று சொல்வேன்! உத்தம பத்தினிப் பெண்ணின் பான்மையைப் பாவியேனுக்கு உணர்த்தி, ஒளித்துக் கொண்டனையே! இனி எனக்கு இவ் வரசுரிமை எதற்காக? இவ் வாழ்வும் எதுபற்றி? இதோ உலகை வெறுத்தேன்! வெறுத்தேன்," என்று கூறித் தவ வேடந்தாங்கிக் கானகம் போய்விட்டான். அப்பால் நெடுநாள் வரையில், பிங்களா! பிங்களா! என்றே அவன் பேதுற்றுத் திரிந்தானெனச் சரித்திரஞ் சொல்லும். முடிவில் அம் மன்னவன்

முக்திபெற்றனென்று புலப்படுகின்றது. அவ்விதம் அவ் வேந்தன் முக்திபெற்ற பூமி இன்னும் சிந்து தேசத்தில் சிறப்புடன் விளங்குவதாக அறியவருகிறோம். சுபம்!

## 4. உத்தமி

சோவள நாட்டிலே சாங்தபுரம் என்ற நகரம் ஒன்றுண்டு. அதில் இரு சகோதரர் வசித்து வந்தனர். மூத்தவரின் பெயர் முகுந்தன். அவர் தமது குலத்துக்குரிய நான்கு வேதங்களிலும் நன்கு பயின்றவர்; மிக்க ஆசாரசிலர்; சிவ பூஜையில் மிகச் சிறந்தவர். அவர் அதிகாலையில் எழுந்திருந்து உச்சிப்பொழுது வரையில் நியதிப்படி நித்திய கருமங்களைச்செய்து முடிப்பார்; பின்னர் முறையாகத்தெய்வ வழிபாடு செய்தே உணவருந்த உட்காருவார். அவரது பத்தினியின் பெயர் இராதை. தன் மணாளனைப் போலவே அவளும் ஒழுக்கத்தில் உவகை உள்ளவள்; தன் கணவனது நித்திய விதிகளில் தன் பங்கை நன்கு நிறைவேற்றும் ஆவலும் ஆர்வமும் உடையவள்.

அவ்விரு சகோதரரிலே இளையவரின் நாமதேயம் விமலநாதன். இவரிடம் மூத்தவரைப்போல் அவ்வளவு சுசி, ருசி இல்லை. காலையில் எழுந்து வயல்காடுகளைச் சுற்றிப்பார்த்து குடும்ப காரியங்களைக் கவனிப்பதற்குள் பகற்பொழுது வந்துவிடும். அப்பால் பல் துலக்கி நீராடுவார். இவர் நீராடிவருவதற்கும், மூத்தவர் சிவபூஜை செய்து முடிப்பதற்கும் சரியாக விருக்கும். இவரது பத்தினியோ தன் பதியைப்போல் விட்டுக் காரியங்களை விமரிசையாக நடத்திவருவதைக் கடமையாகக் கொண்டவள்.

தமையனும் அவர் மனைவியும் ஆசாரத்திலும் பூஜையிலும் மூழ்கிக் கிடப்பதுபோல், தம்பியும் அவர் மனையாளும் குடும்ப நிர்வாகத்தில் மூழ்ந்திருப்பர். அந்நால்வரும் கருத் தொருமித் திருப்பினும், "நாமன்றோ ஆசார சிலர்களாயிருக்கிறோம்," என்று முகுந்தனும் இராதையும் இறுமாப்புக்கொண்டு கிடந்தனர்.

மற்ற இருவருமோ "நம் அண்ணனும் மதினியும் சிறப்பாகப் பூஜைசெய்வதற்கு உதவியா யிருப்போம். இதுவே

நமக்குப் போதும்," எனும் பரிசுத்த சிரத்தையுடன் இருந்து வரலாயினர். மானஸ பூஜையில் பின்னவரும் அவரது பாரியாளும் சிறந்து விளங்கியதை அன்னார் அறியவில்லை. அறியாது போகவே, சிற்சில சமயங்களில் மூத்தவரும் அவர் மனைவியும் மற்ற இருவரையும் இலேசாக மதித்து நடத்திப் பேசுவதுண்டு. ஒருநாள் பகல் பதினைந்து நாழிகை யிருக்கும். விமலநாதன் வயல்களைச் சுற்றிப் பார்த்துவிட்டு வீடு சேர்ந்தார். அப்பொழுது அவர் நீராடாமலும், பல் துலக்காமலும் நிற்பதைக் கண்ட ராதை, 'அண்ணாவின் சிவபூஜை முடியப்போகிறது, இன்னமுமா நீராடவில்லை? சீக்கிரம் ஆகட்டும்; சாப்பிடவேணடும்' என்று அதிகாரத்துடன் கடுகடுப்பாகக் கூறினாள்.

உடனே அவர் நதிக்குச் சென்று நீராடிவந்து திண்ணையில் உட்கார்ந்து மத்தியான ஜபம் செய்துகொண்டிருந்தார். மூத்தவரின் சிவபூஜை முடியவில்லை. சிவலிங்கங்களுக்கு அபிஷேக ஆராதனை நடந்ததும், மகா நைவேத்தியம் செய்யவேண்டிய சமயம் வந்தது. முகுந்தன் தன் மனைவியை விளித்து, "மகா நைவேத்தியம் வரட்டும்," என்றார். அவ்வாறே அவள் கொண்டுவரப் போயினள். பூஜையறைக்கும் சமையலறைக்கும் நடுவே சூரிய கிரணம் நன்கு தாக்கும்படியான முற்ற மொன்றுளது. அதன் தளம் கருங்கல்லால் ஆக்கப்பட்டது. மாதமோ சித்திரை. அக்கினி நட்சத்திரம்; அத்தகைய தினத்தில் முற்றத்தின் தளம் எவ்வளவு சூடுகொண்டிருக்கும் என்பதை நாம் விரித்துரைக்க வேண்டியதில்லை.

இடதுகை மணியை அடித்துக்கொண்டிருக்க, வாய் மந்திரம் விளம்ப, வலதுகையோ மலரை எடுத்துச் சிவலிங்கத்தின் மீது வெகு நேர்த்தியாக அர்ச்சிக்க, "அந்தோ! கருங்கல் தளமுள்ள முற்றத்தின் வழியே எப்படி நம் பாரியை நடந்துவருவாள்? அடி சுடுமே; கையிலோ மகா நைவேத்திய வெண்கலப்பானை; அதுவும் மிக்க சூடாயிருக்குமே. பாதத்தின்மீது வெம்மை தாக்காதிருக்கும் வண்ணம், வாழைப் பட்டையினால் செருப்பு தைத்துக்கொடுப்பின் நலமாயிருக்குமே,' என்று முகுந்தன் சிந்திக்கலானார்.

காலையெல்லாம் வயலைச் சுற்றிவந்த களைப்பும், பசியின் வேகமும் சேர்ந்து வாட்ட, "அடி பெண்ணே! அண்ணா என்ன செய்கிறார்? பூஜை ஆய்விட்டதா,'" என்றார் விமலநாதன். உடனே அவரது பத்தினி உத்தமி விரைந்துவந்து "அண்ணா மதினிக்கு வாழைப் பட்டையினால் செருப்புத் தைக்கிறார். பின்னர் மகா நைவேத்தியம் ஆகும், சற்றே பொறுத்திருங்கள்," என்றனள். இம்மொழி கேட்டதும் முகுந்தன் திடுக்கிட்டு, மணியையும் புஷ்பத்தையும் கீழே போட்டுவிட்டு, "என் தாயே! உத்தமியே! உன்னுடைய மானஸ பூஜை யன்றோ பூஜை! என் ஆடம்பர பூஜை எம் மாத்திரம்? நெறிப்படி சிவபூஜை செய்வதாக நான் இறுமாந்திருந்தேன். உன்னையும் உன் கணவனையும் உதவாதவர்கள் என்று மதித்திருந்தேன். இனி நீயே எனது குரு; நீயே என் மனமலத்தை அகற்ற வந்த தீபம்; இதுவரை நானும் என் மனைவியும் உங்களுக்கு இழைத்துவந்த அபசாரத்தைப் பொறுத்துக் கொள்ளவேண்டும்," என்று துதித்து, உத்தமியின் பாதத்தில் விழுந்து பணிந்தார். "சின்னக் கொழுந்தனுடைய சிறுக்கி" யென்று செருக்கினால் அவமதித்திருந்த இராதையும் உத்தமியின் பாதத்தைக் கையினால் தொட்டுக் கண்ணில் ஒற்றிக்கொண்டாள். சிவபூசையினால் தருக்கியிருந்து, கிருஷ்ணன் சுட்டிக் காட்டியபின், பீமனே பெரிய பக்தனெனப் பார்த்தன் பரீக்ஷையில் அறிந்துகொண்டது போல், முகுந்தனும ராதையும் அன்றுமுதல் அறிவுபெற்று, மமதையின்றி பயபக்தியுடன் வாழ்ந்து வந்தனர். சிவபூசை செய்யுங் காலையில் சித்தத்தைச் சிவன் பாலிருத்தி மனம் மொழி மெய்களை யடக்கி, தூப தீப நைவேத்திய ஆராதனை செய்தாலன்றிப் பயனிராது. அத்தகைய ஆடம்பரம் இல்லாமற் போயினும், மனத்தே முன்னவனை ஒரு கணமேனும் இருத்தித் துதித்தால் இதுவே சிறந்ததாகும். மங்களம்!



மூன்றாம் பதிப்பு, ஐயாயிரம் பிரதிகள்; .6—2—'32.

Kesari Printing Works, Madras.

ஸ்ரீ சாரதா சதங்கை, மணி - 2

கல்வி இம்மை பயக்கும்! நம்மை விளக்கும்!!

ஸ்ரீ

# கிருஷ்ணகுமாரி

அல்லது

# வீர மகளின் வெற்றி



எம். எஸ். சுப்பிரமணிய ஐயர்

எழுதியது

விலை அரையணா.

# தமிழன்பருக்கும் பெரியாருக்கும் வந்தனம் !

---

ஸ்ரீ

## சாரதா சதங்கை மணி

1. கற்பாசி
காதலர் பெருமை
2. கிருஷ்ண குமாரி
வீரமகளின் வெற்றி
3. சடையப்ப வள்ளல்
கம்பநாடன் நன்றி
4. நீலி]பராக்கிரமம்
சத்திய விஜயம்
5. இன்பரசக் கதைகள்
அற்புத சம்பவம்
6. மன்மத மஞ்சரி
இரதியின் புலம்பல்
7. விகடக் களஞ்சியம்
நகைச்சுவைச் சரிதம்

எங்கும் ஏஜண்டுகள்
தேவை.

நல்ல கமிஷன் உண்டு
உடனே எழுதவும்.

அன்பர்காள் !

புகழ் பூத்தது நமது பாரத பூமி. தமிழகமோ தலை சிறந்தது. முன்னம் வள்ளல்களும் வேந்தர்களும், பக்தரும் முக்தரும், சூரரும் தீரரும், பத்தினியரும் பாவைமாரும் நம் தேசத்தை மலைத்தீபம்போல் விளக்கிப் போயினர். அன்னவரின் சரிதவிவரங்கள் புராண இதிகாசங்களிலும் தேச நூல்களிலும் இலைமறை காய்போலுள. அவற்றை அனைவரும் அறியவேண்டி, எளிய நடையில், இனியமொழியில், இலகுவான விலையில் எழுதி வெளியிடத் துணிந்துளோம். ஒவ்வொரு நூலும் விலை அரையணாவே. வாரந்தோறும் ஒரொரு சிறு நூல் கொணர உத்தேசம். "ஸ்ரீ சாரதா சதங்கை மணி" எனும் வரிசையில் அவை வெளிவரும். அன்பரின் ஆதரவும் ஆண்டவன் அருளும் தேவை. இரண்டும் தட்டாது கிட்டுமாக !

எம். எஸ். சுப்பிரமணிய ஐயர்,
ஆசிரியர்
ஸ்ரீ சாரதா சதங்கை மணி.

மயில்வாகன் கம்பனி,
32, ஐயப்பசெட்டி வீதி, மண்ணடி, மதராஸ்.

கல்வி இம்மை பயக்கும்! நம்மை விளக்கும்!!

# கிருஷ்ண குமாரி

அல்லது

# வீரமகளின் வெற்றி

## 1. காதலன் கரைதல்

நங்கையர் திலகமே! இம்மானிட வாழ்வில் போக போக்கியங்களுக்குப் பெரிதும் ஏற்றபருவம் பேரழகு வாய்ந்த இளம் பருவமே யன்றோ? அன்றியும், அழகின் வடிவான இவ் விளம்பருவம் நீரில் குமிழிபோல் நெடுங் காலம் நீடித்திராமல், மறைந்துபோம் என்பதையும் நீ உணராயோ? எனவே, இவ்வரிய இளமையினை வீணே கழிக்காது, நாம் இருவரும் இன்பமே வாழலாம்.''

"வீர! வீணே கலங்கி நில்லாதே! உனது விருப்பத்திற்கு உகந்த பொருளை உன்பால் ஒப்படைக்க அன்றே எனது பெற்றோர் இசைந்துளர். உரிய காலத்தே அதனை நீ கைக்கொள்ளலாகும். இதுகாலை எனது மணமாலை தனை நாடி, நீ மறுக ஒண்ணாது. என்னே! உனது காதல்! நன்றுடான நம் நாட்டின் நிலையினை அறியாமல், நெறி கலங்குதல் வெற்றி வீரர்க்கு அழகாமோ? அந்நாள்தொட்டு இந்நாள்வரை அன்னியர் எவர்க்கும் அடிவணங்காத நம் மத்தியபதியின் மீது மோகலாய மன்னவனும் மகா அக்பரென்பான் அளவிறந்த படை கொண்டுவந்து, ஆரமர் புரிகின்றான். அன்னவனைப் புறங்கண்ட பின்பன்றோ இன்ப வாழ்வு என்பதில் இச்சை கொள்ளலாகும்?''

"நங்காய்! மணவாளனா யிருந்து மண்டமர் புரிவதினும், காதலனாய் இருந்து கடும் போர் புரிவான் இவ்

வேமை என என்னுகின்றாய் போலும்! எங்ஙனமாயினும், கடுஞ் சமர் செய்வதில் இவ்வீரன் சிறிதும் சலியான் என்பது திண்ணம்! திண்ணம்!!"

"ஆர்வத்திற்கு ஆளாகி நிற்கும் காளையே! வெற்றி வீரனொருவனே கிருஷ்ணகுமாரியின் மணமாலை பெற்று மகிழலாகும். வீர வாழ்க்கை உன்றனக்கு உரிமையென இக் குமாரிக்குக் கேள்வியுண்டு. ஆயினும், அதனைக் கண்ணாரக் காண வேண்டுமென அடங்கா ஆவல் உளது. அவ் வீர வாழ்க்கையினை மெய்ப்பித்து, எனது அவாவினை ஈடேற்ற இதனைவிட வேறு சமயம் வேண்டுமோ?"

"அணங்கனாய்! நன்று! நன்று! உனது காதலுக்குப் பாத்திரமென அடியேன் மெய்ப்பிக்க வேண்டும்போலும்! இஃது எனது உள்ளத்தை ஊடுருவும் நிபந்தனையன்றோ?"

"சுத்த வீர னொருவனுக்கு அங்ஙன மாகுமோ? ஒருக்காலு மில்லை. வெற்றி வீரனென வீறு பேசுவோன் அங்ஙனங் கருதாது, வீரமே விளைத்து வெற்றி மாலையுடன் மணமாலைதனையும் மகிழ்ந்தேற்க முற்படுவான் அன்றோ?"

"பெண்ணே! பேதுறல் வேண்டாம். உன்றன் மணமாலை பெற்ற மறு கணமே, நீ கோரிய வண்ணம் வீரம் விளைக்கப் பின்வாங்கான் இந்த வாலிபன். மேலும் இராஜ புத்திரன் என்பானுக்கு இயற்கையான வீரவாழ்க்கை இவ்வாலிபன்பால் ஓங்கி நிற்குமென்பது உறுதியேயாம்."

"வீர சிங்கமே! வீண் கலக்கம் கொள்ளற்க. ஏனைய இராஜபுதன நாடுகளனைத்தும் மண்ணையும் பெண்ணையும் அளித்து மகிழ்ந்து நிற்கையில், இம்மத்தியபதி மட்டும் மாண்புடன் ஆண்மைகொண்டிருத்தல் நமது பேரரசுக்கு அழகாமோ என்றே அக்பரென்பான் அடங்காத் தருக்குடன் படைத் தலைமை வகித்துப் பெரும்போர் புரியுஞ் சமயத்து, மணமாலைபால் எவரேனும் மனங்கொள்ள இயலுமோ? அம்மகிபனுக்குத் தக்க மதி புகட்டுவதிலன்றோ நாம் அனைவரும் நாட்டங் கொள்ளுதல் வேண்டும்? சுத்த வீரனென தீரம் பேசும் சூரியமல்ல! இக்குமாரியின் மணமாலைக்கு இலக்காக உனது வ்வாளும் வேலும் அவ் வேற்றரசனது மார்பகலத்தை ஊடுருவிச் செல்லல் வேண்டும்; அல்லது உன்றன் வில்லாண்மை அவ்வேந்தனைப் புறங்

கண்டு பெருமிதங் காட்டல் வேண்டும். இந்த இரண்டில் ஒன்றை உனது தோள்வலியால் தட்டாது சாதிப்பின், கிருஷ்ணகுமாரியின் காதல்கண்டு களிக்கலாகும். இன்றேல் இலவு காத்த கிளிபோல் ஆதல் வேண்டும்!''

## 2. குமாரியின் கோலம்.

இங்ஙனம் அம் மங்கைநல்லாள் மொழிந்தவுடனே சூரியமல்லன் என்பான் சிந்தையும் மதியுங் கலங்கி, வந்த வழியை நோக்கி மறைந்து போனான். கிருஷ்ண குமாரியோ தனது கன்னி மாடம் புகுந்து, "பவானி யம்மையே! இச் சித்தூர்க் கோட்டை முன்னம் அப் பட்டாணிய அல்லாவுதீனது கைதனில் சிக்கிச் சீரழிந்தது போதாதோ? இக்காலை அக்பரின் கையிலுமா பட்டுழல வேண்டும்? இராஜபுத்திர வேந்தரிலே ஏனைய மன்னவரனைவரும் மொகலாய அரசவையில் அலங்காரமாக அமர்ந்திருப்பதை ஒரு பொருட்டாகக் கருதித் தத்தம் மகளிரை மனைவியராகக் கொடுத்து மகிழ்ந்திருப்பினும், தமது மரபின் அருமை பெருமையினை மதித்தறியாது மதிமயங்கிப் போய்விட்டனர். மத்தியபதியோ தனது மரபின் மானமே பெரிதென மதித்து, மாற்றானுக்கு முடிவணங்க மனங்கொள்ளா திருக்கையில், மத்தியபதி மங்கையொருத்தியைக் கைப்பிடிக்க அக்கொற்றவனும் அக்பரால் ஆகுமோ? ஆகாதெனவே அக் காவலன் கண்டுகொண்டு, பழமையும் பெருமையும் பொருந்திய இம் மத்தியபதியைச் சீரழிக்கச் சீறி நிற்கின்றான். ஆயினும், பூப சிம்மனது வழிமுறையில் வந்த சித்தூர் வீரரனைவரும் அவ் வேற்றரசனுக்கு ஆருயிரை வழங்கி, வீர சுவர்க்கம் புகுவரேயன்றி, மகளையும் வழங்கார், மண்ணையும் வழங்கார், முடியும் வணங்கார், அடியும் வணங்கார்; இதனைச் சின்னாளிலே அம் மொகலாயன் மதித்துணராது போகான். மற்றைய இராஜபுதன வேந்தரும் மனம் கன்றி மதிபெறக் கூடும். இந்நிலையிலே சூரியமல்லனும் ஒருவன் மணமாலையை நாடி மனம் மறுகுகின்றான். அம்மை பவானியே! உனது திருவிளையாடல் நன்று! நன்று!! சித்தூர் சீரழிந்த பின்னரே உனது சித்தம் குளிரும் போலும்! எண்ணிறந்த

உயிர்ப் பலிகொள்வதில், உனது சித்தம் திரும்பி விட்டதோ? அங்ஙனமாயின், உன் மனஞ் சலிக்கும்வரையில், சித்தூர் வீரர் சிறிதும் தளராமல் உயிரைப் பலிகொடுக்க உவந்து நிற்பர். அவ் வீரரைப் பின்பற்றி நடக்க நங்கையராம் நாங்களும் காத்து நிற்கின்றோம்," என்று கூறிப் பஞ்சணையில் சாய்ந்து பாவைபோல் ஆயினள்.

இது நிற்க, சூரியமல்லனும் கிருஷ்ணகுமாரியும் உரையாடி நின்றதை யுணர்ந்த ஜகமல்லன் என்னும் தளகர்த்தன், "என்னே! சித்தூர் மகளிரின் துணிபு! சென்ற சில தினங்களில் எண்ணிறந்த வீரரை இழந்து விட்டோமாயினும், கிருஷ்ண குமாரி போன்ற வீர மங்கையர் விளங்கியிருக்கும் வரையில், சித்தூரின் வீரச் சிறப்பு சிறிதும் குன்றாதிருக்கும் என்பது திண்ணம். ஆதலின், முடிவு வரையில் மொய் யமரே புரிய முனைந்து நிற்போம். அப்பால் அம்மையின் அருள் போல் யாவும் நடக்கும்," என்று துணிந்தவனாய், வீரர் குழாங்களைக் கோட்டையின் நாற்புறத்திலும் நன்கு அணிவகுக்கலாயினன்.

## 3. சூரியமல்லன் சூழ்ச்சி

கிருஷ்ண குமாரியின் மீதுள்ள காதல் ஒரு புறமும் அம் மங்கையின் மணமாலையைப் பெற வேண்டுமென்னும் பேராவல் மற்றொரு புறமும் வாட்டா நிற்க, சூரியமல்ல்ன் சிறிது நேரம் ஒன்றும் தோன்றாது திகைத்து நின்று, முடிவில் மாறுவேடந் தாங்கி அக்பரின் பாசறை சேர்ந்தான். வேற்று மனிதனது வரவையும் வடிவையுங் கண்ட மொகலாய வீரர் அவ்வாலிபனை வதைக்கச் சீறி எழுந்தனர். எனினும், அச்சூரிய மல்லனது சொல்லாழத்தைக் கண்டு அவ்வீரரின் சீற்றம் ஒரளவு தணியலாயிற்று. அதன்மேல் அவ்வாலிபனை அக்பரின் அவைக் களத்துக்கு அழைத்துச் சென்றனர். மதிவன்மை மிகவுங் கொண்ட அம் மொகலாயன், "ஈதென்ன விந்தை! சித்தூர் வீரரிலே தேசத்துரோகியாக ஒருவன் இருக்க இயலுமோ? மத்தியபதியின் மண்ணை மிதிக்கும் எவனும் அப்பதியின்பால் பேரன்பும் பரிவும் கொள்ளாதிருக்க இயலாது. எனினும், இவ்வாலிபன் மெய்யாகவே தேசபக்தி

யற்று மாற்றானுக்குப் பேருதவி புரியப் போந்தவனா? இன்றேல், வஞ்சம் விளைத்து வாகைசூட வந்தவனா? இதனைக் கண்டறியவேண்டும்,'' என்று எண்ணங்கொண்டவனாய், அச் சூரியமல்லனுடன் சித்தூர்க் கோட்டை நோக்கிச் செல்லலாயினன். அதுகாலையில் அக்பருடன் அதிக வீரர் செல்லவில்லை. மெய்காப்பாளர் இருவரும் படைத் தலைவர் மூவருமாக ஓர் ஐவரே உடன்போயினர். விற்கிடைதூரம் சித்தூரை அணுகியவுடனே, அக்கோட்டையின் காவலரனைவரும் மதிலுச்சியில் வந்து குழுமினர்; அதுகேட்ட ஜகமல்லனும் அவனது செல்வப் புதல்வியாம் கிருஷ்ண குமாரியும் அவ்வுச்சியின் சாரில் வந்து குறுகி நின்றனர். மொகலாயப் படைகள் திரண்டு வந்து தாக்கத் தொடங்குமுன், உளவு பார்த்துச் செல்லுநிமித்தம் அக்பர் வந்துளானென்பதே இராஜபுத்திரரின் சிந்தனையாயிற்று. அங்ஙன மிருக்கையில், அக்பரென்பான் சூரிய மல்லனை நோக்கி, "வீரனே! உனது வேடமும் வார்த்தையும் ஒருங்கே உண்மையாயின், அதோ மலையுச்சியின் சாரலில் சிறப்புடன் நிற்கும் ஜகமல்லனது சிரம் உனது அம்புக்கோர் இலக்காகுக,'' என்று கூறினன். உடனே சூரிய மல்லன் தனது வில்லை நாணேற்றி, அம்பினை அழகாக அமைத்து, ஜகமல்லனது சிரத்தை நோக்கிக் குறிபார்க்கலாயினன். அதுகண்டு, அக்பரின் அருகே நின்ற ஐவரும், ஒரு கணத்திற்குள் ஒன்னலனது சிரமறுந்து சிதறிப் போம்என்று எண்ணியவராய் இமைகொட்டாது விழித்து நின்றனர். அக்பரும் அங்ஙனமே ஆர்வமுடன் பார்த்து நின்றான். அதுவே சமயமெனக் கண்ட சூரிய மல்லன் இமைப்பொழுதில் வலது பக்கம் திரும்பியதும், அம்பின் அடி தாளமாட்டாமல் அக்பரென்பான் அலறிவீழ்ந்தான்.

அவ்வளவில்,வாலிபவீரன் அந்த ஐவரையும் கொன்று குவித்து, அருகே நின்ற பரியின் மீதேறி, கணப்பொழுதிற்குள் சித்தூர் சேர்ந்தனன். பின்னர், மொகலாயரின் பாசறையிலிருந்து பரிவீரர் விரைந்து வந்து, மூர்ச்சை கொண்டு கிடந்த அக்பரை எடுத்துத் திரும்பிச்சென்றனர். உடனே மருத்துவ வல்லார் தோன்றி, அக்பரின் தோள்புறமிருந்து வெகு தந்திரமாக அம்பைப் பறித்

தெறிந்து புண்ணை ஆற்றினர். பின்னர் ஒரு பட்சம் வரையில் அப்பார்த்திபன் தனது பாசறையை விட்டகல இயலவில்லை. இதற்கிடையில் அந்த இராஜபுத்திரனும் அகமிக மகிழ்ந்தவனுய் அரசகுமாரியை யணுகி, "எனது அன்பே! நீ விரும்பிய வண்ணம் மாற்றரசனது மார்பக லத்தை என்தன் அம்பு அளவு கண்டுவிட்டது. இனி யாவது எனது எண்ணம் நிறைவேருதா?", என்று பேராவலுடன் இரந்து நின்ருன். அதற்கு அப்பெண், "வாலிப! மாற்ருன் மாண்டு போயினனு? அங்ஙன மாயின், உன்னையன்றி ஒருவருக்கும் மாலையிடேன்," என்றனள். சூரியமல்லன், "குமாரியே! இனி, அம்மொக லாயன் உயிர் தரியான், இது திண்ணம்," என்று கூறிய வளவில், சேடியொருத்தி விரைந்துவந்து, 'அம்மணீ! என் செயலாம்? சித்தூரைப் பிடித்த சனியன் தொலையவில்லை. அந்த அக்பரென்பான் உயிர்பெற்று எழுந்து விட்டான் என ஒற்றர் வந்து உரைக்கின்றனர்," என்றியம்பி நின்ற னள். அம்மொழிகேட்ட வீர மைந்தன் மிகவாடி "அந் தோ! கைக்கு எட்டுவதா யிருந்த காதல்கனி கைதவறிய தே! இஃது வினையின் விளைவே யன்றி வேறன்று," என்று அறிவு கலங்கி, அந்தப்புரம் விட்டகன்றனன்.

## 4. கடும் போர் விளைவு

அம்பின் வாய்ப்பட்டும் அதிர்ஷ்ட வசத்தால் ஆருயிர் பெற்றெழுந்த அக்பர் அடங்காக் கோபத்துடன அருஞ்ச மர் புரியக் கருதி அணிவகுத்துக் கிளம்பினன். மொகலாய வீரரும் அங்ஙனமே உருத்தெழுந்து போர்க்களத்தில் புகுந்தனர். எவ்விதமேனும் அக் கோட்டையினை வசம் செய்ய வேண்டுமென அவ்வேந்தன் துணிந்து, போர் நூலில் கண்ட உபாயம் அனைத்தையும் ஒருங்கே கைக் கொள்ளலாயினன். அதன்படி, மதில் புறமொன்றில் சுரங்க வெடிகள் சூழ்ச்சியுடன் அமைக்கப்பட்டன. சிறிது நேரத்திற்கெல்லாம் அக்கோட்டையின் ஒரு பக்கத்திலே பெரும் பிளவொன்று உண்டாகி விட்டது. அப் பிளவி னிடையே கோட்டைக்குள் புகுந்து விட, ஈராயிரம் மொகலாய வீரர் முன்னேறிச் சென்றனர். ஆனுல் சுரங்க

வெடியில் ஒன்றுதான் தீக் கொண்டு கிளம்பிய தென்பதை யும், மற்ருென்று இன்னும் கிளம்பவில்லை யென்பதையும் அவ்வீரர் உணராது போயினர். சிறிது தூரம் அவர்கள் முன்னேறிச் சென்றவுடனே, மற்ருெரு வெடியும் தீக் கொண்டு கிளம்பலாயிற்று; அவ்வளவில் அந்த ஈராயிர வரில் பலர் வெடி முழக்கால் செவிடுபட்டு வேசாறிப் போயினர்; பின்னும் பலரோ வெடியின் வெம்மையினுல் வெந்து சாம்பராயினர்; மற்றுஞ் சிலரோ கால்வேறு கை வேருகிக் கரிந்து போயினர். அங்ஙனம் அவதியுருது பின்னே நின்ற எண்ணுயிரவர் ஏது மறியாது திகைத்து நின்றனர். முடிவிலே முன்வைத்த காலைப் பின் வாங்கு வதா என்னும் மொய்ம்பு தோன்றலாயிற்று. அதன்மேல் அவர்கள் அப்பிளவை நோக்கி முன்னேறக் கருதினுர்கள். ஆனுல் இராஜபுத்திரரோ அம் மொகலாயரை முன்னேற விடவில்லை; சுரங்க வெடியினுல் சோராது எஞ்சியோரை வாள்வீச்சுக்கு இரையாக்கக் கருதி, வெகு வீரமுடன் வாட்போர் புரியத் தலைப்பட்டனர். எண்ணுயிரம் மொக லாய வீரரில் எஞ்சி நின்று உயிர்ப்பிச்சை பெற்ருேர் ஓர் இருநூற்றுவரே ஆவர்.

அது கண்ட அக்பர் அடங்காத்துயர் கொண்டனு யினும், ஆரமரில் தளர்ச்சி காட்டச்சிறிதும் சித்தங்கொள் ளவில்லை. சின்னுள் கழித்து, மீண்டும் அவன் போரில் புகுந்தான். முன்னமேபோல் கோட்டைச் சுவர்களைக் குலைத்துவிடச் சுரங்கவெடிகள் வைக்கப்பட்டன. அச்சம யம் சித்தூர் தளபதி ஜகமல்லனென்பான் தனது அணி வரிசையை அழகாக அமைத்து, அன்னியரின் படைவரி சையை மதித்தறிய, மதிலுச்சி சேர்ந்து மறைவாக நிற்க லாயினன். அஃதுணர்ந்த அக்பர் தனது துப்பாக்கி கொண்டு, அத்தளபதியின் சிரத்தைக் குறி பார்க்க, ஜகமல்லனது உடலம் மதிள் பாறையிலே உருண்டோடி விட்டது. தளராத் தளபதி மரித்துவிட்ட செய்தி கேட்ட வுடனே, சித்தூர் வீரர் சிங்கநாதஞ் செய்து கிளம்பினர். அவ்வளவில் மொகலாய முன்னணிகள் முறிபடலாயின; உடனே அக்பர்சேனை அடியடியாகப் பின்வாங்க, சித்தூர் வீரர் அடியடியாக முன்னேறத் தொடங்கினர். இவ்வீரரை

முன்னின்று நடத்திய தலைவனது திறத்தைக்கண்ட இராஜ புத்திரர் அனைவரும் பழிக்குப் பழியாக மொகலாய தள கர்த்தனை உயிர்வாங்காது திரும்புவதில்லையெனச் சூளுரை பேசி, வாளும் ஈட்டியும் வாங்கி வீசவே, எங்குப் பார்த்தாலும் பிணக்காடே நிரம்பிவிட்டது.

## 5. அக்பரின் வியப்பு

இராஜபுத்திரரின் வீராவேசம் அங்ஙனமிருக்க, அவர் தம் தலைவனது தோற்றத்தைத் தொலைவில் நின்று தேர்ந் துணர்ந்த அக்பர் சக்கரவர்த்தி, "என்னே! இஃது ஆணுருவா? அல்லது பெண்ணுருவா? வீரச் செயலையும் போர்த் திறனையும் உற்று நோக்கின், ஆண்மையே வடிவு கொண்டு நிரம்பிய ஆடவன் என்றே கொள்ளல் வேண்டும்; முகத்தின் விலாசத்தையும் மேனியின் அழகையும் மதித்துப் பார்ப்பின், ஆண்மைக்கோர் இருப்பிடமான பெண்பிறப் பென்றே பகரல் வேண்டும். ஈதொரு புற மிருக்க, இத்தகைய வீரப்படை நமக்கு உளவாயிருப் பின், இத்தேசம் அனைத்தையும் ஒரு குடைக்கீழ் அடி மைப்படுத்தல் ஒரு பொருட்டன்று," என்று வியந்து நின்றனன். அப்பால், அவ்வீரர் சிறிதும் சலியாது முன் னேறி வருவதையும், தனது படை வகுப்பினர் புறங் காட்டிப் பேதுறுவதையுங் கண்டு, பக்கபலந் தேடவேண் டிப் பாசறை திரும்பினன் அக்பர். அவன் ஆணைக் கிணங்கி,மேன்மேலும் மொகலாயப்படை துணைவலிபெற்ற போதிலும் பயன்படவில்லை. இராஜபுத்திர வீரர் அக்பரின் பாசறையை மிகவும் அணுகிவிட்டனர். அவர்கள்முன்னே, ஆணோ பெண்ணோ என அக்பர் ஐயுற்ற அழகிய தலைவன் தீரமுடன் முன்னேறி வருவதைக் கண்டதும், பொறுக் கான மொகலாயப் படைகள் வழிமறிக்கலாயின. அஞ்சா நெஞ்சும் அடங்கா வெகுளியும் கொண்டுநின்ற அவ் வாலி பத் தலைவன் தனது வேல்கம்புகொண்டு அப் படைகளைக் கணப்பொழுதிற்குள் கொன்று குவித்தான். உடனே மொகலாய தளகர்த்தனொருவன் முனைந்துவந்து அவ் வீர புருஷனை எதிர்த்தனன். அவ்வளவில் வாலிபனது கூரிய வேல்கம்பு அம்மொகலாயனது மார்பகலத்தை ஊடுருவிச்

சென்று விட்டது. அதன் மேல், மற்றுமொரு மொகலாய தளகர்த்தன் சினந்துவந்து தாக்கவே, வாலிபனது உடை வாள் அவனையும் விண்ணகம் அனுப்பி, இரத்தக்கறையுடன் மிளிரலாயிற்று. இங்ஙனம் வழிமறிக்க வந்த மாற்ருர் அனைவரையும் மாய்த்தபின்பு, அக்பரின் பாசறை வாயிலை அவ்வாலிபன் குறுகினன். ஆங்கிருந்த காவலாளர் விரைந் தெழுந்து, வாலிபனது பரிமாவின் பாதத்தை வெட்டி வீழ்த்தினர். உடனே, அவன் பொத்தென்று பூமியில் குதித்து, வாளை யுருவி வீசியவளவில், காவலாளரில் பலரும் கழுத்தற்றுக் குப்புற வீழ்ந்தனர். எனினும் எஞ்சி நின்ருேரில் ஒருவன் தனது பட்டாக் கத்திகொண்டு அவ் வாலிபனது தோளிலும் தலையிலும் படுகாயம் உண்டு பண்ணிவிட்டான். வாலிபத் தலைவனுக்குத் துணையாக வந்த அனைவரும் பகைவரால் கொல்லப்பட்டுப் போயினர். எனவே தனது தனித்த நிலையையும் படுகாயத்தையும் பார்த்து, அவ்வாலிபன் சற்றே கலங்கினன் ஆயினும் கருத்தழியவில்லை. பகைவர் வந்து குவிந்து, மீண்டும் மீண்டும் படுகாயப்படுத்தி விடவே, வகையின்றி மூர்ச்சைகொண்டு, அவ்வீர வாலிபன் நிலத்தில் சாய்ந்தான்.

## 6. பெருவீரர் பேச்சு

உடனே அக்பர் அங்குத் தோன்றி, அவ்வீரனது தீரத்தை மெச்சியவனய், மருத்துவரை யழைத்துக் காயமனைத்தையும் கட்டியாற்றும் வண்ணங் கட்டளை யிட்டனன். மருத்துவரின் திறமையினுல், இரண்டொரு தினத்திற்குள் காயமெங்கு முள்ள காயத்தின் கொடுமை தணியலாயிற்று. அஃதறிந்ததும் அவ்வீரனது மஞ்சத்தை யணுகி அக்பர் சக்கரவர்த்தி பேசுவான் :—

“ பெருவீர! எனது உயிரை அந்தகனுலகு அனுப்பி விடக் கருதி, இத்துணை தூரம் அருஞ் சமர் முறுக்கினய்; ஆயினும் அது கைகூடவில்லை. இது கிடக்க, உந்தன் உரத்தையும் திறத்தையுங் கண்டு மெத்தவுங் களித்தேன். நீ வேண்டுவதைத் தட்டாமல் அளிக்க விரும்பியுள்ளேன்.”

வீரன் :—மொகலாய வரசே! பகையினிமித்தம் வாள் தனை யுருவிப் போர்க்களத்தே புகுந்த பின்னர், சுத்த வீர

ராயுள்ளோர் வைரியின் உயிரை வாங்க வேண்டுவரேயன்றி, வேறெதனையும் விரும்பார். நீ கூறிய வண்ணம், பழிக்குப் பழியாக உனது ஆருயிரைக் கவரவே அரும்பாடுபட்டேன்; உனது பாசறையின் வாயிலில் வந்து சேர்ந்த வளவிலே, எனது துணைவ ரனைவரும் பொன்றியிராமல், ஒரு சிலரேனும் உயிர் தரித்திருப்பின், யான் நினது கையில் சிக்கியிரேன் ; எனது நோக்கத்தையும் ஈடேற்றியிருப்பேன்.

அக்பர் :—வாலிப ! இப்போது பகைவனிடம் சிறையாகிக் கிடக்கின்றாய் ! கிடந்தும் அவ்வெண்ணம் உளதோ?

வீரன் :—அரசே ! எனது உடலில் உயிர் நிற்குமளவும் அவ்வெண்ணம் என்னைவிட் டகலாது. எனது தந்தையின் உயிரைக் கவர்ந்து நிற்கும் காவலனை எங்ஙனமாயினும் பழிவாங்காது போயின், இவ்வுடைவாள் தரித்து யாது பயன்? அவ்விதம் பழிவாங்க இயலாது போயின், மீண்டும் போர்பொருது, வீரசுவர்க்கம் புகுவேன்.

அக்பர் :—வீர! விதியின்றி உனது தந்தையைக் கொன்று குவித்தேனே யன்றி வேறன்று. இனி நாம் இருவரும் வேற்றுமை தீர்ந்து நேசமே கொண்டு வாழ்வதற்கு வகையொன் றுளது. அவ் வகையில் உனக்கு விருப்பம் இருப்பின்...............

வீரன் :—பகைதனை முடித்தல் அல்லது வீர சுவர்க்கம் புகுதல் ஆகிய இரண்டி லொன்றை விடுத்து, வேறு எவ் வகையினும் எனக்கு இம்மியளவும் விருப்பமில்லை.

அக்பர் :—வீணே இன்னும் பகையை வளர்த்துக் கொண்டு போவதில் யாது பயன்? இரு பக்கத்திலும் எண்ணிறந்த வீரர் மண்ணைக் கவ்வினர். எஞ்சி யுள்ளோரும் விண்ணேகிவிடல் வேண்டும் என்பது உனது ஆவல் போலும் ! வேண்டாம். யான் சொல்லும்.......................

வீரன்:—இராஜபுத்திரரா யுள்ளோர்—அதிலும் சிறப்பாகச் சித்தூர் வீரர்—பகைவன் உரைக்கும் வகைதனைக் கேட்டு வாழ விரும்புவர் எனக் கனவிலும் நீ கருதவேண்டாம். சாண்பிள்ளை யாயினும் ஓர் ஆண் பிள்ளை உயிருடன் இருக்கும் வரையில், சரணாகதியிலே சித்தங் கொள்ளார் சித்தூர் வீரர். போரை நிறுத்திப் பொறுமையுடன் வாழ மனம் இருப்பின், உனது படைத்தொகையைச் சுருட்டிக்

கொண்டு, பின்வாங்கிப் போவாயாக! அங்ஙனமாயின், ஒருவாறு பகை தீர்ந்ததென எனது துணைவர் சிறிதே ஆறுதல் கொள்வர். ஆனல் யான் மட்டும் பழிக்குப் பழி வாங்க இயலா வண்ணம், பகைவன் புறங்காட்டி விட்டனனே என்று வருந்தி யிருக்க நேரும்.

அக்பர் :—பகைவனது பாசறையில் பட்டுக் கிடக்கும் உனது உயிரை ஒரு நொடிப் பொழுதில் போக்கிவிட என்னல் ஆகுமென்பதை நீ நன்கு அறிவாய். அவ்வாறிருந்தும், நீ வீரமே பேசுகின்ருய்! நல்லது!

வீரன் :—வேந்தே! உயிர் இருக்கும் வரையில் இவ் வீரம் என்னை விட்டு அகலாது. இச்சமயம் எனது உயிரை வெகு இலகுவில் வாங்கிவிட உன்னல் ஆகும். ஆயினும் சுத்த வீரர் அங்ஙனஞ் செய்யச் சிந்தனை கொள்ளார். சிந்தனை கொள்ளின், அது அழகும் அன்று, ஆண்மையும் அன்று. எனது உயிரைக் கவர வருவோரை எனது வாள் கொண்டு முடிவுவரையில் வீசித் தள்ளுவேன் என்பது திண்ணம். யாது நினைத்தாய்? ஐயுறவு உளதேல் பரீட்சை பார்க்கலாம்."

இவ்வாறெல்லாம் அவ்வீரமகன் தீரம் பேசியதைக் கேட்ட அக்பர் சக்கரவர்த்தி அடங்கா வியப்பெய்தி, "வெற்றி வீர! உனது மனநிலையை மதித்தறியவே இத்துணைதூரம் நின்னுடன் உரையாடி நின்றேன். சித்தூர்க் கோட்டையை வசஞ்செய்து கொள்ளாது, வந்த வழியை நோக்கிச் செல்ல ஒருநாளும் உடன்படேன்; நீயும் உனது துணைவரும் பகை முடிக்கவேண்டுமென்றே பரம துணிவு கொண்டு, போர் புரிவதையும் நான் நன்கு உணர்வேன். இனி நாம் இருவரும் வாய்கொண்டு பேசிப் பயனில்லை. வாள்கொண்டு பேசப் போரில் புகுவதே மேலாம்," என்று கூறி, அவ் வாலிபனைத் தக்க காவலுடன் சித்தூருக்கு அனுப்பிவிடச் சித்தங் கொண்டனன். ஈதிங்ஙனமிருக்க;

## 7. பெண்ணின் பெருவீரம்

சித்தூர் வாசிகளோ, "ஐயகோ! அம்மை பவானியின் அருளை இழந்து விட்டோம். இல்லையேல், நமது குலத் தலைவனும் தளகர்த்தனுமான ஜகமல்லன் மாண்

டிருப்பனே? நமது படை வீரரிலும் இருபதினுயிரவர் மரித்துப் போயினரே! எஞ்சி யுள்ள ஐயாயிரவர் யாது செய்வர்? பகைவனே பெருமித வலியுடன் தருக்கி நிற்கின்ருன். அவனைப் பழிக்குப் பழி வாங்கி வருவதாக வீரம்பேசி, ஆணுடை தரித்து, அருங்கலம் பலவுந் தாங்கி, அழகுடன் சென்ற கிருஷ்ண குமாரி தனது துணைவருடன் வின்னேகி விட்டதாகத் தூதுவர் வந்து பேசுகின்றனரே! இனி, யாரைக் கொண்டு கோட்டையினைக் காக்க முயலுவோம்? ஏகலிங்க மூர்த்தியே! உனது இன்னருள் நன்று! நன்று! அம்மை பவானியே! உனது பேரருளும் பறந்து விட்டதோ? இனி என்செய்வோம்!'' என்றேங்கி நின்ற சமயத்திலே, அவ்வாலிப வீரன் சித்தூர் சேர்ந்தான். உடனே அனைவரும் ஆணுடையி லிருந்த கிருஷ்ண குமாரியைக் கண்டு, இனி நமது கவலை ஒருவாறு அகன்றதென உள்ளங் குளிர்ந்து உவகை பூத்தனர்.

பகைவன் கையில் பட்ட படுகாயத்தின் அதிர்ச்சியினுல், இரண்டொரு நாள்காறும் கிருஷ்ணகுமாரி படுத்த படுக்கையி லிருக்கும் வண்ணம் நேர்ந்தது. அப்பால் அவள் முன்னமேபோல் போருக்கு எழுந்தனள். படைவீரரும் பாங்குடன் எழுந்து சிங்கம்போல் சீறிப் போர்க்களத்தே புகுந்தனர். உடனே இரு பக்கத்து வீரருக்கும் கைகலந்த சண்டை நடக்கலாயிற்று. வீர சுவர்க்கம் ஒன்றைத் தவிர வேறு வகையில்லை என்று கண்ட இராஜபுத்திரர் தமது மரபுக்குரிய வீரங்காட்டிச் சமர் செய்தனர். அத்தகைய வீரரின் கையில் சிக்கி, அக்பரின் படைகள் பட்ட பாடு பேசுந்தரமன்று. சுருங்கச்சொல்லின், மொய்ம்புடன் வந்த ஈராயிரம் மொகலாயரில் இருநூறு பெயரே உயிர்தப்பி யோடினர். குமாரியுடன் துணையாக வந்து ஐந்நூறு இராஜபுத்திரரில் நானூருக்கு மேற்பட்ட வீரர் நாசமாகி விட்டபோதிலும், எஞ்சிநின்ற வீரர் எள்ளளவும் தளராமல் சமர் முருக்கியதனுல் மொகலாயரின் கதி அதோ கதியாகிவிட்டது. அது கண்ட அக்பர் 'இப்பெரு வீரரின் திறத்தை என்னென்று இயம்புவது! நம்மைப்போல் தக்க படைவலி பெற்றிருப்பின்,இவர்களின் முன்னே நாம் தலை நீட்டி யிருக்க இயலாது. இத்தகையோரை இச்சகமாக

வசஞ்செய்ய முயன்றும் பலிக்கவில்லை. இனி, போரை நெடுநாள் வளர்த்துப் பயன் யாது? ஆகலின் விரைவிலே முடிவு கண்டுவிடவேண்டும்,'' என்று துணிவுகொண்டான்.

## 8. கவசம் காத்தல்

உடனே மோகலாயப் படைகள் திரண்டெழுந்தன. பதினாயிரம் வீரர் ஒன்று கூடி அச்சித்தூர்க் கோட்டையை நான்கு பக்கத்திலும் தகர்க்கத் தொடங்கினர். ஒரு வார காலம் மொகலாயச் சேனை அவ் வேலையிலேயே முனைந்து நின்றது; அதனால் முடிவிலே கோட்டையும் கலகலத்துப் போய்விட்டது. அவ்வளவில் கிருஷ்ணகுமாரி கோட்டைக் கதவுகளைத் திறந்துபோட்டு, ஓராயிரம் இராஜபுத்திரரை ஒன்னலரின் மீது ஏவினள். வீரரும் வீரசுவாக்கம் கிட்டிய தென்று பகைவரின் மத்தியில் பாய்ந்தனர். உடனே பட்டாக் கத்திகள் பளபளவென மின்னலாயின. வீரரின் சிங்கநாதமோ எதிரொலியையும் எழுப்பிச் செவிடுண்டாக்கிற்று. உயிரை ஒருங்கேவழங்க வந்திருக்கும் உத்தமவீரர் ஒருவரையும் விடாது கொன்று குவிப்பரென மொகலாயர் மதிகலங்க லாயினர். பலசொல்லிப் பயனென்ன? சித்தூர் வீரர் சென்றவிடமெல்லாம், சிரங்கள் வுறுந்து விழலாயின. ஒவ்வொரு இராஜபுத்திரரும் பதின்மர், இருபதின்மராக மொகலாயரை வெட்டிவீழ்த்தினர். மதின்மடங்கு ஆள்வலி பெற்றிருந்தும், அக்பரின் சேனை அவர்களுக்கு ஈடுகொடுக்க முடியவில்லை. பற்பல போர்க்களங்களில் பட்டுழன்று பண்பட்ட வீர அக்பரும் பதறிப் போயினன். ஆயினும் தனது படை வகுப்பை உற்சாகப் படுத்த வேண்டித் தானும் ஒரு படை வீரனாக நின்றுசமர் செய்ய அக்பர் தவறவில்லை. அக்பரையே இலக்காகநோக்கி வந்த கிருஷ்ணகுமாரி தனது ஆண்வேடத்திலிருந்த வண்ணம் இருமுறை தனது வாள்கொண்டு அவ்வேந்தனைப் படுகாயப்படுத்தினள். ஆனால் அவ்வரசன் அணிந்திருந்த இருப்புக் கவசம் அவன் உயிருக்கு ஓர் அரணாக நின்றது.

முடிவில் ஆயிரம் இராஜபுத்திர வீரரில் ஓர் இருபதின்மரே உயிர்தாங்கி நிற்பதைக் கண்ட குமாரி, தந்திரமாகப் பின்வாங்கிக் கடைநாளின் முடிவக் காணப்புறப்பட்டாள்.

## 9. வீர சுவர்க்கம்

சூரியமல்லன் அடங்காத் துயருடன் அம்மங்கையின் எதிரே தோன்றி நின்றான். கிருஷ்ண குமாரியோ சுளித்த முகத்தினளாய், அச் சூரியமல்லனை ஏறிட்டுப் பாராது செல்லவே, "நங்காய்! வெறுப்பேன்? காமங் கொண்டு காணவந்தே னில்லை. நீ சொல்லிய வண்ணம் அக் பரின் ஆருயிரை வாங்காது போயினும், கடை நாளிலே உன்னுடன் கூடவிருந்து, ஒருங்கே வீரசுவர்க்கம் செல்ல விரும்பி யுள்ளேன்," என்று இரங்கிக் கூறினன் சூரியமல்லன். அங்ஙனமாயின் உடன்வர அனுமதிதான்," என்று குளிர்ந்த முகத்துடன் கூறினள் அக் கிருஷ்ண குமாரி.

பின்னர் அவ்விரு துணைவரும் எஞ்சி நின்ற வீரருடன் கோட்டைவாயிலைக் குறுகினர். இதற்குள் மொகலாயச் சேனை அவ்வாயிலைக் கடந்து, நகரினுள்ளே தலைகாட்ட முயன்று நின்றது. அவ்வளவில் சித்தூர் வீரர் சீற்றமே கொண்டு, அம்முகம்மதிய வீரர் ஒவ்வொருவரையும் வாளுக்கு இரையாக்கத் தொடங்கினர். கோர யுத்தம் நிகழ்வதைக் கேள்வியுற்ற மொகலாய மன்னவன் ஆண் வடிவந் தாங்கி நிற்கும் அக்குமாரியை எங்ஙனமே னும் சிறைசெய்துவிட விரும்பி முனைந்துநின்றான். மொக லாய வீரரும் அக்குமாரியைக் கைப்பற்றக் கடும் போர் புரிந்து பார்த்தனர். உடலெங்கும் காய முண்டு, உதிரம் ஒழுகி யோடினும், ஒருவரையும் அருகே அண்ட விடாது, உக்கிரமாக நின்ற குமாரியைச் சிறை செய்ய இயலவில்லை. முடிவில் அம்மங்கையை மாய்த்து விடு வதே மேலாகுமென மொகலாய னொருவன் முனைந்து வந்து, அவளது கழுத்தைக் குறிபார்த்து வாளை வீசினன். கண்ணிமைப் பொழுதிற்குள் அம்மொகலாயனே குமாரி யின் வாள் வீச்சால் வெட்டுண்டு வீழ்ந்தான்; இனி எத் துணை நேரம் ஒரு சிலர் பெரும்படை யொன்றை எதிர்த்து நிற்கக் கூடும்? கையுங் கருத்துஞ் சலிக்கும் வரையில் பகை வரைச் சாய்த்து வந்து, முடிவிலே அவ்விரு துணைவரும் வீரசுவர்க்கம் புகுந்து களிக்கலாயினர். வீரம் வாழ்க!

---

இரண்டாம் பதிப்பு, ஐயாயிரம் பிரதிகள்; 9—2—'32.

Kesari Printing Works, Madras.

ஸ்ரீ சாரதா சதங்கை, மணி - 3

கல்வி இம்மை பயக்கும்! நம்மை விளக்கும்!!

ஸ்ரீ

# சடையப்ப வள்ளல்

அல்லது

# கம்பநாடன் நன்றி



எம். எஸ் சுப்பிரமணிய ஐயர்

விலை அரையணு                    எழுதியது

# தமிழன்பருக்கும் பெரியாருக்கும் வந்தனம் !

---

ஸ்ரீ

## சாரதா சதங்கை மணி.

1. கற்பாசி
   காதலர் பெருமை
2. கிருஷ்ண குமாரி
   வீரமகளின் வெற்றி
3. சடையப்ப வள்ளல்
   கம்பநாடன் நன்றி
4. நீலி பராக்கிரமம்
   சத்திய விஜயம்
5. இன்பரசக் கதைகள்
   அற்புத சம்பவம்
6. மன்மத மஞ்சரி
   ஓதியின் புலம்பல்
7. விகடக் களஞ்சியம்
   நகைச்சுவைச் சரிதம்

எங்கும் ஏஜண்டுகள் தேவை.

நல்ல கமிஷன் உண்டு
உடனே எழுதவும்.

அன்பர்காள் !

நல்லறிவு எல்லாச் சிறப்பும் தரும். அவ்விதம் சிறப்புப் பலபெற்று நமது முன்னோர் விளங்கினர். அன்னவரின் புகழ்ப் பெருமைகளை நம்மவர் நன்கு அறிதல் வேண்டும். ஆதலின், முன்னோரின் மொய் புகழை விளங்கவைக்க, "ஸ்ரீ சாரதா சதங்கை மணி" எனும் நூல் வரிசை தொடங்கியுள்ளோம். அவ் வரிசையில் மூன்றாவதான சடையப்ப வள்ளலின் அருஞ்சரிதம் இது. அனைவரும் வாங்கி வாசிக்கவே, இனிய நடையில் எழுதி அரையணாவுக்கு விற்கின்றோம். வாரம் ஒரு நூல் வெளி வரும். ஒவ்வொரு நூலும் உற்சாகம் ஊட்டி ஊக்கம் அளித்து உயர்வு தரும். அன்பர்களின் ஆதரவும் ஆண்டவன் அருளும் தேவை. இரண்டையும் எதிர் நோக்கி நிற்கும்,

எம். எஸ். சுப்பிரமணிய ஐயர்,
ஆசிரியர்
ஸ்ரீ சாரதா சதங்கை மணி.

மயில்வாகன் கம்பனி,
32, ஐயப்பசெட்டி வீதி, மண்ணடி, மதராஸ்.

கல்வி இம்மை பயக்கும்! நம்மை விளக்கும்!!

ஸ்ரீ

# சடையப்ப வள்ளல்

அல்லது

# கம்பநாடன் நன்றி

## 1. முன்னுரை

கல்வியில் பெரியன், கவிச் சக்கரவர்த்தி என்று கம்பனை அழைப்பர். அப் புலவர் திலகம் பாடிய பாரகாவியம் இராமாயணம் எனப்படும். சொல் சுவையிலும் பொருள் சுவையிலும் அந்நூலுக்கு இணையாக எந்நூலும் இலது, அத்தகைய புலவர் பெருமானையும் பாரகாவியத்தையும் பார் அறியச் செய்த பெருமான் சடையப்ப வள்ளலாம். அச்சடையப்பனே ஆதிமுதல் கடைசி வரையில் கம்பனை ஆதரித்து வந்தவன்: வறுமையால் வாடிய பலருக்குப் பாலும் சோறும் பரிந்து அளித்தவன்; இல்லை என்று இரந்தோர்க்கு இல்லை என்னுமல், இரு நிதியை அள்ளி அள்ளிக் கொடுத்தவன்; ஆனது பற்றியே, இதிகாசங்களில் சிறந்த இராமாயணத்திலே அம் மகாகவியால் மேன்மையாக வாழ்த்தப் பெற்றவன்; இம் மட்டோ அச் செல்வச் சீமானது புகழ்ப் பெருமை?

ஏனைய புலவரும் ஏற்றமுடன் அவனைப் பாடியுள்ளர். மூவேந்தரான சேர சோழ பாண்டியரும் சிறப்புப் பல செய்திருக்கின்றனர்; சிங்களத் தீவின் வேந்தனும் அவ் வள்ளலின்மீது சொல்மாலை சூட்டியுள்ளான்; சடையப்ப வள்ளலின் செல்வச்சிறப்பு சொல்லும் தரமன்று. அன்று களைந்த கழுநீர் ஆயிரம் வேலி பாயும், அன்றுடம் சமை

யலுக்கு ஆனைத்தலை யத்தனை பெருங் காயம் வேண்டும், என்னும் பழமொழிகள் அச் சடையனது பெருவாழ்வைக் கண்டே பிறந்தன போலும்! அச்சிமான் சரிதையை இங்கே ஓரளவு சுருங்கச் சொல்வோம்.

சோழவள நாட்டிலே திருவெண்ணெ நல்லூர் என நல்லூர் ஒன்று உண்டு; தஞ்சை ஜில்லாவிலே கும்பகோணம் தாலுகாவிலே கதிராமங்கலம் என வழங்கும் கதிர்வேள்மங்கலம் என்னும் கிராமத்தின் பக்கத்திலே முன்னம் அந்நல்லூர் நகரம் நின்று நிலவியது. ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னம் விளங்கி நின்ற அந் நகரின் சின்னங்களை இன்றும் அங்கே காணலாம். அப்பக்கத்திலே புதுவை எனவும் பேரூர் ஒன்றுண்டு. அப் புதுவை நகரிலே சங்கரமுதலியார் எனும் செல்வச் சீமானொருவன் ஆயிரம் வருஷங்களுக்கு முன்னர் வாழ்ந்து வந்தான். அச் செல்வச் சீமானே ஓங்கு புகழ்கொண்ட ஒட்டக்கூத்தன் என்னும் புலவர் பெருமானைப் போஷித்து வந்தவன்; ஏனைய பாவலருக்கும்வேண்டுமளவு பரிசளித்து வந்தவன்.

## 2. தர்ம தேவதை

இத்துணை ஏற்றம் வாய்ந்த அம் முதலியாருக்குப் புதல்வர் மூவர் பிறந்தனர், அம் மூவரும் சடையப்பன், சரராமன், இணையாரமார்பன் எனப்படுவர். அம்மைந்தரில் சடையப்பனே சாலச் சிறந்தவன்; காவிரி நதிக்கரையிலே அச்சடையப்பனுக்கு எண்ணிறந்த கிராமங்கள் சொந்தமா யிருந்தன. முன்னாளில் அப்பக்கத்திலே நீர் வளமும் நிலவளமும் மிக அதிகம். இங்ஙனம் இருவகை வளமும் நிரம்பி நிற்கவே, அச் சடையப்பன் குபேரனைப் போல் வாழ்ந்து வந்தான். செல்வச் சீமான்களிடம் தர்ம சிந்தையும் தயாளகுணமும் தலையெடுத்தல் அருமை என்பர். நமது சடையப்பனிடமோ அவ்விரு குணமும் வந்து குடிகொண் டிருந்தன. ஆதலின் அவனது செல்வம் ஊர் நடுவே பழுத்துநின்ற உயர் பழமரம் போல் ஊரார் அனைவருக்கும் மிகுதியும் பயன்பட லாயிற்று.

இப் பாரதபூமியின் தென் திசையிலே இலங்கை என்னும் தீவு ஒன்று உளது. அது சிங்களத் தீவு என்றும்

சொல்லப்பெறும். மேலும், அதற்கு ஈழ நாடு, கண்டி நாடு என்றும் இரு பெயர் உண்டு. அந்நாளிலே பரராஜ சிங்கம் என்னும் பார்த்திப னொருவன் அத்தீவினைப் பரிபாலித்து வந்தான். காலத்தின் கோலத்தினால் அத்தீவிலே கொடிய பஞ்சமொன்று தோன்றிற்று. அதனால் மக்கள் அனைவரும் பசிப்பிணியால் வாடலாயினர்; கால் நடைகளும் தீவனம் இன்றிக் கால்கதி அடையலாயின; அதுகண்ட பரராஜ சிங்கம் பெரிதும் பரிதபித்தான்; என் செய்வது என்று ஏங்கி அழுதான், முடிவிலே, சடையப்ப வள்ளலின் செல்வ நிலையைக் கேள்வியுற்று,

"சடையன் என்னும் வடிவந்தாங்கி வந்துள்ள தர்ம தேவதையே! சோழ மண்டலத்திலே இரவு பகலானால் என்ன? பகல் இரவானால் என்ன? எழுகடலும் கரை புரண்டாலும் என்ன? அல்லது வற்றிவறண்டு போனாலும் என்ன? மன்னவர் முறை தவறினும் என்ன? இன்றேல் மரித்துப்போயினும் என்ன? சங்கரன் மைந்தனும் சடையப்பன் வாழ்ந்திருக்க, அச் சோழ மண்டலம் வாழ்வு குன்றாது விளங்கி நிற்கும்! ஈழ மண்டலமோ இச்சமயம் பஞ்சத்தால் பிடிசோறும் கிடைக்காமல் வாடி வதங்குகின்றது. என்ன செய்வேன்! அத் தருமதேவதை இத் தென்திசை நோக்கித் தயவு கூராதோ?,"

என்னும் கருத்தடங்கிய பாமாலை தொடுத்துத் தூது விடுத்தான். அது கண்டதும், அக் கருணைவள்ளல் ஆயிரம் கப்பல் கப்பல் நிரம்பக் கதிர்நெல் கொண்டு சென்று, மக்களின் பசிப்பிணியைப் போக்கினான்; பஞ்சத்தையும் பறக்கடித்தான். அவ்வளவில் சிங்களத் தீவின் வேந்தனும் வாசிகளும் ஆறுதலடைந்தனர்; ஆனந்தங் கொண்டனர்! வள்ளலை வாயார வாழ்த்தினார்; மனமாரப் புகழ்ந்தனர்;

## 3. பொன்மாரி

ஒரு சமயம் பாவலர் பலர் பரிசு பெற விரும்பி, அவ் வள்ளலின் மாளிகை சேர்ந்தனர். அப்போது ஆயிரக் கணக்கான மாட்டு வண்டிகளிலே நெல் மூட்டைகள் வந்திறங்கின. காத்திருந்த ஏவலாளர் விரைந்து வந்து, அம் மூட்டைகளைக் களஞ்சியம் சேர்த்தனர். மூட்டைகளைத்

தூக்கிச் செல்லுகையில், நெல் மணிகள் நிலத்தே சிதறி விழ்தலுண்டு. அங்ஙனமே தானிய மணிகள் தரையிலே வீழ்ந்து கிடக்கலாயின. அது கண்ட சடையப்ப வள்ளல் அம் மணிகளை உடனே பொறுக்கலானான். கவி வாணரோ, "ஈதென்ன விந்தை! பெருங்காணி வளமுடைய இப்பெருமான் நெல் மணிகளைப் பொறுக்கி நிற்கின்றான்! இன்னான் நமக்கு எத்துணை நவநிதி தரக்கூடும்?" என்று கருத்தழிவு கொண்டனர். அதனைக் குறிப்பால் உணர்ந்து கொண்ட சடையன் அச்சமயம் வாய்திறக்கவில்லை.

சிறிது நேரம் சென்றபின், புலவர் அனைவரும் விருந்துண்ணஅழைக்கப்பட்டனர். தக்க பரிசு இல்லாது போயினும், நல்ல உணவேனும் கொள்வோம் என அனைவரும் போஜன சாலைக்குள் புகுந்தனர். அவ்வளவில், பரிகலங்களிலே பொன்னுலமுதும் பொரிக்கறியும் பரிமாறப்பெற்றன. அப் பொன்னமுதும் பொரிக்கறியும் புசிப்பது எங்ஙனம்? கவிவாணர் அனைவரும் கலக்க முற்று வாளாவிருந்தனர். வள்ளலோ பரிசாரகனை நோக்கினான்; நோக்கிய வளவில், அவன் அந்த அமுதையும் கறியையும் வாரிச் சென்று, கூசாமல் குப்பையிலே வீசி யெறிந்தனன்.

பின்னர், அனைவருக்கும் அறுசுவையும் கலந்த நல் உணவு படைக்கப்பட்டது. அப்பாவலர் வயிறாரப் புசித்ததும், வாய்பூசிக் கைகழுவ வெளியே வந்தனர். அப்போது குப்பையிலே பள பள என்று பொன் குவியலும் மணிக் குவியலும் தென்படலாயின. அவ்வளவுதான் தாமதம். அவர்கள், 'எனக்கு உனக்கு' என்று கூவிக் கலாம் விளைத்தனர். அது கண்ட சடையன், "புலவர்காள்! எச்சில் குப்பையை நச்சி ஏன் வாதாடுகின்றீர்கள்?" என்றுரைத்துப் பாவலரின் ஆவல் தீரப் பொன்மாரி பொழிந்து அனுப்பினான். கவிராயர்களும் அகமிக மகிழ்ந்து, அவ்வள்ளலை வாழ்த்திச் சென்றார்கள்.

## 4. ஆயிரம் பொன்

அவ்வள்ளல் சில காலம் சோழ ராஜனிடம் அமைச்சுத்தொழில் புரிந்து வந்தான். ஒருநாள் அவ் வேந்தன் ஆள்விடுத்தும், சடையப்பன் யாது காரணமோ அரசவைக்

குச் செல்லவில்லை. சோழனோ "நல்லது; செல்வச்செருக்கினால் அல்லவா அவன் வாராதிருந்தான்," என்றுன்னி, அடங்காக் கோபம் கொண்டனன். அது காரணமாக அவன் செல்வம் அனைத்தையும் சோழன் கொள்ளை கொண்டான். அவ்விதம் அவ்வள்ளல் தனது பொருளைப் பறிகொடுத்து நிற்கையில், சீன தேச வணிகனொருவன் விலையுயர்ந்த பட்டாடை கொண்டு, சோழ வேந்தனது கொலுக்கூடங் குறுகினன் விலை வேண்டி.

அந்த ஆடையின் வேலைப்பாடு மிக நேர்த்தியாகும். மேலும், அதன் இழை யொன்று, ஆயிரம் பொன் பெறும். "ஈதென்ன கட்டுக்கதை! இழையொன்று ஆயிரம் பொன் பெறும் பட்டாடையும் உண்டோ?," என்று சிலர் சந்தேகங் கொள்ளலாம். இப்போதும் வேலைத்திறனைக் கண்டு வியக்கும் பொழுது, "ஈதென்ன சினத்து வேலையோ, விந்தையோ?" என்று சொல்லுவது உண்டு. மேலும், பாலாவியும் பாம்புரியும் போன்ற மெல்லிய சல்லாப்புடவைகள் அந்நாளிலே பிரபலமாயிருந்தன. மணியும் பொன்னும் மலைபோல் குவிந்து கிடந்த காலத்திலே மன்னவரும் சீமான்களும் விலைமதிக்க முடியாத பூம்பருத்தி ஆடையும் பீதாம்பரமும் பூண்டிருந்தனர்.

நேர்த்தி மிகக்கொண்ட அந்நல்லாடையைச் சோழ வேந்தன் வாங்கிக்கொள்ள வில்லை; வந்த வணிகனையோ அந்த வள்ளலிடம் அவன் திருப்பி விட்டான். அவ்வாறே வர்த்தகன், வள்ளலை யடைந்து, "விலையேறப்பெற்ற இவ் ஆடையினை வாங்குவார் இல்லையோ?," என்று கூறிக் கலங்கி நின்றான். அவ்வளவில், வணிகனுக்கு ஆறுதல் கூறி, மிக்க பொருள் கொடுத்து வாங்கிக்கொண்டான் அவ்வள்ளல். தன்னிடமிருந்த பொருளனைத்தையும் சோழனிடம் பறிகொடுத்ததொன்று, கிடைக்கக் கூடிய நிதியனைத்தையும் சீநதேச வணிகனுக்கு அளித்து விலையேறப் பெற்ற பட்டாடை வாங்கியதொன்று, ஆகிய இரு வகையாலும் சடையப்பன் சிலநாள் பொருள் வறண்டு இலையுதிர்ந்த மரம்போல் நின்றான். காலத்தின் கோலத்தைத் தடுக்கக் கடவுளாலும் ஆகாது அன்றோ?

## 5. நாகமணி

அஃதறிந்த சோழவரசனே வறுமை வேளையில் அச் சடையனைச் சோதிக்க வேண்டும் என விருப்பம் கொண்டனன். அவ்வாறே பல வித்துவான்களை அவன் வரவழைத்து, அச் சடையவள்ளல் பால் ஏவினன். சடையனே வந்த புலவர்களை அன்புகொண்டு வரவேற்று விருந்தளித்துக் களிப்பித்தான். ஆயினும் பாவலருக்குப் பரிசளிக்க அவனிடம் பொருளில்லை; பிறரிடம் கடன் வாங்கவும் மனம் வரவில்லை. என்ன செய்வான் சடையன்? வந்த புலவரை வறிதே அனுப்பிவிட ஒருப்படுவனே? சாதலின் இன்னாதது இல்லை; ஆயினும் இல்லையென்று வந்தோர்க்கு ஈய வகை யில்லையேல், அந்நிலையில் சாதலே மிக இனிதாகும் என்று திருவள்ளுவர் கூறியுள்ளார்.

அங்ஙனம் கலங்கி நின்ற வள்ளல் தனது மாளிகையின் கடைப்புறம் சென்று, ஆங்கிருந்த பாம்புப் புற்றில் கையிட்டான் கலக்கமின்றி. புற்றிலிருந்த படவரவோ, "இஃது கொடையில் சிறந்த கைத்தலம் அன்றோ?" என்று கருதி, நாகமணி யொன்றைக் கக்கிச் சென்றது. அது கண்ட வள்ளல் களிகூர்ந்து, அதனைப் புலவர்க்கு ஈந்து பரிபவம் அகன்றான். நாகமணி பெற்ற நல்கவிஞரோ சோழனிடஞ் சென்று, நடந்ததை நவின்றனர். அதன் மேல், அவ்வேந்தனது ஆணைக் கிணங்கி அப்புற்றிலே மீண்டும் அவ்வள்ளல் கையிட்டு ஜீவரத்தினம் பெற்றதாகச் சிலர் சொல்வர். இக்கதையினைக் காளத்தியப்ப முதலியார் மீதேற்றித் தனிப்பாடலில் கூறப்பட்டுள்ளது.

அப்பால் சடையப்பன் அரசன் சமுகம் செல்லவே, "முன்னம் அழைத்த காலத்தில் வாராதிருந்த காரணம் யாது?" என்று அவ்வேந்தன் வினவினன். உடனே, சடையன் தான் தரித்திருந்த விலை மதிப்பற்ற அப்பட்டாடையை ஒரு பொருட்படுத்தாது கிழித்துத் தொடையில் கட்டிக் கொண்டு, சிலந்தியென்று சுட்டிக் காட்டினன். பொருள் அனைத்தும் பறிகொண்டபின்பும் நிலவளத்தினல் சடையனது வள்ளன்மை குறையா திருக்கக் கண்ட அச்சோழவரசனுக்கு நல்லறிவு பிறந்தது.

## 6. கழனிவளம்

வேற்று நாடு சென்று வெகு நிதி திரட்டி வந்த வர்த்தகனொருவன் அவ் வேந்தனது அவைக் களம் குறுகி, "அரசே! விலை மதிப்பற்ற கடல் படு முத்தங்கள் இவை. ஆதலின், இந் நல்முத்துக்கள் வேந்தருக்கே ஏற்றமானவை; முத்தமொன்று மூவாயிரம் பொன் பெறும்," என்று புகழ்ந்து பேசினன். அச்சமயம் அருகே யிருந்த சடையன், "வேந்தே! வியாபாரியின் புகழுரை மெய்யுரையன்று; எங்ஙனமெனில், கடல் படு முத்தினும் கழனி படு முத்தமே ஒளியினும் உயர்வினும் ஒப்பற்றது," என்று உரைத்தான்.

அங்ஙனம் உரைத்ததுடன் அச்சீமான் நின்று விடவில்லை; தனது கழனியிலிருந்து, சில கருப்பங் கழிகள் கொணர்ந்து, அனைவரும் வியக்கும் வண்ணம் அவற்றின் முத்தங்களை எடுத்துக் காட்டினன். அரசவையி லிருந்த அனைவரும் அது கண்டு அதிசய முற்றனர். முத்தம் பிறக்கு மிடங்களிலே முதிய கரும்பும் ஒன்றாகும்.

பின்னொரு நாள் வேறொரு வணிகன் பல்மணமும் மிக நிரம்பிய கலவைச் சாந்து கொணர்ந்து, சோழவரசனிடம் காட்டி விலை பேசலானன். சோழனே, சடையப்பனே இச்செஞ்சாந்தை வாங்கும் சீமான் என்று திருப்பி விட்டான்; சடையன் அங்ஙனமே தக்க விலை கொடுத்து அச்சாந்தை வாங்கிக் கொண்டனன். கொண்டதும், "இத்துணைச் செல்வ மிகுதிக்கும் சிறப்புக்கும் கழனிவளமன்றோ காரணம்? ஆதலின் அக்கழனிக்கே இக்கலவைச்சாந்து உரியதாகும்," என்று கூறி, அதனைக் கழனியில் கொட்டிக் கலக்கிக் களிப்புக் கொண்டான்.

## 7. அளகாபுரி

ஒரு சமயம் பாண்டிய பூபதி, சடையப்பனது செல்வப் பெருக்கைச் சோதிக்கும் கருத்துடையான் போல் மதுரைமா நகரை மிக்க மேன்மையாக அலங்கரித்திருந்தான். அதன் அழகைக் கண்டு களிக்கப் பிற நாட்டு வேந்தரும் பெருமக்களும் வந்து குவிந்தனர். அங்ஙனம் செய்த அலங்கார வனப்பைக் காணச் சென்றவர்களில் கவிச் சக்கரவர்த்தியாங் கம்பனும் ஒருவன்; அப்புலவர் பெருமா

னது கவிநயம், வர்ணனை முதலியவற்றை நன்குணர்ந்த அப் பாண்டியன், "கவியரசே! மதுரைமா நகரின் அலங்காரவனப்பு எங்ஙனமுளது,?" என்று வினவினன். அது கேட்ட கம்பன் அவ்வேந்தனது விம்பு கண்டு, "புவியரசே! எங்கள் திருவெண்ணெய் நல்லூரின் திருவீதி வனப்பைக் கண்கொண்டு களித்தவருக்கு, இம் மாநகரின் அலங்காரம் எம்மாத்திரம்?" என்று இலேசாகப் பேசிவிட்டான்.

பாண்டியனுக்கோ அவ்வுரை கேட்டதும், வெண்ணை நல்லூரின் வனப்பைக் காண வேண்டுமெனப் பேரவா உண்டாயிற்று. அவ்வாறே அவ்வேந்தன் புறப்பட்டு அந் நல்லூர் சேர்ந்தான். அப்போது சடையப்பன், கம்பனுரைத்த வண்ணமே, ஊரை அலங்காரஞ் செய்திருந்தான். வச்சிரத்தால் கால் நாட்டி, வைடூரியப் பந்தலிட்டுப் பச்சைப் பசும் பொன்னால் பாய்வேய்ந்து, நல் முத்தம் நிலாப் பரப்ப, நவமணிகள் கண் சிமிட்ட, வீடுதொறும் வர்ணக் கொடிகள் வரவேற்ப வழுதியர் கோன் பவனிவந்து வியந்து நின்றான் அவ்வனப்பு நோக்கி. அங்ஙனம் பசும் பொன்னும் நவ மணியுங் கொண்டு குலவிய நல்லூரின் கோலத்தைக் கண்ணுற்ற பலரும் "இது அளகா புரியோ? இன்றேல் அமராவதியோ,?" என்று புகழ்ந்து பேசினர். பாண்டியனே முன்னம் உரைத்த வண்ணம் பெருவனப்பைக் கண்டு பரவசங் கொண்டு நின்றனனே யன்றி, வாய்கொண்டு வார்த்தை யெதுவும் விளம்பினானில்லை.

## 8. சரியாசனம்

அங்ஙனம் செல்வப்பெருக்கும் வள்ளல் தன்மையும் சடையப்பனிடம் மிகுந்து நின்றன. ஆனதுபற்றி, நாட்டரசரும் வேற்றரசரும் அச்சடையப்பனைச் சரிசமமாகக் கருதி வந்தனர். அவ்வள்ளலுக்குப் பின் பிறந்தோன் இணையார மார்பன் என முன்பே சொல்லி யுள்ளோம். இணையாரமார்பன் ஒரு சமயம் பாண்டி வளநாடு போயிருந்தான். அப்போது பாண்டியனது அரசவையில் அவனுக்குச் சிறப்புப் பல செய்யப்பெற்றன; அன்றியும் தென்னர்பிரானுடன் அரியாசனத்தே சரிசமமாக வீற்றிருக்கும் பாக்கியமும் அவனுக்குக் கிட்டியது. அதுகண்டு ஆங்

கிருந்த புலவனொருவன் கல்வியில் பெரிய கம்பனைக்குறுகி, "இத்துணைச் சிறப்புடன் அரியணையில் அரசனோடு அரசனாக அமர்ந்திருக்கும் பெருமான் யாவன்?," என்று வினவினன் வியப்பு மேலிட்டு. அதற்குக் கம்பநாட்டாழ்வான் கூறிய பாடல்:—

என்னுடைய தம்பி, சர ராமனுக்கு இளையோன்,
கன்னல் மதயானைச் சங்கரன் மகன்,—முன்னம்
கணையாழி முத்து திர்க்கும் காவிரி சூழ் நாட்டுக்கு
இணையார மார்பன் இவன்.

## 9. திரிகர்த்தராயன்

சோழ வரசனது அசூயையை அகற்றவோ வளர்க்கவோ, அல்லது மூவேந்தரையும் பரவசமாக்கவோ, அறியோம், வெண்ணெ நல்லூர்ச் சடையப்பன் ஒரு சமயம் சேர சோழ பாண்டியரைத் தத்தம் பரிவாரங்களுடன் விருந்துக்கு அழைத்தான். அங்ஙனமே மூவேந்தரும் தம் தம் பரிசனங்களுடன் அந்நல்லூர் நகருக்கு விஜயஞ்செய்தனர். அப்போது சடையப்பனிட்ட விருந்தின் வளத்தைக் கண்டு அதிசயிக்காதார் இல்லை. பின் காலத்திய ஆத்மநாததேசிகர் என்பார் தாம் பாடிய சோழமண்டல சதகத்திலே அவ்விருந்தின் சிறப்பை மிகப் புகழ்ந்து பேசியிருக்கிறார்; மூவேந்தருக்கும் விருந்தளித்ததனுல், திரிகர்த்த ராயன் என்னும் பட்டப்பெயர் சடையப்பனுக்கு வழங்கி வரலாயிற்றென அறியக் கிடக்கின்றது. அவ் விருந்தின் வளமையைக் கண்டே, அன்று களைந்த கழுநீர் ஆயிரம் வேலிபாயும் என்னும் பழமொழி யுதித்தது போலும்!

அளிக்கும் படை மூவேந்தரும் கொண்டாடும் விருந்தால் அதிசயமாய்த்
திளைக்கும் திரிகர்த்த ராயனெனச்செப்பும் வரிசைத்திறம்சேர்ந்தோன்
விளைக்கும் அரிசிமாற்றிய நீர்வெள்ளம் கிழக்கு விளையுமென
வளைக்கும் பெருமைப் புதுவையர்கோன் வளஞ்சேர் சோழமண்டலமே.

என்று அத்தேசிகர் புகழ்ந்து பாடியுள்ளார்.

சடையப்பனது செல்வச் சிறப்பென்ன, வள்ளல் தன் தன்மையென்ன, முதலியவற்றை இத்துணை தூரம் கூறி

வந்தோம். கம்பனையும் அவன் பாடிய பார காவியமாம் இராமாயணத்தையும் பாரறியச் செய்தோன் சடையப்பனே என முன்பே குறிப்பிட்டோம். அதன் விவரத்தை இங்கே சிறிது விரித் துரைப்போம்.

## 10. கம்பர் வரலாறு

பெரியார் பலரும் புகலும் வண்ணம், கம்பன் தனது குழந்தைப் பருவத்திலே மிக்க வறுமையுற்று வருந்தி நின்றான். அவன் தாயும், மைந்தனை எங்ஙனம் வளர்ப்பது என்றே ஏங்கிக் கிடந்தனள். அந்நிலையிலே தாயும் பிள்ளையும் சடையனது ஆதரவுக்கு ஆளாயினர். அப்போது கம்பன், அச்சீமான் புதல்வருக்குச் சுவடி தூக்கும் சிறு தொழிலில் அமர்ந்திருந்தான். நல்வினை வந்து கூடிக்கொள்ளவே, நாமகளின் நல்லருள் அக் கம்பனுக்குக் கிட்டலாயிற்று. கலை மகளின் கடைக்கண் நோக்கம் கிட்டிய வுடனே, கம்பன் கவிபாடத் தொடங்கி விட்டான். அது கண்டு ஊராரும் ஆசிரியரும் ஒருங்கே வியந்து நின்றனர். அச்செய்தி சடையன் காதுக்கு எட்டிற்று. அவ்வளவில் சுவடிதூக்குஞ் சிறு தொழில் கம்பனை விட்டுப் பறந்தோடிற்று.

அன்றுமுதல் சடையன் அவனைத் தன் மூத்த மைந்தனாக மதிக்கலானான். கம்பனது அருள் வாக்கையும் ஆசுகவித் திறத்தையும் கண்டு சடையப்ப வள்ளல் கொண்ட ஆனந்தத்திற்கு ஓர் எல்லை இல்லை. வள்ளலும் அருங்கலை விநோதன், ஆதலின் கம்பனுடனிருந்து, அவனைக் கவிபாடச்சொல்லிக் களிப்பாகக் காலங் கழிக்கலானான். நாளடைவிலே அப்புலவர் பெருமானும் செல்வச் சீமானும் உயிர்த் துணைவர் ஆயினர். சோழனது அரசவைக்குச் சடையன் செல்லும் பொழுதெல்லாம் கம்பனும் உடன் செல்வான். அது காரணமாக வேந்தனுக்கும் வித்துவானுக்கும் நட்பு உண்டாயிற்று. சோழ வேந்தனும் கம்பனது கவித் திறங்கண்டு களிகூர்ந்து பரிசுபல வழங்கினன்.

அங்ஙனம் இருக்குநாளிலே கம்பன் ஒரு சமயம் தொண்டை நாடடைந்தான். ஒரு நாள் அப்புலவன் திருவொற்றியூரிலே சதுரானந பண்டிதன் மடத்தில் தங்கநேர்ந்

தது. அம்மடத்திலே வடிவழகியான வல்லி என்னும் வனிதை யொருத்தி வாழ்ந்து வந்தனள். அவளது பேரழகோ புலவர் பெருமானைக் கவர்ந்து கொண்டது. அவ்விருவரும் காதலன் காதலி ஆயினர்.

## 11. கூரைச் சிறப்பு

தையும்மாசியும் வையகத்து உறங்கு என்பது ஔவையின் அமுதமொழி. வைக்கோலால் கூரைவேய்ந்த அகத்திலேயே வனிதையும் கம்பனும் வதிந்திருந்தனர். நாள் பல செல்லவே கூரையனைத்தும் வாயுவுக்கும் வருணனுக்கும் இரையாகி, வெய்யோன்தன் வாசத்துக்கும் விருப்பமான விடுதியாயிற்று.

அது கண்ட புலவன், வள்ளலுக்கு ஆள் விடுத்தான். உடனே சடையன் தனது காவலரை ஏவ, அவர்கள் விரைந்து சென்று, நெல் கதிராலேயே கூரை வேய்ந்தனர். நாட்டுப்புறங்களிலே வீட்டு வாயில்களில் நெல் கதிர்கள் கட்டித் தொங்கவைப்பதுண்டு; வாயில் படி கடந்து வந்துவிடின், குருவி முதலிய சிறு பறவைகளுக்கும் நல்லுணவு அளிக்க வேண்டும் என்பதே அதன் கருத்தாகும். வல்லியின் வாயில் படியே யன்றி, வீட்டுக்கூரையும் அப்பறவைகளின் உணவுகொண்டு நிரம்பிக்கிடக்க வேண்டுமென அவ்வள்ளல் கருதினனோ? இன்றேல் கம்பனது கவிநயத்தைக் கண்டு களிக்கும் அடையாளமாக, அவ்வீட்டுக் கூரையிலே நெல் அபிஷேகம் பண்ணப் பார்த்தனனோ? யாதோ அறியோம். அது கண்டு கம்பன் களித்தான், அவனுக்கு அருமந்த மைந்தனொருவன் இருந்தான்; அப்புதல்வன் பெயர் அம்பிகாபதி. தந்தையைப்போலவே தனயனும் கலைமகளின் கடாட்சம் வாய்க்கப் பெற்ற நல்கவிஞன்.

## 12 ஏற்ற இடம்

அம்மைந்தனுக்கு மணவினை நிகழ்ந்தது. அப்போது உற்றாரும் உறவினரும் பாவலரும் பிறரும்ஒருங்கே வந்து கூடினர். கவியரசாம் கம்பன் வீட்டில் கலியாணம் என்றால், விருந்தினரின்பெருக்கை விளம்பவும்வேண்டுமோ? சுருங்கச்சொல்லின் எள்ளிடவும் இடமில்லை எனல் வேண்டும்.

உயிர்த் துணைவனும் போஷகனுமான சடையனே அன்று காலந்தாழ்த்தே வந்தான் அக்கலியாணத்திற்கு. எங்கும் ஜனக்கூட்டம் பெருகவே ஒதுங்கி நிற்கவும் இடமில்லை. எனவே ஒரு மூலையில் சாலகத்தின் ஓரத்தில் அவ்வள்ளல் பெருந்தகை ஒதுங்கி நிற்கலானான்.

அந்நிலையினை ஏனையோர் பார்ப்பதற்கு முன், கம்ப நாடனது தர்ம தேவி பார்த்து, "நமது அண்ணன் சடையன் அங்ஙனமா நிற்பது? மணவேதிகைக்கு அருகே அழைத்துவர லாகாதோ,?" என்றனள். அது கேட்ட கம்பன், "பெண்ணே! பேதுறல் வேண்டாம். நமது தமையனை ஏற்ற விடத்தில் ஏற்றமாக வைப்போம். தகுந்த இடம் வேறிருக்க நீ ஏன் திகைக்கவேண்டும்," என்று கூறினன். அது கேட்ட அனைவரும் ஏற்றமான இடம் யாதோ என்று திகைத்து நின்றனர். மணவினை மகிமையாக நிறைவேறியது. அப்பால் கம்பனது அருள் வாக்கிலிருந்து பாரகாவிய மொன்று பிறக்கவேண்டுமென அச்சோழ வரசனும் பிறரும் ஆவல் கொண்டு கிடந்தனர்.

ஆயினும் கம்பன் நாளை நாளையென்று நாளைக் கடத்தி வந்ததாகக் கன்னபரம்பரைச் செய்தி கூறும். முடிவில் சோழவேந்தன், சடையன் முகமாக அப்புலவர் பெருமானை வேண்டிக் கொண்டான்; அவ்வள்ளலும் புலவனை வேண்டிக்கொண்டதாக அறியக்கிடக்கின்றது.

## 13. ஆயிரத்தில் ஒருவன்

உயிர்த்துணைவனது வேண்டுகோளை ஈடேற்றக் கருதிக் கடைசியிலே கம்பநாடன், இராமகதை பாடத்தொடங்கினான். குழந்தைப் பருவம் முதல் தன்னை அன்னையினும் பன்மடங்கு அன்புடன் ஆதரித்து வந்ததும், அப்பால் உயிர்த்துணைவனைக் கொண்டு உதவி புரிந்து வந்ததும் ஒருபுறமிருக்க, பூபாலர் முதலாக வறுமையுறு பாவாணர் ஈறாகப் பல்லோர்தமக்கும் பரிவுடன் பாலும் சோறும் பொன்னும் மணியும் வாரிவாரிக் கொடுத்து வந்த வள்ளலின் தன்மையை உலகறியச்செய்ய வேண்டுமென்று கம்பநாட்டாழ்வான் கருதாமல் இருக்க முடியுமோ?

ஆனது பற்றியே, பரந்தாமனது பெருமையினை விரித்துரைக்கும் பாரகாவியமாம் இராமாயணத்தில் நூற்றுக்கு ஒரு பாடல் வீதம் அவ்வள்ளலைக் குறித்துப் புகழ்ந்து பேசலானான் நம் கம்பன். அவ்விதிகாசத்தின் பாடல்தொகை பதினாயிரத்துக்கு மேற்படும். "நூற்றுக்கு ஒரு பாடல் வீதம் மானிடனைத் துதிசெய்தல் தகுமோ? ஆயிரத்துக்கு ஒரு பாடல் இருந்தால் போதாதோ?" என்று சிலர் வினவியதாகச் சொல்வர் பலர். அது கேட்ட கவிஞர் திலகம், "அங்ஙனமா? அவ்வள்ளலை நூற்றில் ஒரு மனிதனாக யான் மதித்தேன்; ஆயிரத்தில் ஒருவனாக மதிப்பதே மேலாம் என்று காண்கின்றது," என்று பதிலளித்தான். அங்ஙனமே கம்பராமாயணத்தில் சடையப்ப வள்ளல் சாலச் சிறப்பாகப் பேசப் பெற்றிருப்பதைப் பார்க்கலாம். தமிழ் நூல்களிலே தெய்வ கதையாக உள்ளன வற்றில் கம்பராமாயணம் ஒன்றைத்தவிர வேறெதிலும் நரஸ்துதி கிடையாது. அந்நூலினால் அவ்விருவர் பெருமையும் ஒருங்கே விளங்கி வருகின்றது; தமிழ் மொழி உள்ளளவும் சடையப்ப வள்ளலின் புகழுடம்பு பொன்றாது பொலிந்து நிற்குமென்பது திண்ணம். கவிச்சக்கரவர்த்தியாம் கம்பன் தன்னை ஆதரித்து வந்த அண்ணலின் நன்றியை மறவாதிருக்கக் கருதிக் கனியினும் இனிக்கும் பின்வரும் கவிதையினை வரைந்தனுப்பினான்.

**ஆன்பாலும் தேனும் அரம்பை முதல் முக்கனியும்**
**தேன்பாய உண்டு தெவிட்டு மனம்—தீம்பாய்**
**மறக்குமோ? வெண்ணெய்வரு சடையா! கம்பன்**
**இறக்கும் போதேனும் இனி!**

---

மூன்றாம் பதிப்பு, ஐயாயிரம் பிரதிகள்; 9—2—'32.
Kesari Printing Works, Madras.

ஸ்ரீ சாரதா சதங்கை, மணி - 4

கல்வி இம்மை பயக்கும் ! நம்மை விளக்கும் ! !

ஸ்ரீ

# நீலி பராக்கிரமம்

அல்லது

# வேளாளர் தீக்குளித்தல்



எம். எஸ். சுப்பிரமணிய ஐயங்

எழுதியது

விலை அரையணா

உ

## தமிழன்பருக்கும் பெரியாருக்கும் வந்தனம்!

---

ஸ்ரீ

சாரதா சதங்கை மணி.

1. கற்பாசி
   காதலர் பெருமை
2. கிருஷ்ண குமாரி
   வீரமகளின் வெற்றி
3. சடையப்ப வள்ளல்
   கம்பநாடன் நன்றி!
4. நீலி பாரக்கிரமம்
   சத்திய விஜயம்
5. ஊன்பாசக் கதைகள்
   அற்புத சம்பவம்
6. மன்மத மஞ்சரி
   ரதியின் புலம்பல்!
7. விகடக் களஞ்சியம்
   நகைச்சுவைச் சரிதம்

எங்கும் ஏஜண்டுகள் தேவை.

நல்ல கமிஷன் உண்டு
உடனே எழுதவும்.

அன்பர்காள்!

உலகிலே தேசங்கள் பல பழமையும் பெருமையும் வாய்ந்தது நம் பாரத தேசமே. இதற்கு நமது முன்னோரின் மொய்புகழே காரணம். மொய் புகழுக்கு அடிப்படை குணாதிசயமே. குணாதிசயங்களில் சிறந்தது வாய்மையாம். பொய்யா விளக்கேற்றிப் புகழ்பெற்றான் அரிச்சந்திரன். உலகிலே வேறு எத்தேசத்திலும் அரிச்சந்திரன் பிறக்கவில்லை. நமது பூமியிலேயே அப் பெருமான் பிறந்தார். தமிலகத்திலே பழையனூர் வேளாளர் அம் மன்னவனை மிஞ்சிவிட்டனர். அச்சரிதையே இது. சாரதா சதங்கையின் நான்காவது மணியாக வெளி வருகின்றது. முதல்பதிப்புப் பிரதிகள் இரு பதாயிரமும் செலவாகி விட்டன. ஆதலின் இரண்டாம் பதிப்பு வெளியிடலானோம். அன்பரின் ஆதரவும் ஆண்டவன் அருளும் ஓங்கி உயருமாக. வந்தனம்!

எம். எஸ். சுப்பிரமணிய ஐயர்,
ஆசிரியர்
ஸ்ரீ சாரதா சதங்கை மணி.

மயில்வாகன் கம்பனி,
32, ஐயப்பசெட்டி வீதி, மண்ணடி, மதராஸ்.

கல்வி இம்மை பயக்கும்! நம்மை விளக்கும்!!

# பழையனூர் நீலி கதை

அல்லது

# வேளாளர் தீக்குளித்தல்

## 1. முன்னுரை

சத்தியமே சரதம், வாய்மையே விரதம், மெய்யே பூஷணம்! ஆனதுபற்றியே, அரிச்சந்திரன் தன் தேவியை விற்றான்; அரிய மைந்தனை விலைக்கு மாறினான்; தானும் அடிமையாகி மயானங் காத்தான். இஃது முன் யுகத்தில் நடந்த கதை. இக் கலியுகத்திலோ, பழையனூர் வேளாளர் ஓர் எழுபதின்மர் தீயில் குளித்தனர்; தேகம் விடுத்தனர், தேவர் ஆயினர்; தேசும் எய்தினர், அந்த அருங் கதையினை இங்கே சுருங்கச் சொல்வோம்.

முத்தி தரும் நகரங்கள் ஏழாம். அவை, காசி, காஞ்சி, மதுரை, மாயை, அயோத்தி, அவந்தி, துவாரகை எனப் படும். அந்த ஏழினும் சிறந்தது காஞ்சியே. ஏனெனில், சைவர் வைணவர் இருவருக்கும் காஞ்சி பொதுவானது. ஆதியிலே தமிழகம் பலநாடுகளாக வகுக்கப்பட்டிருந்தது. அவை சேர, சோழ, பாண்டிய, தொண்டை, கோங்கு, நாடுகளாம். தொண்டை நாட்டின் தலைநகரம் காஞ்சியே. முன்னாளில் சைவ, வைணவ, புத்த, ஜயின சமயங்களின் தாயகமாய் இருந்தது அக் காஞ்சிமா நகரம். அந்நகரின் பழஞ்சிறப்பை அறிவிக்கும் அறிகுறிகள் இன்றும் அங்கே அனந்தம் உள.

## 2. விதேகன் வாழ்வு

வெகு நாளைக்கு முன்னே அந்நகரில் வேதியனொரு வன் இருந்தான்; அவன் பெயர் விதேகன். அவனுக்கு மனைவியர் இருவர். மூத்தாள் பெயர் நவஞானி. இளையாளிடமே விதேகனுக்கு நேசம் அதிகம். இளையாள் மோகமோ, இமையடி காற்றோ என்பர். மூத்தாளிடம் அவனுக்கு வெறுப்பே மிகுதி. ஒரு நாள் மூத்தாளையும் அவள் மகனையும் விதேகன் கொன்று போட்டான். பெண்கள்பால் பெருமோகம் கொள்ளின் மதி பிறழும் அன்றோ?

நவஞானியின் ஆன்மா சாந்தி அடையாமல், கொதிப்பே கொண்டு நின்றது; பழிக்குப் பழி வாங்கவேண்டும் என்றும் பதறிற்று. அந்நாள் திருவாலங்காட்டிலே புரிசைக் கிழான் எனும் பூசுரன் ஒருவன் இருந்தான். நவஞானி அந் நான்மறையாளனுக்கு மகளாக வந்து பிறந்தாள். குமாரியின் தோற்றம் கண்டு, அவன் அஞ்சி அழிந்தான்; பேயென்று அவளை மதித்தான்; ஆதலின் அவன், அவளை வீட்டைவிட்டு ஓட்டிவிட்டான். "நான் பேய்தான்; பழி வாங்க வந்துள்ளேன்;" என்று சொல்லி அவள் அப்பிரதேசத்திலே இங்கும் அங்கும் திரியலானாள்.

விதேகனோ நாளடைவில் காலகதி ஆயினான். மறு பிறப்பிலே அவன் செட்டிப்பிள்ளையாக வந்து பிறந்தனன். அச்செட்டியின் பெயர் சுதரிசனன். வியாபார நிமித்தம் அவன் ஊர் ஊராகச் செல்வது வழக்கம். ஒரு சமயம் அவன் திருவாலங்காடு சேர்ந்தான்; அங்கே பண்டங்களை விற்றுக்கொண்டு ஊருக்குத் திரும்ப எண்ணினான். அப்போது அந்திப் பொழுது கிட்டிவிட்டது. எனினும் அவன் காஞ்சீபுரம் செல்லப் புறப்பட்டான் கனவேகமாக.

ஊரார், "அப்பனே! இவ்வூரின் அருகே பேயொன்று நடமாடுகின்றது. ஆதலின், இரவு நேரத்திலே நாங்கள் மனையைவிட்டு வெளியே செல்லோம். நீ இன்று இரவு இங்கேயே தங்கியிரு; பொழுது புலர்ந்ததும், சொந்த ஊர் செல்லலாம்," என்று சொல்லினர். விதியின் வலியை யாவரே தடுக்க இயலும்? சுதரிசனச் செட்டி அந் நன்மொழியைச் சட்டைசெய்யவில்லை; பேயாவது, பிசாசா

வது என்று பேசி, பெருமிதத்துடன் அவன் விரைந்து புறப்பட்டான் காஞ்சி மாநகரம் நோக்கி!

## 3. பேய் தோன்றல்

சிறிது தூரம் அவன் சென்றதும், அப்பேய் குறுக்கிட்டது. வடிவைக்கொண்டு, பெண்பால் எனவே அவன் மதித்தான். பேயோ கட்டழகுடன் தோன்றி, அவனை மயக்க முயன்றது. அவன் இணங்கவில்லை. உடனே அவன் மனைவியைப்போல் அப்பேய் வேடங்கொண்டு நின்றது. செட்டி அவ்வுருவம் கண்டதும், உடல் நடுங்கினன், உள்ளம் ஒடுங்கினன்; உடனே விரைந்து ஓடத் தலைப்பட்டான். பேயோ அவனை விடவில்லை; மடியைப் பிடித்துக்கொண்டு

"மணாள! என்னைக் காட்டிலே விட்டேகுதல் தகுமா? நான் என்ன பாவம் செய்தேன்? கொண்ட மனையாளைக் கைவிடுதல் பாபம் அல்லவா? நளனைப்போல் நீயும் மடையனா? பெண் பாவம் பொல்லாது; என்னை நிர்க்கதி யாக்குதல் அடுக்குமோ?" என்று பசப்பிற்று. செட்டி என்ன செய்வான்! ஒன்றும் தோன்றாமல் ஓட்டம் பிடித்தான். பேயும் அவனைத் தொடர்ந்து சென்றது. செல்லுகையில், கள்ளிக் கட்டை ஒன்றைக் கொண்டு, குழந்தை ஒன்று அது செய்து கொண்டது. முன்னே செட்டியும் பின்னே பேயுமாகப் போகா நின்றனர்.

அந்திபடும் பொழுதில் இருவரும் பழையனூர்போய்ச் சேர்ந்தனர். அந்த ஊர், வேளாண் மக்கள் வாழும் விழுமிய தலம். மக்களின் தலைவர், நாட்டாண்மைக்காரர் எனப்படுவர். அன்னார், ஓர் எழுபதின்மர் ஆவர். அவர்கள் வாரந்தோறும் நாடு (கூட்டம்) கூடுவர். கூடும் இடம் அம்பலம் எனப்படும். அந்த அம்பலம் ஊரின் புறத்தே இருக்கும். சுதரிசனச் செட்டியும் பேயும் போய்ச் சேர்ந்த சமயம், அவர்கள் நாடுகூடி யிருந்தார்கள்.

பேயோ செட்டியை இழுத்துக்கொண்டு அம்பலத்தில் புகுந்தது. கண்ணும் கண்ணீருமாக இருந்த காரிகையைக் கண்டு, அம்பலத்தார் அனைவரும் இரக்கம் கொண்டனர்; "ஏன் அம்மா இக்கோலம்? உனக்கு நேர்ந்த கஷ்

டம் யாது? இந்த ஆடவன் தவறி நடந்தானோ? வேறு யாதோ? விரைவில் விளம்புக! ஆறுதல் அளிப்போம், நியாயமும் வழங்குவோம்,'' என்று அம்பலத்தார் பரம கனிவுடன் கூறினர்.

## 4. நீலியின் பசப்பு

உடனே நீலிப்பேய் உரைக்கும்:— "பெருமக்காள்! இவர் என் கணவர். மாலையிட்ட நாள்முதலா என்னை இவர் கவனிப்பது இல்லை. கணிகையின் மோகத்தில் இவர் கட்டுண்டு கிடக்கின்றார்; என்னை அழைத்துவந்து நடுக்காட்டில் விட்டேகப் பார்த்தார்;வெட்டி எறியவும் முயன்றார். பெண்பாலான என்னை இக்கோலம் காணலாமோ? என் வயிற்றுப் பிழைப்பு ஒருபுறம் கிடக்கட்டும். என் வாழ்வு என்னவது? ஆயுள் அளவும் நான் வாழ்வின்றித் திரியவே வேதன் விதித்தானோ? விலைமகள் மோகம் எத்தனை நாள் நிலைக்கும்? கையில் காசு இருக்கும் வரையில்தானே? கையிலே கரும்பு இருக்க, இவர் ஏன் வேம்பு தேடித் திரிகிறார்? கொண்டான் குறிப்பறிந்து நடக்க, நான் தவறவில்லை; என்னைக் கைவிடல் ஆகுமோ? எத்துணையோ மன்றாடிப் பார்த்தேன், மண்டியிட்டும் கேட்டேன். இவர் இணங்கவில்லை; மனமும் திரும்பவில்லை. எனது பச்சைப் பாலனோ கஞ்சி கஞ்சி என்று கத்துகின்றான். அப்பா எங்கே, அப்பா எங்கே, என்று அலறுகின்றான்; என் செய்வேன்?. எனக்கு வாழ்வளித்தல் உங்கள் பொறுப்பு. என்னைக் கவனிப்பார் யாரும் இலர். தாயும் இல்லை, தந்தையும் இல்லை. தன்னந்தனியே நின்று தமியேன் தவிக்கின்றேன்.''

அங்ஙனம் பேய்மகள் பேசி விம்மி விம்மி அழுதனள்; விழுந்தும் புலம்பினள். அம்பலத்தார் அவளைத் தேற்றி, வணிகனை நோக்கி, முகாந்தரம் கேட்டனர். அவனோ, "ஐயன்மீர்! இவள் பேய்மகள்! இவள் வார்த்தை எல்லாம் பொய்க் கூற்று. நடிப்போ பேய்க்கூத்தாம்; வேறில்லை. என் மனைவி காஞ்சியில் இருக்கின்றாள். இஃது சத்தியம், சத்தியம்,'' என்று சாற்றினான். இருவர் வாய்மொழியையும் வேளாளர் காதுகொடுத்துக் கேட்டனர். அவர்களுக்கு உண்மை புலப்படவில்லை! ஒன்றும் தோன்ற

வில்லை. முடிவில் அம்பலத்தார் அங்கீலியை நோக்கி, "நங்காய்! உங்கள் இருவரில் யாவர் சொல்லை நாங்கள் நம்புவது? உனது உரைக்கு அத்தாட்சி உளதோ? உளதாயின் ஒரு முடிவு சொல்லலாம்," என்றனர்.

பேய்மகள் "பெரியோரே! பெண் என்றால் பேயும் இரங்கும். உங்கள் மனம் இரங்கவில்லையோ? இளகவில்லையோ? குதிரை தூக்கிப் போட்டதும் அல்லாமல், குளமும் பறித்தது என்பார்கள். அங்ஙனமே, இவர் என்னைக் கைவிட்டதும் அல்லாமல், என்னைப் பேய் என்றும் கூசாமல் பேசுகின்றார். பொதுமகளின் மயக்கில் ஆழ்ந்து கிடப்போர், அருமை மனைவியைப் பேயென்று மட்டுமா பேசுவர்? பூதம் என்பர், பிடாரி என்பர், பிசாசு என்பர், பட்டப்பகலில் படுகொலை புரியவும் பார்ப்பர். இவர் அங்ஙனமே செய்ய முயன்றாரே; முன் ஜன்மத்தில் நான் என்ன பாவம் செய்தேனோ? யாரை வஞ்சித்தேனோ? இப்பிறப்பில், கொண்ட கணவன் என்னைக் கைவிடுகிறார்; தூற்றுகிறார்; உயிரை வாங்கவும் உன்னுகிறார். நீங்களோ என் வாய்மொழிக்கு அத்தாட்சி கேட்கிறீர்கள். இப்பச்சைப் பாலனை விட வேறு அத்தாட்சி வேண்டுமோ?" என்று சொல்லி, ஒக்கலை விட்டு அக்குழந்தையை இறக்கினள். குழந்தையோ மெள்ள மெள்ளத் தவழ்ந்து சென்று, அப்பா, அப்பா என்று கூவிக்கொண்டு, சுதரிசனச் செட்டியின் இருகால்களையும் கட்டிக் கொண்டு கதறியது.

வணிகன், அது கண்டு திடுக்கிட்டான். பின்பு அம்பலத்தாரை நோக்கி, "சபையோரே! பேயின் சாகஸம் பேசப்போமோ? வரும் வழியிலே கள்ளிக் கட்டை ஒன்றைக்கொண்டு, இக்குழந்தையை ஆக்கினது இப்பேய். அதுவும் வந்து என் காலைக் கட்டிக்கொள்கின்றது. இஃதே முக்காலும் உண்மை. இவள் பேய்மகளே! என் மனைவி அல்லள்," என்று புகன்று நடுங்கினன். செட்டிப்பிள்ளையின் வார்த்தையில் வேளாள மக்களுக்கு நம்பிக்கை பிறக்கவில்லை. பேயின் வாசகமோ மிகப் பொருத்தமாகக் காணப்பட்டது. உடனே அவர்கள் "அப்பனே! இன்றிரவு நீ இப்பெண்ணுடன் தாமதிப்பின், உன் மனக்கசப்பு மாறும், இருவருக்கும் நேசம் பிறக்கும்; மறுதினம் நாம்

பேசிக்கொள்ளலாம்,'' என்று சொன்னார்கள். சுதரிசனன், "அந்தோ! பேயுடனா நான் இன்றிரவு இருத்தல் வேண்டும்? என் உயிரைப் பருகிவிடுமே,'' என்று பதைத்தான்.

அதற்கு அவர்கள், "செட்டியாரே! சிறிதும் அஞ்ச வேண்டாம். இவள் பேயாயின், நாங்கள் பிணை ஆவோம்,'' என்றனர். மீண்டும் அவன் பதை பதைத்து நின்றான். அது கேட்டு "சுதரிசன! உனக்கு ஓர் ஊறும் நேராது. இன்று இரவு இம்மடத்தின் அறையில் நீவிர் இருவரும் தங்கியிரும்; உன் உயிருக்கு ஆபத்து நேரின், எங்கள் எழுபதின்மர் உயிரையும் ஒருங்கே கொடுப்போம்,'' என்று அம்பலத்தார் உரைத்தனர். பின்னர் அவர்களின் ஆணைக்கிணங்க, இருவருக்கும் இன்னடிசில் பரிமாறப் பட்டது. இருவரும் உண்டு ஓர் அறைக்குள் சென்றனர். வேளாளர் அக் கதவை வெளிப்புறம் பூட்டி, சாவியை எடுத்துக்கொண்டு தம் தம் வீடு சேர்ந்தனர் சிறிது ஆறுதலுடன்.

நீலியோ ஆர்வமுடன் வணிகனை உள்ளே இட்டுச் சென்று கதவைத் தாளிட்டுக் கொண்டாள்; பழிவாங்கச் சமயம் வாய்த்தது என்று பெரிதும் களித்தாள்; சுருங்கச் சொல்லின், வணிகனது உயிரைக் கவர்ந்து, குடரைப் பிடுங்கி மாலை போட்டுக்கொண்டு அப்பேய் மறைந்து போயிற்று. மறுதினம் அதிகாலையில் வேளாளர் வந்து, கதவைத் திறந்து பார்த்தனர். வணிகனது சவமே தென்பட்டது. பெண்ணையும் காணோம், குழந்தையையும் காணோம். உடனே எழுபதின்மரும் ஒன்று கூடினர். "நம் வார்த்தையை நம்பி அச்செட்டி மகன் மாண்டு போயினனே,'' என்று கலங்கினர்; பேய்க் கூத்தை அறியாமல், பிறழ்ந்தோமே என்றும் வருந்தினர். முடிவில் சொன்ன சொல் தவறுவண்ணம், தீக்குளித்தல் வேண்டும் என்று அவர்கள் அனைவரும் தீர்மானம் கொண்டார்கள்.

## 5. தீக்குளி

உள்ள விஷயம் ஊரெங்கும் பறந்தது. ஊரார் அனைவரும் ஒருங்கே வந்து அம்பலத்தில் கூடினர்; ஓர் உயிருக்காக எழுபது உயிரைப் பறிகொடுப்பதா என்று புலம்பினர்; அறியாமல் செய்த பிழைக்கு வேறு பரிகாரம் இல்

லையோ, என்று கதறினர். பல சொல்லிப் பயனென்ன? பழைய னூரிலே அம்பலத்துக்கு எதிரில் பிரமாண்டமான அக்கினி குண்டம் வளர்க்கப்பட்டது. எழுபதின்மரில் ஒருவர் நீங்கலாக அனைவரும் அக்குண்டத்தை மும்முறை வலம் வந்தனர்: முன்னவனைத் தொழுதனர்; புறம் தூய்மை நீரால் அமையும், அகத் தூய்மையோ வாய்மை யினால் ஆகும்; வாய்மையைக் காக்கக் கருதியே அரிச்சந் திர மகாராஜன் அந்நாளில் தன் பதியை யிழந்தான், பாலனை யிழந்தான், படைத்த நிதி இழந்தான்; வாய்மை யினால் கிடைக்கும் விழுமிய கதியை இழக்க நேரினும்,கட்டு ரை தவறேன் என்று கௌசிக முனிவருக்குக் கழன்றான். எனவே நாமும் நமது வாய்மையைக் காக்க ஆவி துறத் தல் வேண்டும், வேறு வழியில்லை,'' என்று கூறி, அத் தீயில் குளித்தனர் அகமும் முகமும் ஒருங்கே மலர்ந்து.

அந்த எழுபதின்மரில் ஒருவன் அச்சமயம் ஆங்கில்லை. அவன் தனது கழனிகளை உழச்சென் றிருந்தான். நீலியோ அவன் மனையாளின் உருக்கொண்டது; வயல் சென்று அவ் வேளாளனைக் கண்டது; கண்டு, ஏனையோர் தீக்குளி த்த செய்தியை உரைத்தது; பின்பு, "நீர் மட்டும் உயிர் வாழ விரும்புவீரோ? வேளாண் மகனுக்குக் கொழுவன்றோ சமயத்தில் ஆயுதம் ஆகும்,'' என்று எடுத்துரைத்தது. அங்ஙனம் அப் பேய் புகன்று வாய்மூடு முன்னம், உழு கலப்பையின் கொழுவைக்கொண்டு தன் உயிரை மாய்த் துக்கொண்டான் அக் குலமகன். இதனை,

விழுவேன் எனச் சென்று வீழ்ந்தாரில்
ஓர் மைந்தன் வேறுபட,
உழுவேலியில் சென்று ஒரு நீலி
முன்கை உடையவற்குக்
கொழுவே படைக்கலம் என்று
சொலாமுனம், கூறிய சொல்
வழுவேயெனப் பொன்று வல்லாளனும்
தொண்டை மண்டலமே.

என்று படிக்காசுப்புலவர் புகழ்ந்து பாடி யிருக்கிறார். இனி, அத் தீக்குழியோ பல தினங்கள் வரையில் அவியா

மல் கொழுந்துவிட்டு எரிந்துகொண்டே இருந்தது. அயலகத்தார் அனைவரும் அது கேட்டு வந்து, வியப்பும் துயரும் ஒருங்கே கொண்டு, அக்கினி குண்டத்தை வலம்வந்து வணங்கித் தொழுதனர். தமிழ் வேந்தர் மூவருக்கும் தூதுவர் மூலம் அச் செய்தி எட்டிற்று.

## 6. மூவேந்தர் புகழுரை

சேர, சோழ, பாண்டியரான மூவேந்தரும் பதைத்து வந்து, அக்கினி குண்டத்தைக் கண்டு அதிசயமும் அதிதுயரும் கொண்டு, அதனை மும்முறை வலம்வந்து, மெய்ம் மறந்து, வேளாண் மக்களை வியந்து வாழ்த்தினர்; அப்பால், சற்றே தெளிந்து அவர்கள் பாடிய பாக்கள் இவை:-

யாவரே காராளர்! யாவர் இணை ஆவார்?
நாவலோ! நாவலோ! நாவலோ!—கோவைப்
பொருப்பால் அளந்தார்க்குப் போதுமே உண்மை
நெருப்பால் அமைத்தார்க்கு நேர்! (சேரன்)

எல்லை பலகடந்திட்டு எங்கும் புகழ் பூத்துத்
தொல்லை மனுக்காக்கத் தோன்றிற்றே —கொல்லை
வழியில் ஒரு பேய் நின்று வஞ்சனையால் செய்த
குழியில் எழு செந்தீக் கொழுந்து. (சோழன்)

பிழைத்தாரோ காராளர்! பேய்மகள் சொற்கேட்டுப்
பிழைத்தார்கள் அல்லர், பிழைதீர்த்தார்—பிழைத்
எல்லாரும் காண எரியகத்தே மூழ்கினர் [தார்கள்
எல்லாரும் இன்றும் உளர்! (பாண்டியன்)

இல்லாள் இன்றேல் இல்லறம் இல்லை. இல்லாள் நல்லாளாக இருத்தல்வேண்டும். அவள் நல்லாள் ஆயின், நன்மை பலவும் கிட்டும். ஆனால் தாரமும் குருவும் வாய்த்தல் தலைவிதி என்பர். எனினும், நன்மதியாளனொருவனே தனது இல்லாளை நல்லாளாக ஆக்கி வாழ்தல் கூடும். எத்தகைய புத்திமான் ஆயினும், இரண்டு மனையாளைக் கொள்ளுதல் கூடாது. கொள்ளின், இல்வாழ்க்கை செவ்வனே நடைபெறுதல் அருமையாம். இரண்டு பெண்டாட்டிக்காரன் திண்டாடுவான் என்பது பழமொழி. ஒருத்தியைத் திரு

ப்தி செய்தலே கடினம். இருவரை எங்ஙனம் திருப்தி செய்யமுடியும்? ஸ்ரீ கிருஷ்ணனும் இரு மனைவியரைத் திருப்தி செய்யக் கூடவில்லை. உருக்குமணி, சத்தியபாமை இருவரும் பிரமாதமாகப் பிணங்கி நின்றனர். இஃதே புராணங்களின் போதனை. கடவுள் அம்சமான கண்ணனே கலங்கினன் எனில், மானிடர் எம்மாத்திரம்?

விதேகன் இருமனைவியர் கொண்டான். ஒருத்திமீதே அவன் உயரிய காதல் பூண்டான்; மற்றொருத்தி மீதோ வெறுப்புக் கொண்டான். ஆதலினால் ஒருத்தியை அவன் கொலை புரிய நேர்ந்தது. ஒருத்தியையே மணந்திருப்பின், அந்நிலை நேர்ந்திராது. இனி, விதி வலி யாரை விட்டது? முற்பகல் செய்யின், பிற்பகல் விளையும் என்றாள் ஒளவை. அன்றியும் வினையின் பயனே வேதனிலும் வலிமையுடையது. "பேய் திரிகின்றது, ஆதலின் போகவேண்டாம்," என்று ஊரார் சொல்லினர். அதனை அச் செட்டிமகன் கேட்கவில்லை. மதி தவறி அவன் வழி நடந்தான். நவஞானியின் ஆவேசம் அவனைக் குறுக்கிட்டது. பின்னரே அவன் மதி கொண்டான்; மயக்கமும் எய்தினன். அம்பலத்தாரிடம் அவன் முறையிட்டுக்கொண்டும் பயன் இல்லாது போயிற்று. நீலிப்பேயோ அத்தாட்சி காட்டி வாதாடியது. அம்பலத்தார் அப்பேய்க் கூற்றையே நம்பினர்; செட்டியையும் நீலியையும் ஓர் அறையில் இருக்கச் செய்தனர். அவனது ஊட்டியைத் திருகி, உள்ளங்களித்து அப்பேய் சென்றது. ஊழின் பெருவலி ஒன்று உளதோ?

## 7 உயிர் வழங்கல்

அந்த எழுபது வேளாளர் தமது ஆருயிரைக்கோடுத்து சொன்னசொல்லைக் காத்தனர். அன்னார் முன்சன்மத்தில் அறியாமல் ஒரு பிழைசெய்தனர். ஆனதுபற்றி, மறுபிறப்பில் அன்னவர் அனைவரும் ஆவி இழக்க நேரிட்டது. அறிந்து அறிந்து பாவம் செய்யின், அழுது அழுது அனுபவிக்க நேரும். அறியாமல் பாவம் புரியினும், அனுபவம் தப்பாது. பரீட்சித்து மகாராஜன் எவ்வளவோ முயன்றும், உயிர்தப்ப முடியவில்லை. அரவம் வந்து தீண்டும் என அம்மன்னவன் அஞ்சினன்; கடலின் நடுவே மண்டபம் கட்டி

வாழ்ந்தான். வாழ்ந்தும், வேதியன் தந்த எலுமிச்சங்கனி படவரவாக மாறி அந்த வேந்தன் உயிரை உண்டகன்றது. ஆதலின் தீவினை என்பதைக் கனவிலும் கருதல் ஒன்றுமோ? கருதின், கலங்கித் தவிக்க நேரும்.

இது நிற்க, பழையனூர் வேளாண் மக்களோ சத்தியமே சாதம் என்று தீயில் குளித்தனர். உயிரை அவர்கள் ஒரு பொருட்படுத்தவில்லை; சொன்ன சொல்லையும் வாய்மையையுமே பெரிதாக எண்ணினர்கள். அவர்களின் பூதவுடல் அன்றே அழிந்துபோய் விட்டது. ஆயினும் அன்னவரின் புகழ் உடம்போ அழியவில்லை; இன்றும் நின்று நிலவுகின்றது! ஆயிரம் ஆண்டுகளுக்குமேலாகியும் அவர்களின் புகழ் மங்கவில்லை. பெரியார் பலர் அன்னவரின் குணத்தைப் புகழ்ந்து பேசியுளர், பாமாலையும் தொடுத்துளர். அன்னர் தமக்கு மட்டும் அன்று, தமது வேளாண் குலத்துக்கும் புகழ்தேடி வைத்துப் போயினர்.

பொய்சொன்ன வாய்க்குப் போஜனம் கிட்டாது என்பர். முன்னாளிலே தமிழகத்தில் வாய்மை பரவியிருந்தது; அதனால் நீர்வளமும் நிலவளமும் நிரம்பி நின்றன. பசிப்பிணி என்பது தலைகாட்டவில்லை. மக்கள் அனைவரும் சுகஜீவிகளாக வாழ்ந்துவந்தார்கள். இந்நாளிலோ, சத்தியம் முன்போல் தலைதூக்கி நிற்கவில்லை. அதனால் வறுமையும் பஞ்சமும் வாட்டுகின்றன; விளைவும் குறைந்துளது; வாழ்வில்லாச் சங்கடமும் தோன்றியுளது. பண்ணிய பயிரில் புண்ணியம் தெரியும். இஃது மேலோர் வாக்கு. சத்தியத்தைக் கடைப்பிடித்து ஒழுகுதல் முதலில் கஷ்டமாகத் தோன்றும்; முடிவிலோ பேரின்பம், பெருமகிழ்ச்சி, அரும் புகழ் இவை கிட்டும். கஷ்டத்துக்குப் பின் சுகம் வாய்த்தல் இயற்கை. தாயினும் நல்ல தயை உடையோர் தமது உடலம் அழியினும் உயரிய செய்கை விடார். தமிழகமோ மீண்டும் தலைசிறக்க வேண்டும். இதற்கு மெய்ம்மையே ஆதாரம். ஆதலின் எங்கும் சத்தியம் ஓங்கிப் பரவி உயர்வு அளிக்குமாக!

யாம் மெய்யாக் கண்டவற்றுள் இல்லை, எனைத் தொன்றும்
வாய்மையி னல்ல பிற. (குறள்)

## 8. பாமாலை

நீலியின் வரலாறு மெய்யே ஆம். இதற்குச் சான்றுகள் பல உள. திருஞான சம்பந்த சுவாமிகள் தமது தேவாரத்தில் பின்வருமாறு பாடியுள்ளார்.

வஞ்சம்படுத்து ஒருத்தி வாழ்நாள் கொள்ளும் வகைகேட்டு
அஞ்சும் பழையனூர் ஆலங்காட்டு எம் அடிகளே!

இம்மட்டோ? சேக்கிழார் புராண ஆசிரியர் பெயர் உமாபதி சிவாசாரியர், இவர் தமது நூலில்,

மாறுகொடு பழையனூர் நீலிசெய்த
வஞ்சனையால் வணிகன் உயிர் இழப்பத் தாங்கள்
கூறியசொல் பிழையாது துணிந்து செந்தீக்
குழியில் எழுபதுபேரும் முழுகிக் கங்கை
ஆறணி செஞ்சடைத் திருவாலங்காட்டு அப்பன்
அண்டமுள நிமிர்ந்து ஆடும் அடியின்கீழ் மெய்ப்
பேறுபெறும் வேளாளர் பெருமை எம்மால்
பிரித்து அளவிட்டு இவளவு எனப் பேசலாமோ?

காசினி போற்றும் காரைக்கா லம்மையார் எனும் மாது சிரோமணி மகிழ்ந்து பாடியிருப்பது:—

கொங்கை திரங்கி நரம்பு எழுந்து
குண்டுகண் வெண்பல் குழிவயிற்றுப்
பங்கி சிவந்து இருபற்கள் நீண்டு
பாடுயர் நீள்கணைக்கால் ஓர் பெண்பேய்
தங்கு அலறி உலறு காட்டில்
தாழ்சடை எட்டுந் திசையும் வீசி
அங்கம் குளிர்ந்து அனல் ஆகும் எங்கள்
அப்பன் இடம் திருவாலங்காடே!

பல ஆண்டுகளுக்கு முன்னே சுப்பிரதீபக் கவிராயர் என்பார் ஒருவர் இருந்தார். விறலிவிடுதூது என அவர் ஒரு நூல் பாடியுள்ளார். அந்நூலிலே. பழையனூர் நீலியைக் குறித்து அவர் பாடியிருப்பது:—

நடந்தைக் கேளீர் நடுக்காட்டில் நீலி
தொடர்ந்தாள் ஓர்செட்டி தனைச்சூதாய்-நடந்துஅவன்கைப்

பத்திரத்தால் தப்பிப் பழையனூர் அம்பலத்தில்
மொய்த்திருந்தவேளாளர்முன்சென்றான்,சத்துருப்போல்
ஆலங்காட்டுப்பேய் அதோவருகுது, என்மனையாள்
கோலங்காட்டிப் பகட்டிக்கொண்டு என்றான், நீலி எனும்
கள்ளி முலைப்பாலும் கண்ணீரும் கால்கழுவக்
கள்ளியொன்றைப் பிள்ளையாக் கையேந்தி, மெள்ளவந்து
நாட்டிலே கண்டதுண்டோ? நல்லோரே! என்னை நடுக்
காட்டிலே விட்டார் கணவனார், மீட்டும் அவர்
கிட்டவந்தார், நான்பயந்து கெஞ்சிவந்தேன், வாளுருவி
வெட்டவந்தார், முன்னாள் விதிப்படியோ? முட்டமுட்டப்
பேய்என்றார்என்னை, இந்தப்பிள்ளை கள்ளிக் கொம்பு
தாயென்றார் இல்லை, தமரில்லை-தூயவரே! [என்றார்
பீர்விட்ட வான்முலைக்கீழ்ப்பிள்ளையை விட்டால் அதுதான்
ஆர்கிட்டப் போம் என்று அறியலாம்-பாரும் என
விட்டாள் சபையில், அதுமெள்ளத் தவழ்ந்து மடி
தொட்டேறச் செட்டி துணுக்குற்றான், ஒட்டாரம் [என்
பண்ணுகிறான் செட்டியென்றார் பார்த்தவர்எல்லாம்அவள்
கண்ஆணை, நீலி என்றான் கால்நடுங்கிப்-பெண் அலது
சத்துருப்பேயாகிச் சதிசெய்தால், நாங்கள் உனக்கு
இத்தனைபேரும் பழிகாண் என்றுரைத்துப் - பத்திரத்தை
வாங்கி வணிகனையும் மார்க்கமிட்ட நீலியையும்
பாங்கில் ஒருவீட்டில் படுக்கவைத்துத் தூங்கும் எனப்
பூட்டிக் கதவடைத்துப் போயினார், பேய்மதியோர்
வாட்டமுள்ள நீலி பழி வாச்சுது என்றே-ஊட்டி
பிடித்தாள் வணிகன் பிடரிதனைக் கையால்
ஒடித்தாள், களித்தாள், உதிரம் குடித்தாள், பின்
நீண்டாள், பிளந்து எறிந்தாள், நெஞ்சில் குடர்மாலை
பூண்டாள், எழுந்தாள்,பொருள் வணிகன்-மாண்டதற்பின்
கண்டார் வழக்கை, எந்தக் கற்பனையால் சற்பனைகள்
விண்டாலும் பெண்வார்த்தை மெய்யாம் காண்!

## 9. நீலி பராக்கிரமம்

மாதராரிலே ஒரு சிலர் மாய அழுகை கோள்வர்; திடீ ரென்று கண்ணீரும் வடிப்பர். அத்தகையோரை நோக்கி நீலித்தனம் பண்ணாதே என்பர் நம் பெரியோர். நீலிக்கு

நெற்றியிலே கண்ணீர் என்றும் ஒரு பழமொழி உண்டு. நீலி யென்பாளோ அம்பலத்தாரின் முன்னே மாய அழுகை அழுதாள், கண்ணீர் வடித்தாள், கலங்கியது போல் துடித்தாள்! அதனை அம்பலத்தார் மெய் என்று நம்பி மதிமோசம் போயினர். அன்றுமுதல் நீலித்தனம், நீலி அழுகை எனும் சொல்தொடர்கள் வழங்கலாயின! இனி நாட்டாருக்கு நல்லறிவு புகட்டவேண்டி, நீலி பராக்கிரமம் எனும் நாடகம் ஆடுதலும் உண்டு. சத்தியத்தைப் போதிக்கும் இச் சரிதையை அன்பரின் வேண்டுகோளுக்கு இணங்கி எழுதலானேம். வானம் ஓங்குக! ஞானம் செழிக்க! உலகம் இன்புறுக!

---



---


இரண்டாம் பதிப்பு ஐயாயிரம் பிரதிகள், 22—2—1932.

KESARI PRINTING WORKS, MADRAS.

ஸ்ரீ சாரதா சதங்கை, மணி - 6

கல்வி இம்மை பயக்கும்! நம்மை விளக்கும்!!

ஸ்ரீ

# மன்மத விலாசம்

அல்லது

# பேரின்ப போதம்



எம். எஸ். சுப்பிரமணிய ஐயர்

எழுதியது

விலை அரையணா

உ

# தமிழன்பருக்கும் பெரியாருக்கும் வந்தனம் !

---

கல்வி இம்மை பயக்கும்! நம்மை விளக்கும்!!

ஸ்ரீ

# மன்மத விலாசம்

அல்லது

# பேரின்ப போதம்

## 1. காம ராஜ்யம்

ஸ்ரீ ராம ராஜ்யம் வேண்டும் என்று காந்தி கூறுகிருர். நாளடைவில் சுயராஜ்யம் தருவதாக அதிகார வர்க்கம் பேசுகின்றது. நாகரிக ராஜ்யம் தேடித் தருவோம் என்று கூறிக் கீழ் நாட்டினரை மேனுட்டினர் மயக்கப் பார்க்கின்றனர். உலகை எல்லாம் கட்டியாளவேண்டும் என்று ஒரு சிலர் முயலா நிற்கின்றனர். சுயநிர்ணயமான தனியரசே வேண்டும் என்று சிறு தேசத்தினர் செப்பி நிற்கின்றனர். இத்தகைய பேரவதியிலே நாட்டில் இராமல், கடும்புலி வாழும் காடு சேரலாம் என்று சிலர் வனம் போகின்றனர். "எல்லாரும் மனப்பால் குடித்துக்கொண்டிருங்கள், இணையில்லா என்னரசை, இனிய தன்னரசை, எங்கும் நிலைநாட்டி, சிங்கார மோகச்சேங்கோல் நடத்துவேன்," என்று கொடி போடுகின்றுன் நமது மன்மதராஜன்.

திருவாக்கினுக்கு எதிர்வாக்கு உண்டா என்பர்? அவ்விதமே அநங்க ராஜனது ஆட்சிக்கும் எதிர் ஆட்சி உண்டோ? கடவுளரையும் கதி கலங்கச் செய்தவன் அன்ருே அக் காமராஜன்? அவ்வேந்தன் பெருமையும் படை வன்மையும் பேசப்போமோ? காமவேள் ஏறி அமரும் இரதம் அல்லது தேர், இனிய இளந்தென்றலாம்; அத்தேரின் பரி

களோ பைங்கிளிகள்; முழு மதியே அவனுக்குக் குடை ஆகும்; மாரன் வாங்கி வீசும் வாள் தாழை மடலே; கை தனில் அவன் தரித்திருப்பது கரும்பு வில்; அவ் வில்லின் நாண்கயிறு வண்டினங்களாம்; கன்னல் வில்லை வளைத்துத் தொடுக்கும் அம்புகளோ ஐவகை மலர்கள். அவை அரவிந்தம், அசோகம், முல்லை, நீலம், மாம்பூ என்பனவே. ஐங்கணைக் கிழவனது படைவீடு பூஞ்சோலையாம். பருவ மங்கையரே வேனில் வேந்தனது சேனைகள்; தென்னம் பாளையே அவனது கவரிகள்; இத்தகைய அருஞ்சேனையுடன் பஞ்சபாணன் பவனி வருகையில், ஆர் கடல் எனும் பெரு முரசம் ஒலிக்கும்; குயிலினங்களோ எக்காளம் ஊதும். அப்புறப்பாடு கண்டு, தேவர் சிந்தை திரிவர்; துறவியர் திகைத்து நிற்பர்; மனிதர் மயங்கி மாழ்குவர்; விலங்குகளோ வாடி விழும்; செடி கொடிகளும் துவண்டு போம். சுருங்கச் சொல்லின், ஈரேழு உலகமும் அவனுக்கு அடி பணிந்து அஞ்சலி செய்து காணிக்கை செலுத்தும்! அந்த அனங்க ராஜனது ஆட்சியில் நடக்கும் அற்புதங்களோ பலவாம்.

## 2. மோக சாகரம்

மக்களையும் மன்னவரையும் மங்கச் செய்வது மாதர் மோகமேயாம். தென்னிந்தியாவிலே முன்னம் விஜய நகர ராஜ்யம் சிறந்து நின்றது. ஒரு சமயம் பதுமராய் என்பான் அதன் பார்த்திபனாக விளங்கினன். கானகத்து மதயானை படுகுழியில் பட்டுழலுவதே போல், பதுமராயும் காமக் குழியில் மூழ்கிக் கிடந்தான். அரசு கட்டில் ஏறிய நாள் முதல், பெண்மக்களின் முகத்தைத் தவிர, வேறு முகத்தை அவன் கண்டதில்லை. அந்தப்புரத்தை விட்டு அரைக்கணமேனும் அகலாமலும், மாதரை விட்டுப் பிரியாமலும் அவ்வரசன் காலங்கழித்து வந்தான்.

தளகர்த்தரில் ஒருவனான நரசிம்மன் என்பான் அது கண்டு தன்னரசு கொள்ளக் கருதிக் கிளம்பினன். தூதுவர் விரைந்து வந்து, பதுமராய்க்கு அது செய்தி சொல்லினர். அரசனோ, "அது நடவாத காரியம்," என்று கூறினன். இம்மட்டோ? "எனது இன்ப நுகர்ச்சியை இங்ஙே

ரம் ஏன் கொடுத்தாய்?'' என்றும் அத்தூதுவன் மீது அவன் சீறி விழுந்தான். தளகர்த்தனான நரசிம்மனே, விஜய நகரரைக் குறுகினன் ஒரு பெருஞ் சேனையுடன். உடனே ஒற்றர் வந்து உற்றது முற்றும் அக்கொற்றவனுக்கு உரைத்தனர். அப்போதும் பதுமராய், "அது ஆகாத காரியம்'' என்று கூறி வாளா இருந்தான்.

கோட்டையை இடித்துத் தள்ளி நரசிம்மன் உள்ளே நுழைந்து விட்டான் என்று கேள்வியுற்ற காலையிலும், பதுமராய் பழைய பாடமே படித்தனன். பின்னர் அப்படைத் தலைவன் அரண்மனைக்குள் புகுந்த செய்தி அரசனுக்கு எட்டிற்று. அத் தருணமும் அவன், "அது ஆகாத காரியம்,'' என்றே சொல்லினன். முடிவில் அத் தலைவன் அந்தப்புரத்தில் புகுந்து, சில மாதரை வெட்டி வீழ்த்தினன். அப்போதும், "அது ஆகாத காரியம்,'' என்றான் விஜய நகர வேந்தனும் அப் பதுமராய்.

கடைசியில் நரசிம்மன், அக் கொற்றவனது சயன அறையில் புகுந்து விடுவான் என்று தோன்றிய காலத்தும், பார்த்திபனே, அது ஆகாத காரியம் என்றான். தளகர்த்தன் அச்சயன அறையில் புகுந்து, அரசனது காதல் கிழத்தியைத் தாக்கிய பின்பு, "ஓ! அப்படியா? பகைவன் எங்ஙனம் புகுந்தான்? துருப்புக்கள் என்ன செய்கின்றன?'' என்று ஓலமிட்டான் பதுமராய். முடிவில் அம் முடி மன்னவன் முடியுடன் உயிரும் இழந்தனன்.

## 3. காதல் வெள்ளம்

வங்காளத்திலே தங்கபுரி என்னும் நகரம் தலை சிறந்தது. அப்புரியில் கற்புடைய நங்கைமார் மிக அனந்தம். அவர்களில் ஒருத்தி பெயர் பொன்மகள். அங்கே அழகேசன் எனும் கட்டழகன் ஒருவன் இருந்தான். அவன் ஆடவர் திலகன் ; அருங்கலை விநோதன்; ஆரறிவும் கொண்டவன். அந்த அழகேசனையே கணவனாக அவள் தன் கருத்தில் வரித்துக்கொண்டாள். கண் நிறைந்த காளையையே காதலனாக்க் கொள்ளுதல் காரிகையரின் இயற்கை!

அல்லும் பகலும் அழகேசனையே அப் பொன்மகள் எண்ணிக் கிடந்தாள். இரவு நேரத்தில் அவள் பட்ட பாடு

சொல்லி முடியாது. "என் கண்ணுளா! அடக்கேன் விரகம்; அறியேன் சமயம்; ஆய்ந்து சற்றும் படுக்கேன்; ஒருவரையும் பாரேன்; இரவு பகல் முழுதும் மலரை எடுக்கேன்; அதனை முடிக்கவும் அறியேன்; உம்மையே நினைந்து, வடக்கே வழியையும் பார்த்திருப்பேன்; என் கண் இருண்டதே! என் செய்வேன்!" என்று புலம்புவாள்.

பெருங் காதல் கொண்டோருக்குத் தென்றல் காற்றும், பூரண நிலவும், குயிலின் குரலும், கொடுமை இழைக்கும். ஆதலால், "தென்றல் வராமல் தோப்பிடுவார் இல்லையோ," என்று பொன்மகள் கூவித்துடிப்பாள்; "சுடு மதியைக் காவலில் போடுவார் இல்லையோ," என்று அவள் கதறிப் பதறுவாள்; "காமவேளை அழைக்கும் கருங்குயிலின் வாய்க்கு ஆப்பிடுவார் இல்லையோ," என்று இயம்பி ஏங்குவாள்; "அபயம் என்று சொல்லி, அழகேசனைக் கூப்பிடுவார் இல்லையே," என்று எண்ணி நைவாள்; வண்டுகாள்! நீங்கள் போய் அக்காதலர்க்கு என் குறை சொல்லீரோ?," என்று பேசி விம்முவாள்.

கருத்தில் உள்ள கவலையோ கொடிய மன நோயாக மாறிவிட்டது. மனநோய் மிகுந்து விடவே உடல் நோயும் கூடிக்கொள்ளலாயிற்று. காதல் எனும் விஷம் குடித்தாரைக் காப்பாற்ற வேறு மருந்து ஒன்று உண்டோ? பொன்மகளின் மனநோயை அவள் தாய்தந்தையர் அறியவில்லை; உடல் நோயை மட்டும் அன்னார் உணர்ந்துகொண்டனர். உடனே, பெற்றோர் ஒரு மருத்துவனை வரவழைத்து வினவினர். வந்த வைத்தியன் நாடிப்பரீட்சை பார்த்தான்; இது நாள்பட்ட வியாதி, என்றான்; இலகுவில் தீராது என்றும் சொன்னான்; உடம்பிலிருந்து கொஞ்சம் இரத்தம் எடுத்துப் பரீட்சை பார்த்தால், உண்மை புலப்படும், என்று பகர்ந்தான்.

தந்தை தாயர் அதற்கு விதியின்றி இசைந்தனர். உடனே வைத்தியன் கூரிய சூரிகொண்டு பொன்மகளின் உடலைக் கிறினான். கிறியும் என்ன? ஒரு சொட்டு இரத்தம்கூட வெளி வரவில்லை. அச்சமயம் அருகே இருந்த அழகேசன் உடம்பிலிருந்து இரத்தம் பீறிக்கொண்டு புறப்பட்டது.

வைத்தியரும் பிறரும்அது கண்டு அதிசயித்தனர்; உள்ள விஷயம் ஒன்றும் புலப்படாமல் உள்ளம் திகைத்தனர்.

நமது அன்பிற்கு உரிய ஒருவன் வருந்தினல், நாமும் உடனே வருந்துவோம்; அவன் அடிபட்டால், நாம் ஆத்திரம் அடைவோம்; அடித்தவன்மீது சண்டைக்கும் கிளம்புவோம்; அவன் இறந்துபட்டாலோ, நாமும் துடி துடிப்போம்; மெய் சோர்ந்தும் மாநிலத்தில் சாய்வோம். இது உலகப் பிரசித்தம். காதல் முற்றிவிடின், இரத்தம் வற்றி விடும். மெய்யான காதலியோ தன்னை மறந்து காதலன்மீதே கருத்தைச் செலுத்துவாள்; உண்மைக் காதலனும் அவளையே கருதியவனுய்த் தன்னை மறந்துவிடுவான். மெய்க் காதலின் இலட்சணம் இதுவே. இதனை உணர்ந்த தாய் தந்தையரோ அப் பொன் மகளை உடனே அழகேசனுக்கு மணஞ்செய்து கொடுத்தனர்!

## 4. சோபன முகூர்த்தம்

மச்சம் என்பது ஒரு நாடு. அதனை ஆண்ட அரசரில் பலரும் அறிவாளிகள். அவர்களில் ஒருவன் பெயர் வீரவர்மன். அவன் சகல கலாவல்லவன்; வேத, சாஸ்திரங்களில் மிக்க நம்பிக்கை கொண்டவன். கடிமணம் நடப்பதற்கு முன்பு, சோதிட வல்லாரை அவன் வருவித்தான்; மங்கையரின் ஜாதகங்களை நன்கு ஆராய்ந்து பார்த்தான்; அழகில் சிறந்த அரிவை ஒருத்தியை அவன் மணந்து கொண்டான். அவள் பெயர் திலகவதி.

உத்தம புத்திரன் பிறக்கவேண்டும் என்று அவன் விரும்பினன். சுபமுகூர்த்தம் பார்த்தே சோபனம் செய்ய வேண்டும் என்று பெரியோர் சொல்லினர். நாளும் கோளும் பொருத்தமான நல்முகூர்த்தம் ஒன்றை அவன் ஆராய்ந்தான். ஆறுவருஷம் வரையில் நல்லநாள் அகப்படவில்லை. முடிவில், தேவருக்கும் கிட்டாத கிழமை ஒன்று வாய்த்தது. உடனே அந்த நாளில் சோபனம் செய்ய ஏற்பாடு ஆயிற்று. அதன்படி பள்ளியறைக்குள்ளே நல்ல வேளையில் வீரவர்மன் காலடி வைத்தான்.

இதற்குள் மனையாளோ மலரணையிலே மெய்ம்மறந்து உறங்கிக் கிடந்தனள். பத்தினியின்மீது வீரவர்மன் பெரும்

பாசம் வைத்திருந்தான். ஆதலின் அவளை எழுப்ப அவனுக்கு மனம் வரவில்லை. சிறிதுநேரம் அவன் சும்மா இருந்தான். முகூர்த்தமோ தவறிவிடும்போல் காணப்பட்டது. எனினும் அவளைத் தட்டி எழுப்ப அவன் தயங்கினன். முடிவிலே, உயர்ந்த பன்னீரை எடுத்து, அவள்மீது மிக மெதுவாகத் தெளித்தான் வீரவர்மன். அவளோ, அப்பப்பா என்று புரண்டு கொடுத்தாள்.

பின்பு அவ்வேந்தன் வீணையை எடுத்து மீட்டி இனிய கீதம் பாடினன். அதுகேட்ட அரசி உச் என்று சலித்துக் கொண்டாள். மயில் தோகை விசிறி கொண்டு அவன் வீசிப் பார்த்தான். அதனையும் அவள் தாங்கவில்லை. அப்பால் மெல்லிய மலரின் சிறிய இதழ்களை எடுத்து, ஒன்று ஒன்றுகத் தூவினன். அப் பெண், 'அந்தோ என்மீது பருக்கைக் கற்களை வாரி வீசுவது யார்?'' என்று கூறினள்; உடனே மூர்ச்சையும் கொண்டாள். என்ன செய்வான் வீரவர்மன்? அவன் கள்ளம் கபடு அறியாதவன்.

ஆதலால், "முகூர்த்தம் பறந்து போயினும் போகட்டும், தேவியின் திருமேனி நோகாமல் இருந்தால் போதும்," என்று வீரவர்மன் கருதி வாளா இருந்தான். அப்பால் அருகே இருந்த ஒரு மஞ்சத்தில் அவன் அமர்ந்து, திலகவதியின் தன்மையை நினைந்து நினைந்து வியந்து கிடந்தான். இதற்குள் நடுநிசி ஆகிவிட்டது. அம்மாதோ மெதுவாக எழுந்து நாற்புறமும் நோக்கினள். கணவன் உறங்கிக்கிடப்பதாக அவள் எண்ணிக்கொண்டனள். அவ்வளவு தான் தாமதம். அந்தப்புரத்தின் கதவைத் திறந்து கொண்டு அவள் வெளியே போயினள். அங்கே தயாராக நூலேணி ஒன்று இருந்தது. அது கொண்டு அவள் உப்பரிகையை விட்டு இறங்கினள்,; நகரின் மேல்புறம் இருந்த பாழ்மண்டபம் ஒன்று சேர்ந்தாள்.

அங்கே ஒருவன் வழிமேல் விழிவைத்துக் காத்து நின்றுன். அவனைக் கண்டதும் திலகவதி ஆனந்தம் அடைந்தனள். அங்கே வெளிச்சம் என்பது இல்லை. தரையில் கிடந்த குப்பை செத்தை இவைகளை அவள் வாரிக் குவித்தாள்; தீயும் மூட்டினள். நெருப்போ சடுதியில் பற்றிக்கொள்ளவில்லை. உடனே குமுதவாய் திறந்து

ஊதினள். ஊதவே கரும்புகை கிளம்பியது; அதனால் அவளது மலர்க் கண்கள் இரண்டும் பலங்கின; நீரும் பெருக்கெடுத்தது: முகம் வாடியது. இவற்றை அப்பெண் பொருள் படுத்தவில்லை. தீ மூட்டி வெளிச்சம் உண்டாக்கி பலகார வகைகளை அவனுக்கு ஊட்டி, தெவிட்டாத இன்பம் கொண்டு, மாளிகை திரும்பினள் திலகவதி.

சந்தடி செய்யாமல் அவளைத் தொடர்ந்து சென்ற வீரவர்மன் அனைத்தையும் கண்கொண்டு கண்டான்; கலங்கித் துடித்தான்; கடைசியிலே மனம் தாளாமல் தவ வேடம் பூண்டு கானகம் போயினன்.

## 5. இன்ப ரசம்

காமத்துக்குக் கண்ணில்லை. காதலுக்கும் அப்படித் தான். இதனை விளக்க ஒரு கதை சொல்வோம். மதனபுரி என்று ஒரு நகரம் உண்டு. அங்கே விரகன் எனும் வாலிபன் ஒருவன் இருந்தான். கறுப்பி என்னும் பெண்ணின் மீது அவனுக்கு அடங்கா ஆசை உண்டாயிற்று. ஆயினும், அவளுடன் நேசம் கொள்ளவோ நேரம் கிட்டவில்லை. ஆசையும் பாசமும் அவனை அடிமைகொண்டு விட்டன. காதலோ கரை கடந்து விட்டது. அகலிகையின்மீது தேவேந்திரன் கொண்ட காதலும், ஜானகியின்மீது இராவணன் வைத்த காதலும், விரகன் காதலுக்கு இம்மியும் ஈடு ஆகா என்றே சொல்லவேண்டும்.

விரகனோ கறுப்பியை நினைந்து நினைந்து கலங்கினான்; அவன் உள்ளமோ உடைந்து நைந்து உருகியது; உடம்போ மிகவும் வாடித் துரும்பாகிவிட்டது. மதனபுரியின் மன்னவன் அதனை அறிந்தான்; இரக்கம் மிகுந்தான்; பரிவுகொண்டு அவ்வாலிபனை வரவழைத்தான். உடனே கறுப்பியையும் அக்காவலன் தருவித்தனன்; அவளோ பரம குரூபியாகக் காணப்பட்டனள். கண்டார் அனைவரும், காறி உமியக் கலக்காசு வேண்டுமே, என்று பேசினர். குரூபியைக் கண்டு கொற்றவனுக்கும் அதிசயம் பிறந்தது. பிறக்கவே, கட்டழகியரான பல கன்னியரை அவன் வரவழைத்து, விரகன் முன்னே நிறுத்தி, "இவர்களில் ஒருத்

தியை நீ இப்போதே மணந்துகொண்டு, மகிழ்ச்சி அடைய லாம்,'' என்று பரம கனிவுடன் கூறினன்.

விரகன் அதுகேட்டு விளம்புவான்: "வேந்தே! என் கருத்துக்கு உகந்த காதலி இக் கறுப்பிதான். அரம்பை யும்மேனகையும் இவளுக்கு இணை ஆவரோ? இவள் சின் னஞ் சிறுக்கி! நல்ல சிற்றுடைக்காரி. இவள் கட்டழகும் பொட்டழகும் மார்பழகும் வடிவழகும் கண்ணைக்கவருமே. அன்ன நடையும் மின்ன லிடையும் பின்னல் சடையும் காணின், காமவேளும் கலங்குவன். இக் கறுப்பியின் கால் தூசுக்கும் இந்த அழகியர் ஈடாகார். இவளே என் காமக் கனி! இவளே எனது இன்பரசம்! இக் கண்ணுட்டியைக் காத்திருந்தாலும் கலி தீரும்; இவள் முகம் பார்த்திருந் தாலும் பசி தீரும்; இவள் பக்கத்தில் வீற்றிருந்தாலோ வினை அகலும். இவளை அணையின் சிவயோக ஞானமும் சித்திக்குமே. என் கண்கொண்டு பாருங்கள்; இவள் பேரழ கும் பெரு நலமும் உமக்குப் புலப்படும். இவளைத் தவிர யாரையும் நான் கனவிலும் கருதேன்.''

அரசன் அதுகேட்டு, ஒன்றும் தோன்றுது வியந்து நின்றுன். காமமும் காதலும் அழகு பாரா; அவலட் சணமும் நோக்கா. வேலைப் பழிக்கும் விழி, வில்லைப்பழிக் கும் நுதல் என்று அவயவ அழகை வித்துவான்கள் வர் ணிக்கலாம். விரகருக்கோ தங்களுக்குப் பிடித்ததே பேரழ காம். இதுவே உலக இயற்கை!

## 6. விரக தாபம்

இந் நாளில் விளக்கு ஏற்ற தீக் குச்சு உண்டு. அக் குச்சு தேவை இல்லாமல் எரியும் மின்சார விளக்குகளும் உள; முன் காலத்திலோ, சக்கிமுக்கிக் கல்கொண்டே தீ மூட்டுவர். சிலருடைய வீடுகளில் சகிமுகிக் கல் இராது. அன்னுர் அயல் வீடு சென்று, தீ வாங்கி வருதல் வழக்கம். குக்கிராமங்களில் இன்றும் அவ்வழக்கம் உண்டு.

பாண்டி நாட்டிலே சாத்தான்குளம் எனும் கிராமம் ஒன்று உளது. அங்கே இராமாயி என்னும் ஒரு பெண் இருந்தனள். எதிர் வீட்டு மைந்தன் சாத்தனிடம் அவ ளுக்கு அன்பு உதித்தது. அந்த அன்போ அறுகுபோல்

வேரோடி வளர்ந்தது. கருத்தில் உள்ள காதலனைக் கண் கொண்டு காண அவள் ஆவல் கொண்டாள். அதற்குச் சமயம் வாய்க்கவில்லை. ஒருநாள் காலை முதல் மாலை வரையில் அவனை எண்ணி எண்ணி அவள் நெஞ்சம் புண்ணாகி, உள்ளீரலும் வற்றிச் சோர்ந்து கிடந்தனள்.

தினந்தோறும் அந்திப் பொழுதில் தீபம் ஏற்றும் வேலை அவளைச் சேர்ந்தது. அன்று மாலையில் விளக்கேற்றி வரும் வியாஜம் கொண்டு, அவள் தனது எதிர்வீடு சென்றனள். திரியை நிமிட்டித் தீபம் ஏற்றுகையில், சாத்தன் அவள் எதிரே தோன்றினன். உடனே அவள் கண்கள் இரண்டும், அவன் மீது பாய்ந்தன. சிந்தையோ அவன் தோற்றத்தில் குடிபுகுந்தது. திரியை விளக்கில் நீட்டுவதற்குப் பதிலாக, அவள் தன் கைவிரலையே நீட்டலானாள்.

காதல் வெள்ளத்தில் வீழ்ந்துவிட்ட அம்மாதராள் தன்னை மறந்தனள். விளக்கோ கைவிரலைச் சுடாநின்றது. காமச் சூட்டின் முன்னே அத்தீபச் சூடு எம்மாத்திரம்? உணர்ச்சி என்பதே அவளிடம் இல்லை. சாத்தனிடம் அன்றோ அது புகுந்து கிடக்கின்றது! விளக்கேற்றிவரப் போன பெண்மகள் வரவில்லையே என்று தாயார் திகைத்தாள்; உடனே எதிர் வீடு சென்றாள்; அங்கே கண்டாள் தன் குமாரியின் கோலத்தை.

கைவிரல் வெந்து கருகியும், ராமாயி இடம் விட்டுப் பெயரவில்லை. அவள் அன்னையோ வாயிலும் வயிற்றிலும் அடித்துக்கொண்டாள்; ஐயோ! மகளே! அருமாயம் கொண்டனையோ? என்று கதறினாள்; கைவிரல் கரிந்து விட்டதே, சூடு உறைக்கவில்லையோ? என்று புலம்பினாள்; மதியை யாருக்குப் பறிகொடுத்தாய்? என்று கூக்குரல் போட்டாள். பின்பே இராமாயி சற்றே தன் நினைவு கொண்டு, தாயின் நிலையை அறியலாயினள்.

முன் காலத்தில் நமது கற்பரசியர் தம் கணவன் மரித்ததும், உடன் சட்டை ஏறுவர். நாதன் மீது வைத்திருக்கும் காதல் மிகுதியினால் தீயின் வெம்மையை அப்பாவைமார் சிறிதும் உணரார்; தீயின் ஜுவாலையோ சந்தனக் குழம்பேபோல் அன்னாருக்குக் குளிர்ந்து காட்டும். இதுவே அருங் காதலின் பெரும் பலன்!

# 7. பிரமன் பித்து

காமக் கள்ளைக் குடித்து விட்டால், மோகக் கடலில் விழ்ந்து முழுகிப் போக நேரும். உயிர்களைப் படைக்கும் பிரமனுக்கு நான்முகன் என்று ஒரு பெயர் உண்டு. இயற்கையாக உள்ள ஒரு முகத்தைத் தவிர, வேறு நான்கு முகங்கள் வேதனுக்கு முளைத்தன. ஆதலின் நான்முகன் என்னும் காரணப்பெயர் பிறந்தது.

பிரமன் ஒரு சமயம் அமராவதி சென்றான். அங்குள்ள அரம்பைமாரைக் கண்டு அவனுக்கு மோகம் உண்டாயிற்று. தெய்வ மகளிரோ அப்பிரமனை மதிக்கவில்லை. அஃதறிந்து அவன் பெரிதும் வெதும்பினான். காமத் தீயைச் சீலம் என்னும் ஜலம் கொண்டுதான் அவிக்க முடியும். சீலம் சிதறிவிடின், என் செய்வது? "இந்திர பதவி அடைந்தால், எளிதில் அவர்களைக் கூடலாம்," என்று அவ்வேதன் எண்ணினான்; உடனே கண்ணிறுக மூடிக் கருத்தைக் கடவுள்பால் இருத்தித் தவம் புரிந்தனன்.

இந்திரனுக்கு அதுகண்டு நடுக்கம் பிறந்தது. அதன் காரணம் யாது எனில், பதவி போய்விடுமோ என்பதேயாம். உடனே தேவர்கோன் தனது குருவை நாடி உபாயம் கேட்டான். "திலோத்தமையை அனுப்பினால், பிரமனது தவம் சிதறிப்போம்," என்று வியாழபகவான் வழி காட்டினார். அமரர் தலைவன் அவ்விதமே திலோத்தமையை ஏவினான் அவளும் தன் சேடியருடன் சிங்காரமாகச் சென்று, பிரமனது தவச்சாலை சேர்ந்தனள்.

சேர்ந்ததும் தேவமகளிர் வாளா இருக்கவில்லை. காம வேதத்தை விரித்துக் காட்ட அவர்கள் தலைப்பட்டார்கள். எங்ஙனம் எனில், மேகலாபரணமும் கைவளையல்களும் கலகல எனக் குலுங்கி முழங்க அவர்கள் பந்தடித்தார்கள்; அந்தமுடன் அம்மனையும் கழங்கும் ஆடினார்கள்; தம் தம் மதிமுகத்தில் பொட்டும் மையும் இட்டு, மேனி மினுக்கினார்கள்; மயிலினங்களைப் போல் மகிமையுடன் பரத நாட்டியம் ஆடினார்கள்; மாங்குயிலும் நாணி ஒதுங்க

இனிய குரல்கொண்டு பாடினார்கள்; கருமேகம் போன்ற கூந்தலை அவிழ்த்தும் விரித்தும் அழகுபட முடித்தார்கள்; மெல்லிய மேலாடையைச் சற்றே காற்றில் விலகவிட்டார்கள்; அரையில் கட்டியிருந்த தூய சேலையையும் சிறிது நெகிழவிட்டார்கள்; அருகே இருந்த சுனையில் ஆடி, அங்கெல்லாம் நன்கு தெரிய நின்றார்கள்; சவ்வாதும் புனுகும், சந்தனமும் பனிநீரும் கொண்டு எங்கும் தூவினார்கள்; நறுமலர் பலவும் பறித்து நாற்புறமும் வீசினார்கள்.

இவ்விதம் எழுப்பிய காமச் செந்தீ சும்மா இருக்குமோ? அஃது பிரமனைச் சுட்டுப் புண்ணாக்கியது. உடனே அவ் வேதன் நிஷ்டை கலைந்து நேரே விழித்துப் பார்த்தான். திலோத்தமையோ அக்கணமே பிரமனது வலப்புறம் சென்று, ஆடல் பாடல் புரிந்தனள். திரும்பிப் பார்த்தால், கூட இருக்கும் முனிவர் நகைப்பரே என்று பிரமன் பதைத்தான்; அப்பால் தனது தவ வலியால் வலதுபக்கம் ஒரு சிரம் கொண்டு அவளை நோக்கினான். உடனே பின் புறம் சென்று, அவள் பெருமயக்கம் ஊட்டினள். பின் புறத்திலும் அவன் ஒரு முகம் உண்டாக்கிக்கொண்டான். அவ்வளவில் திலோத்தமை இடதுபக்கம் சென்று, இன்பரசம் எழுப்பினள். அந்தப் பக்கத்திலும் உடனே ஒரு முகம் கொண்டான் பிரமன். முடிவிலே திலோத்தமை தன் சேடியருடன் அந்தரத்தே கிளம்பி, அங்கிருந்து ஆடலும் பாடலும் காட்டி அன்புமயல் எழுப்பினள். அக்கணமே மேலேயும் பிரமன் ஒரு முகம் கொண்டு நோக்கினான். திலோத்தமை அது கண்டு சட்டென்று மறைந்து போய்விட்டாள்.

பிரமனே காமபரவசனாய்க் கலங்கித் தவித்தான்; வான வீதியில் செல்லும் தேவமகளிரை இழுக்கவும் துணிந்தான். சதாசிவமூர்த்தி அது அறிந்து, பிரமனது மேல் தலையைக் கிள்ளி எறிந்தார். பலரும் அதுகண்டு, "அந்தோ! தவத்தைக் கொட்டினாய்; அவஸ்தை கொண்டாய்; சிரமும் இழந்தாய். சிரிப்புக்கு இடமானாய்," என்று பேசினர். மும்மூர்த்திகளில் பிரமனுக்கு மட்டும் ஆலயம் இல்லை; பூசை நைவேத்தியமும் கிடையாது. காமனம்பால் பிரமதேவன் பெருமை பறந்துபோயிற்று!

## 8. மாரனம்பு

சோழ வளநாட்டிலே காவிரிப்பூம்பட்டினம் உளது. குபேரனது அம்சமாக அங்கே கோடீசுவரர் ஒருவர் இருந்தார். ஆண்டவன் அருளால் அவருக்கு ஓர் ஆண் மகவு பிறந்தது. நாளடைவில் அப்பிள்ளை கணக்கற்ற செல்வம் படைத்தான்; முடிவிலே காதற்ற ஊசியும் கடைநாளில் துணை ஆகாது, என்று துணிந்தான்; பார் அனைத்தும் பொய் என்று துறவு பூண்டான்; உடைகோவணத்தையும் வீசி எறிந்தான்; ஊர் ஊராய்த் திரிந்தான் உத்தமனைப் பாடிக்கொண்டு. அப்பிள்ளையே பட்டினத்துப் பிள்ளையார் அல்லது பட்டணத்தார்.

முற்றவும் துறந்த அப்பட்டினத்தார் ஒரு சமயம் அருணைமாநகரின் வீதியிலே சென்றார். அழகின் கனியான கன்னி யொருத்தி அங்கே தென்பட்டனள். அவளைக் கண்டதும், பிள்ளையாருக்கு மோகம் பிறந்தது. உடனே அவர் அப்பெண்ணை யணுகி நின்றார். அவளோ, "கட்டத் துணியற்றுக் காடு மேடெல்லாம் திரிந்து உழலும் இக் கொள்ளிக் கட்டையையா நான் கட்டிக்கொள்வேன்?" என்று உதாசினம் செய்தனள். பிள்ளையார் அச்சொல் சூடு கொண்டு, வந்த வழியை நோக்கி நடந்தார். மனைக்குள் இருந்த தாய்க் கிழவிக்கு அத்தகவல் எட்டியது.

அக்கிழவியோ, "அடிபெண்ணே! கழுதை அறியுமா கற்பூர வாசனை? அப்பெரியார் யாரென்று நினைத்தாய்? அவரே பட்டினத்தடிகள். அவரைச் சேர அனந்த கோடி புண்ணியம் பண்ணியிருக்க வேண்டுமே. வலுவில் வந்த ஸ்ரீதேவியைக் காலால் உதைத்துத் தள்ளி விட்டாயே. நமது குலம் அனைத்தும் விளங்குமே அவர் அருளினால். புத்தி கெட்ட பேதாய்! பேதாய்!!" என்று பேசினாள்; பின்பு மகளை இட்டுக்கொண்டு ஓடோடிச்சென்று, அப்பெரியாரை அடைந்து பிழை பொறுக்க வேண்டினள். பட்டினத்துப் பிள்ளை அது கண்டு,

> தோடவிழும் பூங்கோதை! தோகை! உனை இப்போது
> தேடினவர் போய்விட்டார், தேறி இரு;—நாடி நீ
> என்னை நினைத்தால் இடப்பில் உதைப்பேன்; நான்
> உன்னை நினைத்தால் உதை!

என்று கூறிச் சென்றார். பின்னர், அப் பெரியாரின் அருளினால், அத்தாசிமகள் வயிற்றில் அருணகிரி தோன்றினார் என்பது கன்னபரம்பரை. தேனினும் இனிய திருப்புகழ் பாடிய பெருமான் அருணகிரி நாதரே.

## 9. குமுதவாய் அமுதம்

மாதரின் அங்க அவயமும், நடையும் நொடியும், மேனியும் மினுக்கும், நோக்கும் போக்கும், சாயலும் குரலும் கொண்டு, காமனது ஐங்கணைகளும் ஆடவர்மீது வந்து பாயும். பாயவே ஆண்மையாளரான அனைவரும் அவதி உறுவர்; அறிவைச் சிந்துவர்; ஆண்மையை இழப்பர்; "தோகையர் சிரோமணியே! சற்றே நீ தயவுகொள்ளல் வேண்டும். துன்பம் எல்லாம் தொலைத்து என்னைக் காத்தல் உன்தன் கடமை. உனது அன்புமதிகண்டு பொங்கியெழும் ஆனந்த சாகரத்தில் யான் ஆழ்ந்து விட்டேன்; கரையேறி வர நீ கை கொடாயோ?," என்று புலம்புவர்.

மேலும், "மணி நகையாரே மகா தெய்வம்; அவர்தம் வாக்கே சிரிய உபதேசம்; கொங்கைத் துணையே குருநாத பீடம்; பாதம் இரண்டையும் வருடுவதே பரமசிவ பூஜை; கட்டி அணைவதே பேரின்ப முத்தி;" என்று பலர் பிதற்றுதலும் பிரசித்தம். தவிர, காளைகளான ஆண்பிள்ளைகளில் பலரோ,

நெஞ்சீரமும் வற்றி, உள்வாய் வறண்டு, நினைவு தப்பி,
எஞ்சீவனும் விட்டுப் போகுதையோ! இள மாமயிலே!
வஞ்சிக் கொடியிடைப் பெண்ணாள் குமுத நல் வாய் அமுதச்
சஞ்சீவி கொண்டுவந்தால் பிழைப்பேன், இனிச் சாவு இல்லையே!

என்றும் பாடிப் பதைப்பர்; மாதர் மயக்கினால் கலைக்கோட்டு மகரிஷி துறவறம் விடுத்து, இல்லறம் பூண்டார்; சிவபெருமானும் சித்தம் கலங்கினான்; திருமாலோ தேம்பித்திரிந்தான்; நான்முகனோ பதவி கேட்டுப் பரதவித்தான்; இந்திரன் தன் அங்கமெல்லாம் அவலட்சணம் கொண்டான்; மகிஷாசுரனோ மதங்கொண்டு மாண்டு மடிந்தான்; வீரவாலியும் இராமனம்பால் அழிந்தான்; பராசரனும் தவத்தைச் சிந்தினான். நகுஷனோ மலைப்பாம்பாக மாறிக் கிடந்தான்; சந்திரன் தனது கலையிழந்து கலங்கி

ஞன் ; இராவணன் தனது அரசும் உயிரும் பறிகொடுத்தான் ; சுந்தோபசுந்தர் தம்முள் சண்டை போட்டுச் செத்து வீழ்ந்தனர். இவ்விதம் காமனம்பால் பெருமை இழந்து பரிதவித்தோர் பலர் ஆவர்.

கட்டிலிலே மெத்தையும் காலணையும் வேறணையும்
கட்டி அணைக்க ஒரு கண்ணுட்டியும் - மெட்டிமையாம்
ஆறுபோல் சீறும் உயர் ஆஸ்தியுமே உண்டாகில்
வேறும் உயர் ஞானம் உண்டோ ? விள்ளு !

என்று தருக்கி நிற்கும் அனைவரும் எண்ணிப் பார்த்தல் வேண்டும். அறிவு எனும் அங்குசம் கொண்டு, மனம் எனும் யானையை அடக்கினுல் மேன்மை பெறலாம்.

## 10. பேரின்ப போதம்

மாதரை மகிழ்ந்து காதல் கொள்ளுதல் மதியீனமாம். மாதர் உடம்போ மாசு படிந்த சோற்றுத் துருத்தி; ஒன்பது வாசல் கொண்ட ஊன் பொதி பாண்டம்;காமவேளின் நடனசாலை; மோகப் பெட்டி ; மலமும் கிருமியும் நிரம்பிய நாற்றக்கேணி. இதனைக் கதி யெனக் கருதிக் கருத்தழிவு கொள்வோர் மக்கள் அல்லர் ! மற்று மாக்கள் ஆவர் !!

தெட்டிலே, வலியமட மாதர் வாய் வெட்டிலே
சிற்றிடையிலே, நடையிலே
சேலொத்த விழியிலே, பாலொத்த மொழியிலே,
சிறுபிறை நுதல் கீற்றிலே.
பொட்டிலே, அவர்கட்டு பட்டிலே,
புனைகந்த பொடியிலே, அடியிலே
மேல்பூரித்த முலையிலே, நிற்கின்ற நிலையிலே
புந்திதனை நுழைய விட்டு

நெட்டிலே அலையாமல் ஆண்டவன்பால் அறிவு செலுத்தி, அவன் இருதாளில் மனம் கொள்ளின் பெருவாழ்வும் பேரின்பமும் பெறலாம். இது சத்தியம் ! சுபம் ! சுபம் !!

---

முதல் பதிப்பு, பத்தாயிரம் பிரதிகள் ; 25—2—'32.

Kesari Printing Works, Madras.

ஸ்ரீ சாரதா சதங்கை, மணி - 7

கல்வி இம்மை பயக்கும்! நம்மை விளக்கும்!!

ஸ்ரீ

# மகாசிவராத்திரி மான்மிய விளக்கம்



எம். எஸ். சுப்பிரமணிய ஐயர்

எழுதியது

விலை அரையணா

# தமிழன்பருக்கும் பெரியாருக்கும் வந்தனம் !

---

ஸ்ரீ

சாரதா சதங்கை மணி.

1. கற்பாசி
2. கிருஷ்ண குமாரி
3. சடையப்ப வள்ளல்
4. நீலி பாக்கிரமம்
5. இன்பாசக் கதைகள்
6. மன்மத விலாசம்
7. விகடக் களஞ்சியம்
8. சிவராத்திரி மான்மியம்
9. வீரப் பிரதாபன்
10. வாள் வீரன்
11. வீர சிங்கம்

எங்கும் ஏஜண்டுகள் தேவை.

நல்ல கமிஷன் உண்டு உடனே எழுதவும்.

அன்பர்காள் !

சிவம் என்றால் மங்களம். சிவன் எனின், மங்களம் தருவோன் என்று அர்த்தம். உலகமும் உயிரும் சிவமயமாய் இருத்தல் வேண்டும். அதற்கு சிவபூஜை அவசியம். தினந்தோறும் அப் பூசை செய்தலே மேலாம். அது இயலாவிடின் ஓர் ஆண்டில் ஒரு தரமேனும் சிவபூஜை செய்தல் வேண்டும். ஆனதுபற்றியே சிவராத்திரி எனும் தூய தினம் உளது. அன்று உயிர்கள் எல்லாம் உய்யும் வகை உண்டு. இதன் விவரம், "மகா சிவராத்திரி மான்மிய விளக்கம்" எனும் நூலில் காணப்படும். ஸ்ரீ சாரதா சதங்கை எனும் நூல் வரிசையில் இது எழாவது மணியாகும். இதன் விலை அரையணாவே. வாரந்தோறும் ஒரு நூல் வெளிவரும். அன்பரின் ஆதரவும் ஆண்டவன் அருளும் தேவை. தமிழ்த் தெய்வத்திற்கு நமது வணக்கம் !

எம். எஸ். சுப்பிரமணிய ஐயர்,
ஆசிரியர்
ஸ்ரீ சாரதா சதங்கை மணி.

மயில்வாகன் கம்பனி,
32, ஐயப்பசெட்டி வீதி, மண்ணடி, மதராஸ்.

கல்வி இம்மை பயக்கும்! நம்மை விளக்கும்!!

# மகா சிவராத்திரி மான்மிய விளக்கம்

## 1. முன்னுரை

அன்ன விசாரம், அதுவே விசாரமாக இந் நாளில் அநேகர் அலைகின்றனர்; பலரோ, சொர்ண விசாரத்தில் சொக்கிக் கிடக்கிறார்கள். ஆன்ம விசாரம், அல்லது ஈசுவர விசாரம் செய்வார் எத்தனை பெயர் இருக்கின்றனர்? "ஈசன் ஏது? தெய்வம் யாது? எல்லாம் நம் செயலே! அதிர அடித்தால், ஐயனாரும் இல்லை, பிடாரியும் இல்லை!" என்று பேசுவாரும் இருக்கின்றனர். தனது சக்தி கண்டு, தலைகால் தெரியாமல் தருக்கித் திரிவோரும் உண்டு.

வானவீதியிலே விமானத்தில் சஞ்சரிப்பதும், கடலுக்குள்ளே கப்பல் கொண்டு செல்வதும், பஞ்சபூதங்களை ஏவல் கொள்வதும் கண்டு, மனித சக்தியே சக்தி என்று சிலர் சாற்றலாம். ஆயினும் பல சமயங்களிலே விமானங்கள் வெந்து வீழ்வதைக் காண்கிறோம்; கப்பல்கள் கடலில் அமிழ்வதைக் காதுகொண்டு கேட்கிறோம். இம்மட்டோ? திடீரென்று பூகம்பம் தோன்றுகின்றது; சண்டமாருதம் கிளம்புகின்றது; பெரு வெள்ளம் புரளுகின்றது. தெய்வ சக்தி என ஒன்று உண்டு, அதனை மிஞ்சியது ஒன்றும் இல்லை, என்று புத்தி புகட்டவே இவை அனைத்தும் எச்சரிக்கைகளாம். அது கண்டும், மதிகொள்ளும் மாந்தர் சிலரே! பலர் இல்லை.

## 2. ஆன்ம விசாரம்

இந்த உலகில் ஏன் பிறந்தோம்? எவ்விதம் பிறந்தோம்? பிறந்தோர் பலரும் மாண்டு மடிகின்றனரே! இறப்பையும் பிறப்பையும் தடுக்க வழி உண்டா?'' என்று மானிடர் மதிகொண்டு நோக்குவதில்லை. கொண்ட உடலைக் கண்டும், தனது சக்தி பார்த்தும், தருக்கி நின்றால், காலன் வந்து உயிரைக் கவரும்பொழுது, உடலும் சக்தியும் உடைந்துபோம் அன்றோ? அப்போது, பேதை மாந்தர் யாது செய்வர்? மானிட உடலோ, ஆங்காரப் பொக்கிஷம், கோபக் களஞ்சியம், ஆணவம் நீங்கா அரண்மனை, பொய் வைத்த கூடம், காம விலாசம் ஆகும். தேகம் அனைத்தும் எண்ணிறந்த துவாரம் கொண்ட கந்தலேயன்றி வேறில்லை. வீண் மயக்கம் வேண்டாம்

இதனை மதித்தே, மண் மீது பிறவாதிருக்கவேண்டும், பிறந்தால் இறவாதிருக்கவேண்டும் என்று நமது பெரியோர் முயலா நின்றனர்; முத்தியும் எய்தினர். நஞ்சை விழுங்கி ஏப்பம் இடும் சித்தரும், இரும்பாணிகளை உட்கொண்டு எக்காளம் கொள்ளும் ஆண்டிகளும், "தெய்வமே! எல்லாம் உன் செயல்!'' என்று ஏத்தி அடங்கி நிற்கின்றனர். பற்றற்ற பட்டினத்தடிகளும், "என் செயலாவது யாதொன்றும் இல்லை,'' என்றே கழுமரத்திலிருந்து கதறினர். பார் அனைத்தையும் ஒரு துரும்பு எனத் துறந்த பெரியாரே அங்ஙனம் புலம்பினர் என்றால், பஞ்சை மானிடர், நான் எனது எனும் செருக்கு மிகுந்து, மாயையில் மூழ்கி நலிதல் நகைப்புக்கு இடமன்றோ?

மாயை என்பது மாமுனிவரையும் மகா துறவியரையும் வீழ்த்திவிடும்; இதனை நமது முன்னோர் உணர்ந்தே, பேதை மானிடர் அனைவரும் பேறு பெற்று உய்யவேண்டி ஜபம் தபம், நியதி நேறி, பூசை ஆராதனை, விரதம் சபதம், பட்டினி பாரணை, திருநாள் பெருநாள், சிராத்தம் தீர்த்தம், கோயில் குளம், இவற்றை வகுத்து, விதிமுறை கோத்து, வழியும் காட்டிப் போயுளர். ஐம்புலன்களை அடக்கி, மனத்தை ஒடுக்கி, மகாதேவன்பால் கருத்தை இருத்தும் வலிமை உடையாருக்கு ஜபம் தபம் முதலியன ஒரு

தேவை ஆகா; மனக் குரங்கின் வயப்பட்டு விழிக்கும் மாந்தருக்கே அவை அதி அவசியமாம்.

## 3. ஆகார விவகாரம்

ஆகாரம் அடங்கின் விவகாரம் குறையும். ஆதலின் இன்ன உணவு கொள்ளலாம். இன்ன உணவு கூடாது, என்ற விதி உண்டு. தினிக்குத் தகுந்த புத்தி என்பது ஒரு பழமொழி. யாவரும் மிதமாகப் புசித்தல் வேண்டும்; இன்றேல் உடலில் நோய் தோன்றும், உள்ளமும் சலிக்கும். உணவின் வகையை நாள்தோறும் கட்டுப்படுத்தலே மேலாம். அது இயலாவிடின், குறிப்பிட்ட தினங்களிலேனும் கட்டுப்படுத்தலே கடமை. சில தினங்களிலோ ஆகாரமே கொள்ளாமல், பட்டினி கிடத்தல் அல்லது உபவாசம் இருத்தல் உடலுக்கும் உயிருக்கும் இன்றி அமையாததாகும். அத்தகைய நாட்களே விரத தினங்கள், தூய திதிகள் எனப்படும்.

அமாவாசை, ஏகாதசி, சிவராத்திரி, சோமவாரம், கிருத்திகை முதலியவற்றைக் குறிப்பிடலாம். ஏகாதசி, கிருத்திகை முதலிய தினங்களில் சிலர் பச்சைத்தண்ணீரும் பல்லில் ஊற்ருர்; உமிழ்நீரும் உட்கொள்ளார். உடலும் ஒரு சிக்கலான யந்திரமாகும். அந்த யந்திரத்திற்கு ஒய்வு வேண்டும் அன்றோ? சரீர சுகத்தைத் தழுவியே விரதமும் உபவாசமும் ஏற்பட்டுள. சாஸ்திரத்துக்கு அடிப்படை சரீர சுகமே. அத்தினங்களிலே பசிதாக வாதை தோன்ருமல் இராது. தோன்றுங்கால், அதனை அடக்க நாம் பயிற்சி பெறல் வேண்டும். கண்டபடி தின்று கொழுக்கும்பொழுதுதான், நமது சிந்தை திரிந்து அலையும்; மனக் குரங்கும் புலன் விட்டுப் புலன் தாவிச் சென்று அல்லல் இழைத்து, அனர்த்தம் விளைக்கும்.

ஆகாரம் ஒடுங்கிவிடின், அல்லது உபவாசம் இருந்து வரின், சிந்தை திரியாது, மனக்குரங்கும் ஒடி அலையாது; மற்று, ஒரு வழிப்பட்டு நிற்கும்; நல்ல நினைவு பிறக்கும்; உடலின் இழிந்த தன்மை புலப்படும்; ஆன்மசக்தி கிளம்பும்; அறிவு ஒங்கும், ஆண்டவன்பால் பாசம் தோன்றும், தெய்வ சக்தியும் புலப்படும். அது சமயம் ஈசனை மனம்

வாக்கு காயம் ஆகிய மூன்றினுலும் ஏத்தித் துதித்துப் பூசைபண்ணவேண்டும் என்பது நம் முன்னோர் கொள்கை.

## 4. தெய்வ துதி

ஆண்டவனைத் துதித்தல் என்ருல், அவனது அரும் பெருங் குணங்களைப் போற்றிப் புகழ்தலாம். "நான் ஒன்றுக்கும் உதவாதவன், என்னுல் ஆவது ஒன்றும் இல்லை," என்பதும் துதியின் கருத்து. ஆண்டவனுக்குப் பெயரும் இல்லை; வடிவும் கிடையாது. ஆயினும் அவன் நாமங்களோ அனந்தம். இஷ்டமான பெயர் சூட்டி அவனை அழைக்கலாம். நானு மதத்தினர் வெவ்வேறு பெயர் இட்டு அழைப்பினும், ஆண்டவன் ஒருவனே! அவன் சக்தியோ அபாரம். நமது சிந்தையின் கனிவுக்கு ஏற்ப, அப் பெருமான் நமக்கு அருள் சுரப்பான்.

சிவனே சிவனே என்பார் பின், சிவன் உமையாளோடு செல்வன். ஆயினும், சிவ சிவ என்னும் பொழுது, உள்ளம் உருகி உரைத்தல் வேண்டும். வாயளவில் வழுத்தினுல் பலன் கிட்டாது. துதியில் மனக்கனிவே பிரதானம். உள்ளம் தீ எரிய, உதடு பழஞ் சொரியத் துதிப்பின், சிவபிரான் அதனைக் கவனியான். ஆதலின், ஈசனைத் துதிக்கையில், மனக் கனிவும் நிர்மல சிந்தையும் மிக முக்கியம். அப்போது நமது உள்ளக் கமலத்தில் வந்து அப்பரமன் பரிவுடன் குடிகொள்வான்.

ராம ராம என்று ஆஞ்சனேயன் ஜபிக்கையில், அவன் மனமே இராமன் கோயிலாயிற்று. ஆதலினுல் தான் அனுமான் கடலைக் கடந்தான்; மலையைத் தூக்கினுன்; வானவெளியிலும் விரைந்து பறந்தான். அஞ்சனை மைந்தனைப்போல் பஜனையிலும் துதியிலும் நமக்கு நம்பிக்கை வேண்டும். அந்நம்பிக்கை முற்றின், அதுவே பரம பக்தியாம். பக்தி கொள்ளுதல் எளிது அன்று. அனதுபற்றியே, "பக்தனுய்ப் பாட வகையறியேன்; ஆயினும் நீ என்னைக் காத்தருளல் வேண்டும்," என்று சைவ சமயாசாரியரில் ஒருவர் கனிந்துருகிக் கதறலானுர். பக்தி செய்தால் முக்தி பெறலாம். அவ்விதம் பக்தி பண்ணி முக்தி பெற்ருேர் மிகப் பலர் ஆவர்.

## 5. நடமாடும் கோயில்

மெய்யான பக்தி யென்பது யாது? ஈசன் இல்லாத இடம் ஒன்றும் இல்லை; சகல ஜீவராசிகளிலும் அவன் குடி கொண்டிருக்கின்றான். அதனால்தான், "உயிர்கள் அனைத்தும் நடமாடும் கோயில்," என்றார் ஒரு பெரியார். நடமாடும் கோயிலாம் உயிர்களிடம் அன்புகொள்ளின், அதுவே, உண்மையான துதி அல்லது பிரார்த்தனை ஆகும்; உடனே ஈசன் மனம் களிக்கும்; உயிர்த் தொகுதிகளிடம் உள்ளன்பு கொள்ளாமல், படமாடக் கோயிலாம் ஆலயம் சென்று, ஆங்குள்ள சிலைக்கு அபிஷேக ஆராதனை செய்வதில் ஒரு பலனும் இராது. இதனை வற்புறுத்தவே, உடல் எடுத்த பயன் ஊருக்கு உழைப்பதேயாம் என்று பெரியோர் கருதி, அங்ஙனமே உழைத்து வந்துளர்.

எல்லாரும் இன்புற்றிருக்க எண்ணி, அதற்காக உயிரையும் வழங்கும் தியாக மூர்த்திகளாக விளங்கியதனால் தான், வேதியருக்கு விழுமிய சிறப்பு உதிக்கலாயிற்று. "அந்தணர் என்போர் அறவோர், மற்று எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகலான்," என்பது திருவள்ளுவர் வாக்காம். இத்தகைய உணர்வு உடையோருக்கு ஆலய வழிபாடு அவசியம் அன்று. ஆயினும், அவ்விதம் பக்குவம் வாய்ந்தோர் வெகு சிலரே.

பரம பக்குவிகள் அல்லாதாருக்குத்தான் ஆலய வழிபாடும் ஜபதபமும் பட்டினியும் பாரணையும் பரம கடமைகளாகும், தவிர, பரிபக்குவம் அடைவதற்கும் பயிற்சி வேண்டும் அல்லவா? அத்தகைய பயிற்சி பெறவேண்டியே, பற்பல நியதிகளுக்கு நாம் உட்பட நேர்கின்றது. அந்த நியதிகளால் ஈசுவர உணர்ச்சியும் பக்தியும் உண்டாகும்; அவை உண்டாகவே, உலகனைத்தும் ஈசுவரமயம் என்று தெளிவு ஏற்படும்; அத்தெளிவு ஏற்பட, ஞானம் உதிக்கும்; ஞானம் உதிப்பின், மோனம் பிறக்கும்; பின்னர் முத்தியும் சித்திக்கும்; பரமானந்தமும் அடையலாம். அன்பர் பணிபுரிய என்னை ஆளாக்கி விட்டுவிட்டால் இன்பநிலைதானே வந்தெய்தும் பராபரமே!

## 6. பிரளய காலம்

வீடும் காடும் மேடும் மடுவுமாக உள்ளது உலகம். உலகில் உள்ள ஜீவராசிகளோ எண்ணில. அவை எண்பத்து நான்கு லட்சம் பேதம் உள்ளன. அவை எல்லாம் ஒரே தன்மையன அல்ல; மற்று பலவகையான பக்குவமும் பலமும், அறிவும் தெளிவும் கொண்டு துலங்கும். அவை ஒன்றை ஒன்று அடிக்கும், அழிக்கும்; நான், எனது என்று செருக்கும் கொள்ளும்; "ஈசுவரன் ஒருவன் இருக்கிறன்; அவனன்றி ஓர் அணுவும் அசையாது; அவன் ஆட்டிவைக்கும் வண்ணம் எல்லாம் ஆடவேண்டும்," என்பதையும் உயிர்கள் மறக்கும்; இறுமாப்பும் கொள்ளும்; எழும்பித் திரிந்து கோலாகலம் அடையும்.

அச்சமயம் உயிர்களுக்கு அறிவு புகட்டவேண்டும் அல்லவா? அதற்காக ஆண்டவன் உலகையே அழித்து விடுவான். வீடும் காடும் மேடும் மடுவும் அப்போது மறைந்துபோம். எங்கும் ஒரே வெள்ள மயமாகத் தோன்றும், அல்லது அகண்ட வெளியாகக் காணப்படும். இதனையே பிரளயம் என்பர். அப்பிரளய காலத்தில் உயிர்கள் எல்லாம் கடவுளிடம் ஒடுங்கிவிடும். ஏகமூர்த்தியாக ஈசுவரன் ஜோதி மயமாய்ப் பிரகாசிப்பான்.

அத்தகைய கடவுளின் ஓர் அம்சமே சக்திதேவி அல்லது உமா தேவி. அத் தேவி அருளின் வடிவானவள்; அன்பு மயம் கொண்டவள். ஆண்டவனது தன்மையை உணர்ந்து, ஜீவர்களின் நன்மையை மதித்து, சிவபெருமானை அத்தேவி பூசிப்பாள்; துதிப்பாள், தொழுவாள். உடனே ஈசன் இனிய முகம் கொள்வான்; யாது வரம் வேண்டும், என்று வினவுவான். அதற்கு, "எம்பெருமானே! அடியேன் இந்த இரவு உம்மைப் பூஜித்தேன். ஆதலின் இந்த இரவு சிவராத்திரி எனப்படல்வேண்டும். இத்தினத்தில் தேவரீரை வழிபடும் உயிர்கள் எல்லாம், இம்மையில் போக போக்கியம் துய்க்கவேண்டும்; மறுமையிலோ பரமுக்தி எய்தல் வேண்டும்," என்று உலக மாதா வேண்டினள். அப்படியே ஆகட்டும், என்று அருளினன் ஆண்டவன்.. உடனே உயிர்கள் எல்லாம் தோன்றி, உன்

மத்தம் விடுத்து, உய்யும் வகை நாடின. ஆதலின் அந்த இரவு சிவராத்திரி என்று சிறப்புப் பெயர் பெற்றது.

## 7. ஒரு பெருஞ்சோதி

மற்றொரு சமயம் பெரும் பிரளயம் ஒன்று உண்டாயிற்று. அப்போது உலகம் முழுதும் மறைந்துவிட்டது. காத்தல் கடவுள் அதுகண்டு உலகை உயர்த்தி நிறுத்தினன்; உடனே படைத்தல் கடவுளும் உயிர்த்தொகுதிகளைப் படைக்கலானான். பிரளயத்தினின்று உலகை உயர்த்தினேம் என்று காத்தல் கடவுளுக்குக் கர்வம் பிறந்தது; படைக்கும் கடவுளும் உயிர்ப்பெருக்கம் கண்டு தருக்குக்கொண்டான். அவ்வேளை, யார் பெரியவன் என இருவருக்கும் கடும் போர் மூண்டது.

சிவபெருமான் அது கண்டார்; இருவரையும் ஆட்கொள்ளக் கருணை கொண்டார்; உடனே ஒரு பெருஞ்சோதியாக அவ்விருவருக்கும் இடையே தோன்றி நின்றார். படைத்தல் கடவுளோ அச்சோதியின் முடியைக் காண அன்னவாகனத்தில் ஏறிப் பறந்தான்; காத்தல் கடவுளோ அடிகண்டுவர, வராக வடிவுகொண்டு விரைந்தான். முடியையும் அடியையும் இருவரும் காணமுடியவில்லை. முடிவில் இருவரும் அச்சோதியைத் துதியா நின்றனர்.

உடனே ஆண்டவன் தோன்றி, "பக்தர்காள்! உங்கள் மத்தியில் யாம் எழுந்தருளிய இந்த இராத்திரி சிவராத்திரியாம். இந்த மாசி மாதம் கிருஷ்ணபட்சம் சதுர்த்தசி திதியில் நம்மைப் பூசிக்கும் யாவரும் இஷ்டசித்தி பெறுவர்; இணையில்லா இன்பமும் அடைவர்; முத்தியும் எய்துவர். பூர்வம் உமாதேவியார் பூசை செய்து வரம் பெற்ற தினமும் இஃதே," என்று திருவாய் மலர்ந்தார். அதுமுதல் உயிர்கள் எல்லாம் உமைகேள்வனை அந்நாளில் வாழ்த்தவும் வழுத்தவும் தொடங்கின. காத்தல் கடவுளும் படைத்தல் கடவுளும் தருக்கு ஒழிந்து, சமர்விடுத்து, சஞ்சலம் நீங்கி, சாந்தமயம் கொண்டனர். இச்சம்பவம் திருவண்ணாமலையில் முன் நிகழ்ந்ததாகப் புராண இதிகாசங்கள் புகலும். ஜோதி மலையின் பெருமையே பெருமை!

## 8. ஐவகை

சிவராத்திரி ஐந்து வகைப்படும். அவை நித்திய சிவ ராத்திரி, பட்ச சிவராத்திரி, மாச சிவராத்திரி, யோக சிவ ராத்திரி, மாக சிவராத்திரி அல்லது மகாசிவராத்திரி என் பனவாம். ஓர் ஆண்டிலே பன்னிரண்டு மாதங்களிலும் சுக்கிலபட்சம், கிருஷ்ணபட்சம் என இரண்டு பட்சங்கள் உண்டு. ஒவ்வொரு பட்சத்திலும் சதுர்த்தசி வரும். அவ் விதம் ஒரு வருஷத்தில் இருபத்துநான்கு சதுர்த்தசிகள் உண்டு. அந்த இருபத்துநான்கும் நித்திய சிவராத்திரியாம்.

தை மாதத்திலே கிருஷ்ணபட்சப் பிரதமை முதல் பதின்மூன்று தினமும் ஒரொருபொழுதே உணவுகொண்டு, பதினுன்காம் தினமாகிய சதுர்த்தசியிலே சிவபெருமானை ஆராதித்தல் பட்ச சிவராத்திரியாம். மாசி மாதத்திலே கிருஷ்ணபட்ச சதுர்த்தசி, பங்குனியிலே முதல் திருத் தியை, சித்திரையில் கிருஷ்ணபட்ச அஷ்டமி, வைகாசி யிலே முதல் அஷ்டமி, ஆனியிலே சுக்கிலபட்ச சதுர்த்தி, ஆடியிலே கிருஷ்ணபட்ச பஞ்சமி, ஆவணியிலே சுக்கில பட்ச அஷ்டமி, புரட்டாசியிலே முதல் திரயோதசி, ஐப் பசியிலே சுக்கிலபட்ச துவாதசி, கார்த்திகையிலே முதல் சப்தமி, பின்வரும் அஷ்டமி, மார்கழியிலே இருபட்சங் களிலும் வரும் சதுர்த்தசிகள், தையிலே சுக்கிலபட்சத் திருத்தியை, இவை மாச சிவராத்திரிகளாம்.

மேலே கண்ட மாதங்களில் முறையே, பிரமன், விஷ்ணு, உமாதேவி, சூரியன், உருத்திரன், குமாரக்கடவுள், சந்திரன், ஆதிசேஷன், இந்திரன், ஸரஸ்வதி, மனேன் மணி, நந்தி இவர்கள் சிவராத்திரி விரதம் அனுஷ்டித்து இஷ்டசித்தி எய்தினர்கள். சோமவாரத்திலே பகலும் இரவும் பூரணமாய் அமாவாசைஇருப்பின் அது யோக சிவ ராத்திரி. ஒவ்வொரு வருஷமும் மாசி மாதம் வரும் கிருஷ்ணபட்ச சதுர்த்தசியிலே மகா சிவராத்திரி, அல்லது மகா சிவராத்திரியாம்.

## 9. விரத விவரம்

மகா சிவராத்திரி விரதத்தை யாவரும் மேற்கோள்ள லாம். எல்லாருக்கும் இது பலன் தரும். பிரம்ம, க்ஷத்

திரிய, வைசிய, சூத்திரர் ஆகிய நான்கு வருணத்தின ரும்; பிரமசாரி, கிரகஸ்தன், வானப்பிரஸ்தன், சந்நியாசி, ஆகிய நான்கு ஆசிரமத்தாரும்; பெண்டிரும் சிசுக்களும், தாசிகளும் தாசர்களும் அநுஷ்டிக்கலாம். சுருங்கச் சொல்லின், தேவர், தானவர் உள்பட எல்லா ஜீவராசி களுக்கும் இந்த விரதம் உரியதாகும்.

சிவராத்திரி விரதம் கொள்வோர், அதற்கு முன் தினம் ஒரு வேளையே ஆகாரம்கொள்ளலாம்; ஸ்திரீ சங்க மம் கூடவே கூடாது. அன்று அதிகாலையில் எழுந்து, பிற விப் பயன் எய்த விரதம் கொள்வதாக உறுதி பூணவேண் டும்; அருகில் இருப்போரையும் விரதம் இருக்கச்செய்தல் அவசியமாம். பின்பு, காலைக் கடன்களை முடித்து நன்னீ ராடி, நித்திய விதிகளை முடித்துக்கொண்டு, சிவபூஜை செய்தல் வேண்டும்.

ஆலயம், புண்ணியஸ்தலம், நதிக்கரை, மலைச்சாரல், நந்தவனம், ஆசான் வீடு, தனது இல்லம் முதலிய இடங் களில் ஒன்று சிவபூஜைக்கு ஏற்ற இடமாகும். சிவ சந்நி தானத்தில் செய்தல் மிகவும் விசேஷம். தன்னால் பூசை செய்ய இயலாவிடின், சிவன் கோயில் சென்று, அங்கு நடக்கும் பூஜையைக் கண்டு களிக்கலாம். அன்று காமம் குரோதம், உலோபம், மோகம், மதம், மாச்சரியம் முத லிய பகைகளுக்கு இடம் கொடுக்கக் கூடாது. துஷ்டர்க ளுடன் பேசலாகாது; சுத்தம் இல்லாதவர்களுடன் சேரக் கூடாது; ஐம்புலன்களின் வழியே மனத்தைச் செலுத் தல் ஒண்ணாது; பகல் உறக்கம் ஒவ்வாது; உபவாசம் இருத்தல் வேண்டும். நீர் அருந்தவும் கூடாது.

அன்று முழுதும் ஈசுவர தரிசனத்திலும் துதியிலும் காலங் கழித்தல்வேண்டும். இரவிலே சிவன் கோவில்க ளில் நான்கு ஜாமமும் விமரிசையாகப் பூசனை நடக்கும். அதனைக் கண்டு ஆனந்திக்கலாம்; சிவ மகிமையைப் பிறர் க்கு எடுத்துச் சொல்லலாம்; அல்லது பிறர் சொல்லக் கேட்கலாம். இரவில் கணநேரமும் கண் உறக்கம் கொள் ளக் கூடாது. ஏதேனும் ஈசுவர கைங்கர்யத்திலேயே பொழுதைப் போக்கவேண்டும். அன்று முழுதும் சுத்த உபவாசம் இருத்தலே மேலாம். அது முடியாதாயின்,

முதல் ஜாம பூஜை முடிந்தபின்னர், ஈசனுக்கு நிவேதனம் ஆன பாலும் நீரும் பழமும் கொஞ்சம் புசிக்கலாம். பலகாரங்கள் கொள்வது உத்தமம் அன்று ; மத்திமமே.

அத் தினத்தில் இரவு பதினொன்கு நாழிகைக்குமேல் மூன்றே முக்கால் நாழிகை சிவதரிசனத்திற்கு மிகவும் உயர்ந்த காலம். அக்காலத்தில் சிவதரிசனம் செய்தல் மகா புண்ணியமாம். நான்கு ஜாமமும் நித்திரை ஒழிக்க இயலாதவர் அக்காலம் வரையிலாவது தூங்கா திருத்தல் வேண்டும். பொழுது புலர்ந்ததும் புண்ணிய நீரில் ஆடி, கடன்களை முடித்து, ஈசுவர பூஜைசெய்து, அல்லது ஈசுவர தரிசனம் பண்ணி, உபவாச பலனை உத்தமனுக்கே பிரீதி செய்து, விரத நியமத்தை விடுதல் வழக்கம். சிவ வேதியர்க்கு ஆடை அணிகள் தானம்செய்து, ஏழைகளுக்கு அன்னமும் கொடுத்து, ஆறு நாழிகைக்குள் பாரணம் செய்தல் வேண்டும். பாரணம் முடிந்தபின், பகலிலே சிவ புராணங்களைப் படித்து அல்லது கேட்டு, இரவில் ஆகாரம் கொள்ளாமல் நித்திரை செய்தல் வேண்டும்.

இவ்விதம் ஆதிபராசக்திமுதல் பலரும் விரதமிருந்து இஷ்டசித்தி பெற்றுளர். அன்னவரில் சிலருடைய சரித்திரத்தை இங்கே மிகவும் சுருக்கமாகச் சொல்வோம்.

## 10. வேடனுக்கு முத்தி

மிலேச்ச தேசத்தில் கொலை வேடன் ஒருவன் இருந்தான். அவன் பெயர் குரூரன். அடுத்த ஊர்ச் செட்டிக்கு அவன் சிறு கடன் கொடுக்கவேண்டியிருந்தது. மகா சிவராத்திரியன்று செட்டிமார் சேர்ந்து, அவனை ஒரு கோயிலில் அடைத்து வைத்திருந்தனர். மாலையிலே அவன் விடுதலைபெற்று வீடு திரும்பினன். ஆலயத்திலே காவலில் கிடந்த காலையில், சிவ சிவ எனும் சொல் அவன் நெஞ்சில் பதிந்தது. வெறுங்கையுடன் வீடு செல்ல அவன் விரும்பவில்லை. ஒரு குளக்கரை சேர்ந்து, அங்கிருந்த வில்வமர மொன்றில் ஏறி அமர்ந்து, விலங்குகளின் வரவை நோக்கியிருந்தான். மரத்தடியிலே சிவலிங்கம் ஒன்றிருந்தது. இதனை அவன் அறியான். மரம் அடர்ந்து இருந்ததால், வெளி தெரியும் பொருட்டு, அதன் இலைகளை

யும் குச்சுகளையும் ஒடித்துக் கீழே போட்டான். அவை சிவலிங்கத்தின்மீது விழுந்தன. சிவ சிவ என்னும் சொல் அவன் மனத்தைவிட்டு அகலவில்லை. இரவு முழுதும் ஒரு மிருகம்கூட வரவில்லை. அவன் தூக்கமும் கொள்ளவில்லை.

முதல் சாமத்திலே ஒரு மான் அங்கே நீர் பருக வந்தது. அதன்மீது அவன் அம்புவிட எண்ணினன். அம் மானே, "வேடுவ! என்னை ஏன் கொல்லக் கருதுகின்றாய்?" என்று வினவியது. "என் குடும்பத்துக்கு உணவு வேண்டுமே," என்றான் வேடன். மான் அதுகேட்டு, "அப்பனே! நல்லது. வீட்டிலே என் பிள்ளைகள் தனியே இருக்கும். சுற்றத்தாரிடம் அவைகளை ஒப்படைத்துவிட்டு வருவேன். இது சத்தியம்," என்று சொல்லிற்று. வேடன் அதனை நம்பி விடுத்தான். நடு நிசியிலே பெண் மான் ஒன்று அக் குளக் கரை சேர்ந்தது. உடனே குரூரன் வில்லை வளைத்து நாண் ஏற்றினன். மான் அது கண்டு, "வனசர! நான் உனக்கு இரையாக இஷ்டமே. வீட்டிலுள்ள என் கணவனிடம் விடைபெற்று வருவேன். இது முக்காலும் உண்மை," என்று மொழிந்தது. அந்த மானையும் வேடன் துன்பம் செய்யாமல் சும்மா விடுத்தான்.

மூன்றாம் சாமத்தில், கொழுத்த ஆண் மானொன்று அம்மரத்தடி குறுகிற்று. குரூரன் அம்பு தொடுத்து அதனையும் குறி பார்த்தான். ஆண் மான், "அப்பனே! நான் மட்டும் உணவு ஆவதில் பயனில்லை. என் குடும்பத்தாரையும் கூட்டி வருவேன். ஆண்டவன்மீது ஆணை," என்று சொல்லிப் போயிற்று. வேடனோ முன்போல், வில்வ இலையைப் பறித்து வீசுவதும், சிவ சிவ என்று துதிப்பதுமாய் இருந்தான். நான்காம் ஜாமத்தில் மூன்று மான்களுமாகச் சேர்ந்து, வேடுவனை நண்ணின; இதற்குள் அருணோதய காலம் கிட்டிவிட்டது. மான்களின் சத்திய வசனம் கண்டு அவன் வியப்புக் கொண்டான். இரவு முழுதும் விழித்திருந்து, சிவ சிவ என்று துதித்து, வில்வத்தையும் சிந்தியதனால், அவனுக்கு நல்லறிவு பிறந்தது.

உடனே அவன், "அந்தோ! பிற உயிர்களை வருத்தி, இன்றளவும் காலம் கழித்தேன். மான்களுக்குள்ள நற்குணமும் எனக்கு இல்லாமல் போயிற்றே. எனக்கு என்ன

கதி கிடைக்குமோ?" என்று கலங்கித் துடித்தான். அவ்வேளை சிவபெருமான் அவன் முன்னே தோன்றி, "அன்ப! சிவராத்திரியன்று என்னைப் பூசை செய்வார்க்கு இம்மை மறுமை இரண்டும் தருவதாக வாக்களித்துள்ளேன். நீ நமது பக்தன் ஆனாய். மறுபிறப்பிலே நீ வேடுவர்தலைவனாகப் பிறந்து விழுமிய ஞானங்கொண்டு, குகன் எனும் நாமம் தாங்கி, இராமபிரானிடம் நட்புப் பூண்டு நற்பதம் பெறுவாய்," என்று அருளிப் போனார். அங்ஙனமே குரூரன் மறுபிறப்பில் குகனாகத் தோன்றினன்.

## 11. கன்மாட பாதன் கதை

சூரியகுல வேந்தரில் ஒருவன் பெயர் மித்திரசகன். அவன் மனைவி மதயந்தி எனப்படுவாள். ஒருநாள் அவன் வனம் சென்று வேட்டையாடிக் கொடிய விலங்குகளைக் கொன்று குவித்தான். அப்போது அரக்கர் இருவர் அவனுடன் போருக்கு வந்தனர். மூத்தவனை அவன் கொன்று போட்டான். இளையவனோ அது கண்டு, வஞ்சனை வழியில் பழி வாங்கக் கருதி ஓடிப் போயினன். அரசன் தனது நகரடைந்து வாழ்ந்து வரலானான். அந்த இளைய அரக்கனோ அந்தண வடிவம் தாங்கி, அரண்மனையிலே சமையல் வேலையில் அமர்ந்தனன்.

ஒருநாள் வஸிஷ்டர் அம் மன்னவன் மாளிகையில் விருந்துண்டார். மாய வேதியனோ நரமாமிசத்தைப் பக்குவப்படுத்திப் பரிமாறினன். அவ் வஞ்சனையை வஸிஷ்டர் அறியவில்லை. எனவே பன்னீராண்டு அரக்கனாகும்படி அரசனுக்கு அவர் சாபம் கொடுத்தார். மன்னவனோ உண்மை உணர்ந்து பதறி, "ஐயனே! என்மீது பிழையில்லை; எல்லாம் மாயவேதியனது வஞ்சனையாம். இதனை அறியாமல், என்னைச் சபித்தீர். ஆதலின் உம்மையும் நான் சபிப்பேன்," என்று கையில் நீரை எடுத்தான். உடனே மதிமந்திரி போன்ற மதயந்தி தோன்றி, "என் அரசே! கொண்டகோபம் தணிக. குலகுருவையும் சபிப்பார் உண்டோ?" என்று கூறித் தடுத்தனள். அரசன் அதுகேட்டு, அச்சாப நீரைக் கீழேவிட்டனன். அது அவன் காலில் வீழ்ந்தது. உடனே பாதம் கறுக்க, கன்மாடபாதன்

எனும் பெயர் தாங்கிக் கொடிய அரக்கனாகி உயிர்களை எல்லாம் அடித்துப் புசித்து அவன் அலைந்து திரியலானான்.

ஒரு தினம் கானக வழியிலே ஓர் இருஷி குமாரன் தனது இளமனைவியுடன் போவதைக் கண்டான் கன்மாடபாதன். நரமாமிசங் கண்டு நாக்கில் நீர் சொட்டியது. உடனே இருஷிமைந்தனை அவன் கொல்லத் துணிந்தனன். அதுகண்ட மனைவி நடுநடுங்கி, "அரசனாயிருந்து அரக்கனாகத் திரியும் பாவம் போதாதோ? என் நாதனையுமா கொன்று புசிக்கவேண்டும்? வேண்டாம், எனக்கு மாங்கல்யப் பிச்சை கொடு," என்று இரந்து கேட்டனள். கன்மாடபாதன் அதனைக் கவனியாமல், துறவி மகனைக் கொன்று தின்று கொக்கரித்தான். மனைவியோ கணவனது எலும்புகளைப் பொறுக்கித் தீ மூட்டி அதில் குளித்தனள்.

பன்னிரண்டு வருஷம் தீர்ந்ததும், பழைய வடிவங் கொண்டான் கன்மாடபாதன். உடனே அயோத்திக்குப் போக எண்ணியும், இருஷிமைந்தனைக்கொன்ற பாவமோ பேயுருக் கொண்டு அவனை வெருட்டியது. பிரமஹத்தி தோஷம் தீரவேண்டும் என்று பல முனிவரையும் அவன் அடுத்துக் கேட்டான். இமயமலைச் சாரலில் உள்ள கோகர்ணம் சேர்ந்து, மகாசிவராத்திரி விரதம் பூண்டு, மகாதேவனை வழுத்தினால் மாபாவம் தொலையும்," என்று அனைவரும் சொல்லினர். அவ்விதமே மித்திரசகன் கோகர்ணம் சேர்ந்து விரதம் பூண்டு, மாபாதகம் நீங்கி, முன்போல் மகிமைகொண்டு மன்னவனாயினன்.

## 13. சுகுமாரன் கதிபெறல்

குஞ்சர நகரில் சுகுமாரன் எனும் வேதியன் ஒருவன் இருந்தான். அவன் மன்மதனது சாயல்போன்றவன்; மதனாகமத்தை நன்கு உணர்ந்தவன்; வேத சாஸ்திரங்களிலும் வல்லவன். பலாப்பழத்தில் ஈ மொய்ப்பதுபோல், அவன் வடிவழகுகண்டு, மாதர் மொய்த்து நிற்பர். அவனை அடைய விரும்பினாள் ஒரு மாது. அது கைகூடவில்லை. "இவன் கற்பரசியரைக் கெடுக்கும் துஷ்டன்," என்று அரசனிடம் அவள் முறையிட்டனள். அதுகேட்ட அரசன்

அவனைக் காட்டுக்கு ஓட்டிவிட்டான். அங்கே நீசகுல மாதொருத்தி தென்பட்டனள். அப்புலைச்சியை மணந்து மதுபானமுங்கொண்டு அவன் மதி பிசகி வாழலானான்.

இருவருக்கும் நான்கு புத்திரிகள் பிறந்தார்கள். பிழைக்க வழியின்றி அவன் வழிப்பறிசெய்து குடும்பத்தைக் காத்துவந்தான். புலையமாது மாண்டு போயினள். உடனே அவன் தன் புத்திரிகளையே மனைவியாகக் கொண்டனன். கிரஹண புண்ணிய காலத்தில் கொற்றவனிடம் தான தருமம் வாங்கிவந்த மறையவரையும் அவன் வழி மறித்து அபகரித்தான். அது செய்தி அரசனுக்கு எட்டியது. உடனே கொற்றவன் தனது வீரரை ஏவினான் சுகுமாரனைத் தேடிக் கொணர். வீரரின் வரவு கண்டு சுகுமாரன் மறைந்துகொண்டான். காலக்கிரமத்தில் தன் புத்திரிகளிடம் அவனுக்கு மைந்தர் நால்வர் தோன்றினர்.

ஒரு தினம் அவன் நடுநிசியில் திருடச் சென்றான். அன்று மகாசிவ்ராத்திரி. மக்கள் அனைவரும் சிவாலயத்தில் குழுமியிருந்தனர். அதன் காரணம் அறியாத சுகுமாரன், தொலைவில் நின்று, வேடிக்கை பார்த்தான். சிவ சிவ எனும் சத்தம் அவன் காதில் பட்டது. சின்னாளில் அவன் மாண்டுபோனான். யமதூதர்வந்து, அவனைப் பாசக்கயிறு கொண்டு கட்டினர். இதற்குள் சிவ கணங்கள் வந்து அத்தூதரை ஓட்டி, அவனைக் கைலாயங்கொண்டு சென்றார்கள். இடைவழியில், யமதர்மன் தோன்றி, "பஞ்ச மகாபாதகம் புரிந்த இவன் படுநரகிலன்றோ கிடக்கவேண்டும்," என்றான். சிவராத்திரியன்று தரிசனஞ்செய்த பலன் வீண்போமோ? முக்கண்ணன் கருணைகூர்ந்து, அவனுக்கு முத்தியளித்தனன். கொடும்பாவியரும் சிவ்ராத்திரியன்று சிவதரிசனம் செய்து முக்தராகலாம்.

பக்தருக்கும் முக்தருக்கும் பிறப்பிடமானது பாரத பூமியே. புண்ணிய பூமியில் பிறந்த நாம், மின்போல் அழியும் உடலையும், சகடக்கால் போலவரும் செல்வத்தையும், நம்பி மோசம் போகாமல், மகா தேவனை நம்பி மகிமை பெறுதல் வேண்டும். சுபம்!

---

இரண்டாம் பதிப்பு, ஐயாயிரம் பிரதிகள், 3—3—1932.

KESARI PRINTING WORKS, MADRAS.

ஸ்ரீ சாரதா சதங்கை, மணி - 8

கல்வி இம்மை பயக்கும்! நம்மை விளக்கும்!!

ஸ்ரீ

# வீரசிங்க அமரசிம்மன்

அல்லது

# ஆக்ரா நகரில் ரணகளம்



எம். எஸ். சுப்பிரமணிய ஐயர்

எழுதியது

விலை காலணு

தமிழன்பருக்கும் பெரியாருக்கும் வந்தனம்!

ஸ்ரீ

சாரதா சதங்கை மணி

1. கற்பாசி
2. கிருஷ்ண குமாரி
3. சடையப்ப வள்ளல்
4. நீலி பராக்கிரமம்
5. முன்பாசக் கதைகள்
6. மன்மத விலாசம்
7. சிவராத்திரி மான்மியம்
8. வீரசிங்க அமரசிம்மன்
9. அறுபத்துமூவர் மகிமை
10. பிரதாப சிம்மன்
11. விகடக் களஞ்சியம்
12. ஜய வீர சிங்கம்

ஏஜண்டுகள் தேவை.

நல்ல கமிஷன் உண்டு

உடனே எழுதவும்

அன்பர்காள்!

உலகிலே நாள்தோறும் எத்தனையோ உயிர்கள் உதிக்கின்றன; மறைகின்றன; மனிதரும் பிறக்கின்றனர்; இறக்கின்றனர். பிறவி எடுத்தால், புவிக்கு நல்லவன் என்று பேர் விளங்க வேண்டும்; அல்லது மெய்ஞ் ஞானி என்று அவதரிக்க வேண்டும்; இல்லையேல் ஞான சூர வீரன் இவன் என்று திசை மெச்சவேண்டும்; இல்லை என்று இரப்போர்க்கு இல்லையெனு வள்ளலாக வாழ வேண்டும்; அதுவும் இன்றேல் கல்வி பல கற்று, மகா வித்துவானாக விளங்குதல் வேண்டும்; அல்லது அறிவு நிரம்பிய துரைமக்களாகச் சோபிக்க வேண்டும். இவ்விதம் புகழ் பெறுமல், புவியில் பிறப்பதினும் இறப்பதினும் பயன் இல்லை. அமரசிம்மன் என்பானே வீரசிங்கம் எனப் பெயரும் புகழும் வாய்ந்து விளங்கினன். அவன் சரிதம் ஸ்ரீ சாரதா சதங்கையின் எட்டாவது மணியாக வெளி வருகின்றது. இங்ஙனம் வாரம் ஒரு நூல் வெளியாகும். அன்பரின் ஆதரவும் ஆண்டவன் அருளும் நாடி நிற்கின்றோம். சுபம்!

எம். எஸ். சுப்பிரமணிய ஐயர்,
ஆசிரியர்; ஸ்ரீ சாரதா சதங்கை மணி.
மயில்வாகன் கம்பனி,
32, ஐயப்பசெட்டி வீதி, மண்ணடி, மதராஸ்.

கல்வி இம்மை பயக்கும்! நம்மை விளக்கும்!!

ஸ்ரீ

# வீரசிங்க அமரசிம்மன்

அல்லது

# ஆக்ரா நகரில் ரணகளம்

---

## 1. முன்னுரை

வீரியம் பெரிதா? காரியம் பெரிதா? வீரியமே பெரிது என்போம். காரியமே பெரிது என்று கலங்குவோர் மனிதர் ஆகார். வீரம் இல்லா வாழ்வு ஒரு வாழ்வு ஆமோ? வீரம் விளைத்து வெற்றி கொள்ள, விலங்குகளும் முயலா நிற்கும் எனவே ஆறறிவு படைத்த மானிடர் வீரத்தைக் கைவிடல் கூடுமோ? உலக வாழ்வோ பேரலை பொருந்திய சாகரம்போலாகும். மலை போல் உயரக் கிளம்பும் அலைகள் கொண்ட கடலைக் கடக்க நீராவிக் கப்பல் தேவை. அவ்விதமே, சம்சார சாகரத்தைக் கடக்க, வீரம் மிகவும் அவசியம். வீரம் இருக்குமாயின், வலி தோன்றும், வாழ்வும் வந்தடையும்.

வீரம் என்பது உள்ளத்தே தோன்றும் ஊக்கத்தின் உயர்வாம். ஊக்கம் உதிக்கவே, அஞ்சாமை எனும் அருங்குணம் வளரும்; கஷ்டநஷ்டங்களைச் சமாளிக்கும் ஆற்றலும் பெருகும். தூய்மையும் வாய்மையும் உடையாருக்கே வீரம் இருக்கும். அவ் வீரம் உயிரினும் சிறந்த உயர்குணமாம். வீரத்தின் அளவினுக்கு ஏற்றவாறு செல்வமும் கீர்த்தியும் விளையும். வீரம் என்பது பிறவிக் குணமே! அதனை நாம் விலை கொடுத்து வாங்கவோ, செயற்கையால்

அடையவோ முடியாது. பரம்பரைச் சம்பத்தாகவே வீரத்தைப் பெற்று நாம் மகிழக்கூடும்.

வாழ்வில் மட்டுமின்றி சாவிலும் வீரம் வேண்டும். நோய் நொடிகொண்டு சாக, சுத்தவீரர் சம்மதியார். வீரத்தைக் கண்டு யாவரும் வியப்பர். வீரம் விளைத்து வாகை சூடும் மக்களை எந்நாட்டினரும் மறக்க முடியாது. ஆனது பற்றியே, அன்னாரின் ஞாபகத்தை நிலைநாட்ட வீரக்கல், வீரச்சிலை முதலியன அடித்துவைத்தல் வழக்கம். அஃது டன், பாமாலையும் புகழ்மாலையும் சூட்டிச் சிறப்புச் செய்தலும் உண்டு. நமது கதாநாயகமான அமரசிம்மன் என்பான் வீர விளக்காகத் துலங்கியவன். அவன் பெருஞ் சரிதம் அடுத்த அதிகாரங்களில் பேசப்படும்.

## 2. தந்தையின் தவிப்பு

பரத கண்டத்தில் ஐம்பத்தாறு தேசங்கள் உண்டு. அவற்றில் ஒன்று இராஜபுதனம். இராஜ வம்சத்தைச் சேர்ந்தோர் அங்கே வசித்து வருகின்றனர். அவர்களுக்கு இராஜபுத்திரர் என்று பெயர். அதனால், தேசத்திற்கும் இராஜபுதனம் என்று பெயர் வந்தது. இராஜபுதனத்திலே பல நாடுகள் உண்டு. அந்நாடுகளில் ஒன்று மாருவாரம் எனப்படும். அதன் தலைநகரின் பெயர் ஜோதிபுரி. அந்நகரின் பெயரைக் கொண்டே, நாட்டையும் ஜோதிபுரி என்று அழைக்கின்றனர்.

பதினேழாம் நூற்றாண்டில், அதனை ஆண்டு வந்த அரசன் பெயர் கஜ சிம்மன். அவனுக்குப் புதல்வர் இருவர் பிறந்தனர். அவர்களில் மூத்தவன் பெயர் அமர சிம்மன். இளையவனே யசோவந்தன் எனப்படுவான். அக்காலத்தில் டில்லி சக்கரவர்த்தியாக விளங்கியவன் ஷா ஜஹான். கஜ சிம்மனுக்கும் ஷா ஜஹானுக்கும் நேசம் அதிகம். தென் இந்தியாவை வசப்படுத்த ஷாஜஹான் பெரிதும் முயன்றான். அப்போது கஜசிம்மன், டில்லி வேந்தனுக்குப் பேருதவி புரிய நேர்ந்தது. தந்தைக்குத் துணையாக அமரசிம்மனும் போருக்குப் போயினன்.

காய்க்கும் மிடுக்கு பூவில் தெரியும் என்பர். அவ்விதமே அமரசிம்மனது வீரமும் திரமும் அப்போரில் புலப்

பட்டன. பிள்ளையின் பெருவீரங் கண்டு பிதாவும் பிறரும் களிப்பு மிகக் கொண்டனர். ஷாஜஹானுக்கோ அளவிலா அன்பும் அதிசயமும் பிறந்தன. டில்லி வேந்தன் படைஞர் வெற்றி மாலை சூடியதற்கு அமரசிம்மனது ஆண்மையே காரணம். அது கேட்டு மாருவார நாட்டார் அனைவரும் ஆனந்தம் எய்தினர். சிலரோ, அவனை ஆண்மைக்கு ஓர் இருப்பிடம் என்றனர்; வேறு சிலரோ அவனை வீரத்தின் விளை நிலம் என்றனர்; மற்றும் சிலரோ, அமரசிம்மனே வீரத்தன்மைக்கு ஒரு தாயகம் என்றனர்.

நாளடைவில் கஜ சிம்மனுக்கு அந்தியகாலம் கிட்டியது. இளவரசான அந்த அமரசிம்மனுக்கே முடிசூட்ட வேண்டும் என்று அவன் ஆசை கொண்டான். மூத்த பிள்ளைக்கே பட்டாபிஷேகம் செய்தல் முறைமை ஆகும். அதுவே சரி என்று அனைவரும் சொல்லினர். ஆயினும் விதியின் வலியோ வேறாக இருந்தது. யசோவந்தன் தாய் வந்து, "அரசே! சொன்ன சொல் தவறலாமோ? என்னை மணக்கும் காலத்தில், என் மகனுக்கே முடிகவிப்பதாக மொழிந்தீர்கள். அந்த வாக்கு என்னாவது? எண்ணித் துணிக கருமம்," என்றனள். கஜசிம்மனோ இருதலைக் கொள்ளி எறும்புபோல் விழிக்கலானான். தசரத சக்கரவர்த்திக்கு நேர்ந்த தர்ம சங்கடமே கஜ சிம்மனுக்கும் நேரலாயிற்று. பல சொல்லிப் பயன் என்ன? யசோவந்தனே மாருவார மன்னவனாக முடிசூடி அரியணை ஏறினான்.

## 3. அசூயைக்காரர் சூழ்ச்சி

முறை யற்ற செயல் கண்டு, மக்களிலே பலரும் கொதித்தனர். அமரனது தோழரில் பலரோ ஆத்திரம் கொண்டு, உடைவாளை உருவி நின்றனர். அமரசிம்மன் அது கண்டு, "அன்பர்காள்! ஆத்திரம் ஏன்! ஆவேசமும் எதற்காக? தோள் இரண்டும் எனக்குத் துணை உண்டு; போதாக் குறைக்கு வாள் வலியும் காத்து நிற்கின்றது. அந்த இருவகை வலியும் கொண்டு, வேற்று நாடு சென்று வீறு காட்டலாம். கடை நாளில் என் தந்தை கண் கலக்கம் கொள்ள வேண்டாம். யசோவந்தனே மாருவாரத்

தினை அளட்டும். இட்டார்க்கு இட்டபடியே எதுவும் கிட்டும்,'' என்று அனைவரையும் சாந்தம் செய்தான்.

இளவரசுக்கு அரசு கிட்டாவிடின், துக்க கோலத்துடன் அவனை நாடுகடத்தல் அந்நாட்டு வழக்கம். அவ்விதமே, அமரசிம்மனை ஒரு கறுப்புக் குதிரையின் மீது அமர்த்தி, துக்ககோலத்துடன் ஜோதிபுரியின் எல்லைவரையில் அவனைக் கொண்டுபோய் விட்டனர். பூவும் மணமும்போல் பொருந்தி வாழ்ந்த ஐந்நூறு தோழரும் தம் வீடு வாசலைத் துறந்து அமரனுடன் புறப்பட்டுச் சென்றனர். அமரசிம்மனது பிரிவும் தோழரது பரிவும் கண்டு, மாருவாரத்தார் அனைவரும் மனம் புழுங்கலாயினர். புல் பூண்டுகளும் செடி கொடிகளும் வாடி வதங்கின.

டில்லி வேந்தனை ஷாஜஹானுக்கு அச் செய்தி எட்டிற்று. உடனே அவன் ஒரு தூதனை அனுப்பி அமரசிம்மனை வரவழைத்து, அணைத்துக் கொண்டான். கற்றோரைக் கண்டு கற்றோர் காமுறுவர். அவ்விதமே, வீரனைக் கண்டு வீரன் நேசம் கொள்வான் அன்றோ? சபைக்கு அலங்காரமாக அமரன் வீற்றிருந்தால் போதும் என்பதே அச் சக்கரவர்த்தியின் கருத்து. அதுபற்றி அவன் அமரசிம்மனுக்கு நாகதுர்க்கம் எனும் ஒரு நாடு தந்தான்; ஐயாயிரம் வீரருக்குத் தலைவன் எனும் பதவியும் கொடுத்தான்; இன்னும் சிறப்புப் பலவும் செய்தான். அது கண்டு அமரனுக்கும் அவன் தோழருக்கும் சற்றே ஆறுதல் பிறந்தது. கஜசிம்மனும் சாந்தியுடன் கண்மூடினன்.

அன்றுமுதல் அமரசிம்மன் நாள்தோறும் ஆக்ரா நகரிலே இராஜசபையில் ஆடம்பரமாக வீற்றிருப்பான்; விரும்பிய நேரங்களிலெல்லாம் ஷாஜஹானுடன் சதுரங்கம் விளையாடுவான்; சக்கரவர்த்தி வேட்டைக்குப் போகும்பொழுது, உடன் சென்று உயிர்த் தோழனே போல் உதவுவான்; மாலை நேரத்திலே மன்னர் மன்னவனுடன் மகிமையாகச் சவாரி போவான். இங்ஙனம் இணைபிரியா அன்றிலைப்போல் இருவரும் நேசமாக வாழ்ந்து வந்தனர். அந் நேசமோ நாளுக்கு நாள் பூத்துக் காய்த்துப் பழுத்துக் குலுங்கத் தலைப்பட்டது. அரசவையில் இருந்த மொகலாய வீரரும் பிறரும் அது கண்டு, அழுக்கை

கொண்டு கிடந்தனர்; சமயம் பார்த்து இருவருக்கும் சந்து உண்டுபண்ணி, நேசத்தைக் குலைக்கவும் நெடுஞ் சூழ்ச்சி புரியா நின்றனர்.

## 4. சினத்தின் விளைவு

அரச போகமும் வைபவமும் கண்டு அமரன் மனக்களிப்புக் கொள்ளவில்லை. அவனது தோள் தினவு கொண்டு துடித்தது. போர் முனை சென்று வீரம் விளக்க வேண்டும் என்று அமரசிம்மன் ஆசைகொண்டு நின்றான். கண நேரமும் அவனை விட்டுப் பிரிய ஷாஜஹானுக்கு மனம் வரவில்லை. என்ன செய்வான் அமரன். தோள் தினவு எடுத்த போதெல்லாம் அவன் கானகம் சென்று விடுவான்; அங்ஙனம் வேட்டைமீது சென்றால், இரண் டொரு தினங்களில் அவன் திரும்பி வாரான்; பத்துப் பதினைந்து தினங்கள் கழிந்த பின்பே திரும்புவான். அந் நாட்களில் சக்கரவர்த்தியோ பேடையைப் பிரிந்த பறவை யைப்போல் பதறி நிற்பது வழக்கம்.

அமரசிம்மன்மீது அசூயை கொண்டோர் அதுவே தருணமெனக் கொள்வர்; உடனே அரசனை அடைந்து, "மன்னவ! நமது பெருஞ் சபையின் மதிப்பை அமரன் கவனிப்பதில்லை; சபையில் நுழையுங் காலையில், சிம்மா சனத்தை நோக்கி அவன் சலாம் செய்வதுமில்லை; சமுகம் விட்டு அகலும் பொழுதும், அவன் உத்தரவு பெறுவ தில்லை; சபையின் முறைமையும் மகிமையும் கெடலாமோ? நாளடைவில் நமது சபை சீர்குலைந்து போமே!" என்று பலவாறு ஓதி வருவர். ஆரம்பத்திலே ஷாஜஹான் அவ் வார்த்தைக்குச் செவி சாய்க்கவில்லை. எனினும் கரைக்கக் கரைக்கக் கல்லும் கரையும் அல்லவா?

முடிவில் ஷாஜஹானது சித்தம் மாறிவிட்டது; அமரன்மீது அவனுக்கு அருவருப்பும் உண்டாயிற்று. ஒரு நாள் அமரனை நோக்கி, "வீர! சபையின் முறைமையைப் புறக்கணித்தல் அழகோ? பன்முறை பொறுத்துப் பார்த் தோம். பொறுமைக்கும் ஓர் எல்லை உண்டு. மீண்டும் பிழை புரியின், அபராதம் விதிக்கப்படும்," என்று ஷாஜ ஹான் சினந்து பேசினான். அதற்கு அமரன், "அரசே!

வேட்டையாடவே போயிருந்தேன் ; அரசவையை அவமதிக்கக் கனவிலும் கருதியதில்லை. இங்கிலையில் அபராதம் விதிக்கப்படுமோயின், எனது உடைவாள் ஏற்ற பதில் தரும்,'' என்று கம்பீரமாக மறுமொழி புகன்றனன்.

அச்சமயம் அருகில் இருந்தவர்களோ அரசனுக்குத் தூபம் போட்டனர் ; விழுந்த பிள்ளைக்கு அரிவாள் மணை உதவுவது போலும் பேசலாயினர். ஷாஜஹானுக்கோ கோபம் பொங்கிவிட்டது. "பெற்றெடுத்த அன்னையேயானாலும், அரசனுக்கு மரியாதை புரியவேண்டும். இதனை அமரன் மதித்தானில்லை ; மற்று, வாள் வரிசை பேசுகின்றான். இம் முளைப்பை முளையிலேயே கிள்ளிவிடல் வேண்டும் ; இன்றேல் பின்னர் அனர்த்தம் விளையும்,'' என்று கூறி, அசூயைக்கார் அக் கோபத்தை வளர்த்தனர். உடனே, " அமரனுக்கு ஐம்பது காசு அபராதம்,'' என்று ஆணை பிறந்தது. அமரனோ அது கேட்டு, ஏதும் உரையாமல், தனது மாளிகை நோக்கிப் போயினன்.

## 5. அல்லோல கல்லோலம்

அசூயைக்காரரில் ஒருவன் சலபத்கான். அவனோ, ஷாஜஹானது அரிய படைத்தலைவரில் ஒருவன். அவன் மறுதினம் அமரசிம்மனது மாளிகை சேர்ந்தான் ; அதிகாரி விட்டுக் கோழி முட்டை, குடித்தனக்காரன் வீட்டு அம்மிக் குழவியை உடைக்கும் என்பர். அதுபோல் அவன் மட்டு மரியாதையின்றி அமரனது அந்தப்புரம் சேர்ந்து, அபராதத் தொகையை உடனே செலுத்தும் படி சீறிக் கேட்டனன். அமரன் அது கண்டு, "சலபத்! இராஜபுத்திரரின் தன்மையை நீ சிறிதும் அறியாய்! மட்டு மிதமின்றிப் பிதற்றுகின்றாய் ! இனி ஒரு கணமும் நீ இங்கு நிற்றல் கூடாது ; நிற்பின், உன் தலை நிலத்தில் உருளும்,'' என்று கர்ஜனை செய்தான்.

சலபத்கானுக்கு ஒன்றும் தோன்றவில்லை. உடனே அவன் அரசவை குறுகி, அமரன்மீது கோள் சொல்லிக் கோபம் மூட்டினன் ; அருகே இருந்தோரும், "வேந்தே! இது அடுக்காது. சமுகத்திலிருந்து சென்ற தூதுவனை அமரன் அவமதித்துள்ளான். அஃது அரசையே அவ

மதித்ததாகும். அயலானை அணைத்து ஆதரித்த பலனைப் பாருங்கள்,'' என்று கூறினர். உடனே ஷாஜஹான் ஓர் ஆளை விடுத்து, அமரனை அத்தாணி மண்படத்துக்கு அழைத்தான். அமரனும் வந்து அரசனைக் கண்டனன்.

வழக்கம்போல் அவ்வேந்தன் பரிவுடன் பேசவில்லை; அவன் முகத்திலே கோபக்குறிகள் தென்பட்டன. அப்போதும் சலபத்கான் முதலியோர் குண்டுணி கூறி நின்றனர். அமரனுக்கோ அது கண்டு கோபம் பொங்கிவிட்டது. அஃதுடன், அரசுரிமையை இழக்க நேர்ந்த சமயத்தில், ஷாஜஹான் அதற்கு உடந்தையாக இருந்ததும், அமரனுக்கு ஞாபகம் வந்தது. கோபம் பொங்கிவிட்டால் இராஜபுத்திரருக்குத் தலைகால் தெரியாது.

அமரசிம்மன் உடனே தனது ஈட்டியை உருவினன். அவ்வளவில் சலபத்கானது சிரம் தரையில் உருண்டு ஓடலாயிற்று. பின்பு அமரன் தனது உடைவாளை உருவி, ஷாஜஹானை நோக்கி ஓங்கி வீசினான்; அரசன் அமர்ந்திருந்த அரிய மயிலாசனத்தின் கம்பங்கள் கிடுகிடென நடுங்கலாயின. தூணொன்று இரண்டாகப் பிளந்து வீழ்ந்தது; இதற்கிடையில் அம்மன்னர் மன்னன் மயிரிழை தப்பி, அந்தப்புரத்தில் ஓடி ஒளிந்துகொண்டான். இன்றேல் அவன் அன்றே அந்தகன்உலகு சேர்ந்திருப்பான்.

அப்பால் அமரனது வாளாயுதமோ அசூயைக்காரரை நோக்கிப் பறந்தது. கணப் பொழுதில் தலைகள் பல தரையில் உருண்டன; உடலங்களோ பூமியில் சாய்ந்தன. சபையோர் பலரும் உயிர்தப்பினால் போதுமென மூலைக்கு ஒருவராக ஓட்டம் பிடித்தனர். ஒருவரேனும் அமரனை எதிர்த்து நிற்கத் துணியவில்லை. ஒரு முகூர்த்த நேரம் ஆக்ரா நகரிலே அரசவைமுழுதும் அல்லோலகல்லோலப்பட்டது. சபையெங்கும் இரத்தம் பெருக்கெடுத்தது. எங்கும் நிணத் துண்டுகள் நிரம்பிக் கிடந்தன. அமரனுக்கு வகை சொல்ல ஒருவராலும் இயலவில்லையே என்று ஷாஜஹான் ஏக்கம் கொண்டு கிடந்தான். அந்தப்புர மாதர்களோ அழுது அரற்றத் தலைப்பட்டார்கள். ஒரு கணத்திற்குமுன் ஆனந்த நிலயமாய் இருந்த அரண்மனை அழுகை நிலயமாயிற்று!

## 6. வாள்வீச்சு

முடிவில் அமரசிம்மனது மாமன் அர்ச்சுன சிம்மனை அழைத்து, ஷாஜஹான் வேண்டிக்கொண்டனன். உடனே அர்ச்சுனன் அதற்கு இணங்கி, மருமகனைச் சாந்தம் செய்வான்போல், அமரனை அணுகினன். சுத்தவீரனும் அமரனும் மாமன் வருகையைக் கண்டு, சற்றே கோபம் தணியலானான். மறு கணத்திலே மாமனது வஞ்சனை அவனுக்குப் புலப்படலாயிற்று. உடனே அமரன் உறுத்து எழுந்தனன். இதற்குள் அர்ச்சுன சிம்மனுக்குத் துணையாக வீரர் பலர் வந்து தோன்றினர். அமரசிம்மன் ஆண் சிங்கம் போல் கர்ஜனை புரிந்து, அர்ச்சுனனைப் படுகாயப்படுத்தினன். அப்போது அமரசிம்மனுக்கும் மார்பிலே பெருங் காயம் உண்டாயிற்று.

அது கண்டு அர்ச்சுன சிம்மனது துணைவர் புற்றீசல் போல் கிளம்பி அமரன்மீது பாய்ந்தனர். அமரனோ வீச்சொன்றுக்கு ஐந்தும் ஆறுமாகப் பல வீரரை வெட்டிக் குவித்தான்; அர்ச்சுன சிம்மனையும் கீழே தள்ளி, அவன் மீது அமர்ந்து, "பதரே! உறவு என்பதையும், எனது உள்ளக் கருத்தையும் உணராமல், வஞ்சனையாக எழுந்து வந்தனை யன்றோ? என் உயிர் அகலுமுன்னம், உனது ஆருயிர் பறந்தோடுவதைப் பார்" என்று கூறி, ஈட்டி கொண்டு, அவன் குடரைக் கிழித்தனன் பெருவீரனான அர்ச்சுன சிம்மனும் பழிவாங்கப் பெரிதும் முயன்று பார்த்தான்; ஆயினும் முடியவில்லை. அவ் வேளை அர்ச்சுனனது துணைவனொருவன் அமரனுக்குப் பின்புறம் வந்து, வாளை வீசினன். உடனே அமரன் வீரசுவர்க்கம் புக நேர்ந்தது.

அர்ச்சுனனுக்கும் அமரனுக்கும நடந்த போரை ஷாஜஹான் கேள்வி யுற்றனன்; அமரனது முடிவை உணர்ந்ததும், சக்கரவர்த்திக்குச் சற்றே பயம் தணிந்தது. எனினும், பழைய பாசம் வந்து மூடிக்கொள்ள, "அந்தோ! அருமந்த வீரனை, வீர விளக்கை, உயிர்த் தோழனை இழந்தோமே; பொறாமைக்காரரின் கூற்றைக் கேட்டுக் குரோதம் கொண்டோம். அதன் பலன் கைமேல் கிட்டிவிட்டது, இனி என் செய்வது? அழுது புரண்டாலும் மாண்ட நண்பன் மீண்டு வாரான்," என்று எண்ணி எண்ணி நைந்

தனன். மொகலாயரில் சுத்த வீரராய் உள்ளோரும் அமரசிம்மனது மனவலியும் வாள்வலியும் கேட்டு, மூக்கில் விரல் வைத்து வியந்து ஏத்தினர்.

## 7. இரணகளம்

அமரன் கொலையுண்ட பின்னரே அரண்மனையில் நிகழ்ந்த இரணகளம் நகரெங்கும் பரவியது. அவன் நேசரான ஐந்நூறு வீரரும் அது கேட்டுத் தாயிழந்த கன்றே போல் துடித்தனர். "உயிருக்கு உயிரான நேசனுக்காக வீடு வாசல்களைத் துறந்து வந்த நாம் இனி வாளா இருத்தல் தகாது, உயிரற்ற உடல் இருந்தும் யாது பயன்? அன்றே அரசு தேடித் தருவதாக ஆர்த்து எழுந்த எங்களை அடக்கி ஆண்ட அமர சிம்ம! பொன்னுலகை ஆளப் போயினையோ? அங்கே நீ தன்னந் தனியே இருத்தல் கூடாது. ஆதலின் நாங்களும் அங்கு வந்து, உனது அருகிருந்து, குற்றேவல் புரிந்து நிற்போம். வீர விளக்கே! வாள் வரிசை காட்டி இதோ வருகின்றோம், வருகின்றோம்," என்று கூறி எழுந்தனர். கடை நாள் போருக்கு அடையாளமாக அன்னவர் அனைவரும் மஞ்சள் உடை பூண்டனர்; நெற்றியிலே குங்குமத் திலகம் தீட்டினர்; அரையிலே ஈட்டியும் வாளும் எடுப்பாகச் செருகினர். பின்பு அவர்கள், அமரனது அரிய மனைவி சுசீலா தேவியை அடைந்து, "அன்னாய்! அம்மைபவானி நம்மை அழைக்கின்றாள். எங்களுக்குத் தலைமை வகித்து, இரணகளத்தில் புகுந்து, பழிவாங்கிய பின்னர் பாருலகை விடுத்து, மேலுலகு செல்வோம்," என்று சிங்கநாதம் செய்தனர்.

அதுகேட்ட சுசீலை போர்க்கோலம் பூண்டு பெண் சிங்கம்போல் சீறிக் கிளம்பினள். அத்தேவியின் தலைமையில் இராஜபுத்திர வீரர் அணி வகுத்துச் செல்லுதல் கண்டு ஆக்ரா நகரில் உள்ளோர் பலரும் அஞ்சி ஒளிந்தனர். யாது விளையுமோ என்று ஏங்கி நில்லாதார் இல்லை. இமைப்பொழுதில் அவ்வீரர் அனைவரும் அரண்மனையில் புகுந்து அட்டகாசம் செய்யலாயினர். மாண்ட அமரன் மீண்டு கிளம்பினனோ என்று அரண்மனை வாசிகளான அனைவருக்கும் அச்சம் பிறந்தது.

அரண்மனைக்குள் அவ்வீரர் புகுந்ததுதான் தாமதம்; கண்ணில் பட்டார் அனைவரும் கால் வேறு கை வேறாகிக் கலங்கி வீழ்ந்தனர்; அரண்மனைக் காவலரோ அமர் புரிய மாட்டாமல் அஞ்சி ஓடினர். இதற்குள் மொகலாய வீரர்கள் பதினாயிரவர் திரண்டு வந்து, அந்த ஐந்நூறு வீரரையும் வளைந்து கொண்டார்கள். சுசீலை சிறிதும் தயங்காமல், தனது வீரரை உற்சாகப்படுத்தி நின்றாள். அமரசிம்மன் வீச்சொன்றுக்கு ஐந்தும் ஆறுமாகப் பகைவரை வெட்டி வீழ்த்தினான் என்றால், அவன் துணைவரோ வீச்சொன்றுக்குப் பத்தும் பதினைந்துமாகப் பகைவரைக் கொன்று குவித்தனர். இருபது மடங்கு வன்மை படைத்த மொகலாயச் சேனை வேசாறிப்போயிற்று.

அங்கிலையில் சுசிலா தேவி தனது வீரரை விளித்து, "அன்பர்கள்! இன்னும் ஏன் தாமதம், என்று எனது நாதன் கூவியழைக்கின்றார். அவர் அங்கும் நான் இங்குமாக இனி இருத்தல் இயலாது; அவரது உடலத்தை அன்னியர் தொடவும் ஒண்ணாது; ஆதலின், அந்த உடலத்தை மடிமீது தாங்கி, அக்கினிக் கடவுளின் துணை கொண்டு, அமரர் உலகம் செல்கின்றேன்; உங்கள் வரவையும் நம் தலைவர்க்கு உரையா நிற்பேன். மண்ணுலக ஆட்சி போதும்! போதும்! இனி நாம் விண்ணுலக பரிபாலனமே பண்ணல் வேண்டும்," என்று கூறி, அமரன் உடலைத் தாங்கி, மயானம் சேர்ந்து, அக்கினி குண்டம் வளர்த்து, அதனுள் குளித்து, இமையவர் உலகம் ஏகி அழியா இன்பம் கொண்டனள்.

## 8. சுத்தவீரம்

நமது உடம்போ பொல்லாப் புழுமலி நோய் புன்குரம்பை. இளமையிலே உடலம் அழகாகத் தோன்றும்; நரை திரை மூப்பு வந்தவுடன், வடிவும் அழகும் மங்கிப் போம்; பார்ப்பதற்கும் விகாரமாக இருக்கும். உயிர் ஓடிவிட்டாலோ பிரேதகளை வந்து மூடிக் கொள்ளும். முகப் பொலிவு இழந்தவனை நோக்கி, "என்ன! பிரேதம்போல் இருக்கின்றாய்" என்று சொல்வது உண்டு.

சுத்த வீரரின் உடம்போ இளமையிலும் முதுமையிலும் ஒரே தன்மையதாக இருக்கும். அவர்களின் முகவிலாஸமும் பொலிவும் குன்றா. உயிர் போயின பின்புகூட, அன்னாரின் முகத்தில் மகிழ்ச்சியும் கம்பீரமும் வீர ஒளியும் குறையாது மிளிரும். கோசலை மைந்தனால் கொல்லப்பட்டுப் படுகளத்தில் கிடந்த இலங்கேசனது திருமுகங்களைக் குறித்து நமது கவிச்சக்கரவர்த்தி கம்பர் கூறியிருப்பது இது:

வெம் மடங்கல் வெகுண்டனைய
சினமடங்க மனமடங்க வினையம் வீயத்
தெம் மடங்கப் பொரு தடக்கைத்
செயலடங்க மயலடங்க ஆற்றல் தேயத்
தம் மடங்கு முனிவரையும்
தலையடங்க நிலையடங்கச் சாய்த்த நாளின்
மும் மடங்கு பொலிந்தன அம்முறை துறந்தான்
உயிர்துறந்த முகங்கள் அம்மா!

இப்பாட்டின் கருத்து யாதெனில், கர்ஜனைசெய்து கிளம்பும் ஆண் சிங்கத்தைப்போல் சினம்பூத்தல் இராவணனது இயற்கை; அந்த அரிமாவினைப் போன்ற மனவலியும் அவனுக்கு உண்டு. அத்தகைய சினமும் மனமும் அடங்கி யாதொரு செயலுமற்றுப் பிரேதமாய்க் கிடந்தான் இலங்கைவேந்தன்; தன்னை வந்து எதிர்க்கும் பகைவரைத் தொலைக்கும்படியான புஜ பல பராக்கிரமும் அவனுக்கு உண்டு. அத்தகைய புஜபல பராக்கிரமமும் அடங்கிப்போய் விட்டது. ஆயினும், அவனது திருமுகங்களோ எங்ஙனம் இருந்தன என்றால், திக்குவிஜயம் செய்து தேவரையும் முனிவரையும் நிலைகெடப் பண்ணியகாலத்தில் பிரகாசங் கொண்டு விளங்கியதைவிட மூன்று மடங்கு அதிகமாகப் பிரகாசங்கொண்டு விளங்கின.''

அமரசிம்மனது உடலைத் தாங்கி ஆக்ரா நகரின் வீதி வழியே சுசீலாதேவி சென்ற காலையில், அவ்வீர புருஷனது முகப் பொலிவைக் கண்டு பலரும் மயங்கினர். உயிரற்ற உடல்போல் தோன்றவில்லை; இராவணனது திருமுகம் பொலிவுகொண்டு விளங்கியதேபோல், அமரன்

திருமுகமும் விளங்கா நின்றது. சுத்த வீரத்தின் பெருமையே பெருமை! வீரத்திற்கு அழிவுண்டோ?

## 9. வீராவேசம்

அப்பால் மொகலாயச் சேனை பக்கபலம் பெற்றது; உடனே போரோ மிக உக்கிரமாக மூண்டது. எண்ணிறந்த பகைவர் முன்னே, ஒரு சிலர் எத்துணை நேரம் சமர் செய்ய இயலும்? அந்த ஐந்நூறு வீரரும் மொய்யமர் புரிந்து, ஆயிரக்கணக்கில் பகைவரின் சிரம் பறித்து மேலுலகம் போயினர். அரண்மனையில் ஆவியிழந்து கிடந்த வீரரின் உடலங்களை வெளிப்படுத்தி அடக்கஞ் செய்ய இரண்டு மூன்று தினங்கள் சென்றன. அரண்மனை அரண்மனையாக நெடுநாள் பிடித்தது. எனினும், அரசவை முன்போல் சோபிக்க வில்லை. அது கண்ட ஷாஜஹான் பெருதும் வருந்தி, "சுசீலை தன் கணவனுடலைத் தாங்கி வெளிச்சென்ற வாயிலை எவரும் திறத்தல் கூடாது," என்று கட்டளையிட்டான். அச் சக்கரவர்த்திக்குப் பின்பு, பலர் சிம்மாசனம் ஏறியும், அக்கோட்டை வாயிலைத் திறக்கவில்லை. பல்லாண்டுகாறும் அவ்வாயில் அடைபட்டே கிடந்தது. அவ்வாயிலைத் திறப்பின், மாநாகம் சீறி வரும் என்று நகரவாசிகள் சொல்லா நின்றார்கள்.

அமர சிம்மன் கொலை யுண்டான் என்னும் செய்தி ஜோதிபுரிக்கு எட்டியது. யசோவந்தனும் பிறரும் அச் செய்தி கேட்டு, ஆறாத் துயர் கொண்டனர். அமரசிம்மனது தோழரின் தோழரான ஒரு நூற்றுவர் கொதிப்புக் கொண்டு, "எங்கள் வீரதிலகமான அமரசிம்மனை வஞ்சனையாக வதைத்த பகைவரைப் பழிவாங்காமல் உணவு கொள்வதில்லை," எனச் சபதம் பூண்டு, ஆக்ரா நகரம் நோக்கிச் சென்றனர். அவ்வீரரின் கோபாவேசம் கண்டதும், "அந்தோ! மழை விட்டும் தூவானம் விடவில்லையே," என்று ஆக்ரா நகர வாசிகள் துயர் கொண்டு அழிந்தார்கள். வீரரோ பழிவாங்கிச் சபதம் முடித்த பின்பே சாந்தம் அடைந்து வீரசுவர்க்கம் புகுந்தனர்.

அது கண்டு ஷாஜஹானும் மொகலாய தளகர்த்தரும் மாருவாரம் படைகொண்டு கிளம்புமோ என நெடு நாள்

அஞ்சிக் கிடக்க நேர்ந்தது. சாமோபாயத்தில் கைவந்த ஷாஜஹான் மிகவும் சாதுரியமாக அமரசிம்மன் மைந்தன் இரவிசிம்மனை வரவழைத்து, நாகதுர்க்கத்துக்கு அவனை அதிபதியாக்கி, ஆறுதல் கூறி, ஆதரவு பலவும் தந்தனன். ஆயினும், அம்மன்னர் மன்னன் மரிக்கும் வரையில் வீர சிங்க அமரசிம்மனது நினைவும் திரமும் அகலவில்லை.

## 10. மாநாகம் சீறல்

வாழ்வும் தாழ்வும் மனிதருக்கு மாறி மாறி வரும் அல்லவா? அங்ஙனமேதான் அரசுக்கும். காளடைவில் இத் தேசத்திலே மோகலாய வல்லரசு குலையலாயிற்று. வர்த்தகம் புரிந்து வயிறு வளர்க்க இங்கே வந்த ஆங்கிலேயர் கொஞ்சம் கொஞ்சமாக நாட்டைக் கைப்பற்றிக் கொண்டனர். அதனல் அவர்களுடைய அரசு இங்கே தலையெடுக்கலாயிற்று. பத்தொன்பதாம் நூற்றுண்டின் துவக்கத்திலே ஆக்ரா நகரம் ஆங்கிலேயரின் வசமாயிற்று. அப்போது ஆக்ரா அரண்மனை சீர் குலைந்து கிடந்தது. சுசீலாதேவி தன் கணவன் உடலைத்தாங்கிச் சென்ற வாயிலும் திறக்கப்படவில்லை.

அம் மாளிகையைப் புதுப்பிக்க ஆங்கிலேயர் முயன்றனர். முயன்ற காலையில் அவ்வாயிலை இடித்துத் தள்ள அவர்கள் எண்ணினர்கள். அப்பொழுது இந்துக்களிலும் சரி, முகம்மதியரிலும் சரி, அவ்விதம் இடித்துத் தள்ள எவரும் முன்வரவில்லை. இடித்துத் தள்ளின், மாநாகம் சீறிவரும் என்பதே அவர்களுக் கிருந்து வந்த அச்சமாம். ஆங்கிலேயரின் தளகர்த்தனுன சீல் என்பான் அது கேட்டு, "ஈதென்ன மூடக்கொள்கை? அதிர அடித்தால் ஐயனரும் 'இல்லை, பிடாரியும் இல்லை,'' என்று கூறினன். அன்றியும் தனது இனத்தினரைக் கொண்டு, அவ்வாசலை இடித்துத் தள்ளினுன். உடனே படவரவு ஒன்று சீறிக் கிளம்பி வந்தது. அது கண்டு, சீல் என்பானும் இதர ஆங்கிலேயரும் உயிர் வெல்லம் என எண்ணி ஓட்டம் பிடித்து, தெய்வ சகாயத்தால் உயிர் தப்பினர்.

---

முதல் பதிப்பு, ஐயாயிரம் பிரதிகள் ; 17—3—'32.

Kesari Printing Works, Madras.

# ஸ்ரீ "சாரதா சதங்கை"

புராண, இதிகாச, இலக்கிய, சரித்திர நூல்வரிசை

மணி 1. கற்பரசி:—நமது பாரத தேசம் இன்றும் தலை சிறந்து நிற்பதற்குக் காரணம், நமது பெண் மணிகளின் கலங்காக் கற்பு நிலைமையே!

மணி 2. கிருஷ்ணகுமாரி:—இராஜபுத்திர வீர மாதின் சரிதம். பதினாறு வயதில் போர்க்கோலம் பூண்டு, அக்பர் சக்கரவர்த்தியுடன் அரும்போர் விளைத்தவள்.

மணி 3. சடையப்ப வள்ளல்:—கவிச்சக்கரவர்த்தியாம் கம்பரைக் காத்தவர்; பெருங்காணி வளம் படைத்தவர்; மூவேந்தருடன் சரியாசனம் பெற்றவர்;

மணி 4. நீலி பராக்கிரமம்:—வட நாட்டில் அரிச்சந்திரன் சத்தியசந்தனாக விளங்கினான். தென்னாட்டிலோ பழையனூர் வேளாளர்—ஓர் எழுபதின்மர்—சொன்ன சொல்லைக் காக்கத் தீயில் குளித்தனர்.

மணி 5. இன்பரசக் கதைகள்:— இருவகை இன்பமும் இக் கதைகள் புகட்டும்.

மணி 6. மன்மத விலாசம்:— மன்மதனது அரிய கோலாகலத்தை விளக்கும்; மக்கள், மன்னர் இவர்களின் மதிமயக்கம் புலப்படுத்தும். தேனினும் இனிக்கும்.

மணி 7. விகடக் களஞ்சியம்:—விடா நகைப்புத் தரும் சிறு கதைகள்;

மணி 8. வீரப் பிரதாபன்: —இருபத்தேழு வருஷம் தன்னந்தனியே நின்று, மொகலாய வல்லரசை எதிர்த்து, இணையிலா வீரம் காட்டிய வீரன் சரிதம்.

மணி 9. வீர சிங்கம்:—ஷாஜஹான் சக்கரவர்த்தியின் அரிய நண்பன்; ஆண்மையின் விலாசன்;

மணி 10. வாள் வீரன்:—வாள் வரிசை காண வேண்டின், இச் சரிதம் போதும்.

**எம. எஸ். சுப்பிரமணிய ஐயர்,**

**மயில்வாகன் கம்பனி,**

32, ஐயப்பசெட்டி வீதி, மண்ணடி, மதராஸ்

ஸ்ரீ சாரதா சதங்கை, மணி - 9

கல்வி இம்மை பயக்கும்! நம்மை விளக்கும்!!

ஸ்ரீ

# அறுபத்து மூவர்

அல்லது

# பூம்பாவை வைபவம்

உலகெலா முணர்ந்தோதற் கரியவன்
நிலவுலாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத்தாடுவான்
மலர்சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்.

வாழ்க அந்தணர், வானவர், ஆனினம்
வீழ்க தண்புனல், வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெலாம், அரன் நாமமே
சூழ்க, வையகமும் துயர் தீர்கவே!

எம். எஸ். சுப்பிரமணிய ஐயர்
எழுதியது

விலை காலணா

# தமிழன்பருக்கும் பெரியாருக்கும் வந்தனம்!

ஸ்ரீ

சாரதா சதங்கை மணி.

1. கற்பாசி
2. கிருஷ்ண குமாரி
3. சடையப்ப வள்ளல்
4. நீலி பராக்கிரமம்
5. இன்பாசக் கதைகள்
6. மன்மத விலாசம்
7. விகடக் களஞ்சியம்
8. சிவராத்திரி மான்மியம்
9. அறுபத்து மூவர்
10. வாள் வீரன்
11. ஜய வீர சிங்கம்
12. வீரப்பிரதாபன்

எங்கும் ஏஜண்டுகள் தேவை.

நல்ல கமிஷன் உண்டு உடனே எழுதவும்.

அன்பர்காள்!

உலகம் சிவமயம், அல்லது அன்புமயம். சிவனே, சிவனே என்று சொல்லின், சிவன் நம்முன் தோன்றுவான்; அருளும் புரிவான். அவனை எண்ணவும் எத்தவும் மக்களிலே பலர் மறக்கின்றனர்; அதனால் இடரும் எய்துகின்றனர். இதனை மதித்து, அனைவரும் அமலநாதனை நினைந்து உய்யவே, தேரும் திருவிழாவும் நிகழ்கின்றன. தேர் திருவிழாக்களின் உண்மையை, இரகசியத்தை உணர்வார் ஒரு சிலரே. நமது வாயில்படி வந்து ஈசன் காட்சி தரும் அருளே அருள். அத்தகைய காலங்களில் நம் உடல் பொருள் ஆவி மூன்றையும் அவனுக்கே அர்ப்பணம் செய்தல் வேண்டும். இங்ஙனம் இருக்கச் சிலரோ பிற உயிர்களைத் தம் வயிற்றில் அர்ப்பணம் செய்து கொள்ளுகின்றனர். கொல்லா விரதம்கொண்டவரே நல்லார்; அல்லாதார் அல்லாதாரே. அறுபத்துமூவர் அன்பின் வடிவானோர். அறுபத்துமூவர் அல்லது பூம்பாவை வைபவம் எனும் நூல் சாரதா சதங்கையின் ஒன்பதாவது மணியாம்.

எம். எஸ். சுப்பிரமணிய ஐயர்,
ஆசிரியர்
ஸ்ரீ சாரதா சதங்கை மணி.

மயில்வாகன் கம்பனி,
32, ஐயப்பசெட்டி வீதி, மண்ணடி, மதராஸ்.

கல்வி, இம்மை பயக்கும்! நம்மை விளக்கும்!!

ஸ்ரீ

# அறுபத்து மூவர்

அல்லது

# பூம்பாவை வைபவம்

## 1. முன்னுரை

வயிற்றுப் பாடே பெரும் பாடாக இருக்கின்றது; வாழ்வு அளிக்கும் வள்ளலை, முக்கண் கடவுளை, முன்னவனை, வழுத்தவோ நேரம் கிட்டுவதில்லை; நெஞ்சமும் ஒருப்படுதல் அருமை. எல்லா உயிருக்கும் இன்னருள் சுரக்கும் சிவபெருமான் எங்கும் இருக்கின்றான்; நமது மனத்திலும் குடிகொண் டிருக்கின்றான். மனமே சாட்சி என்பதின் கருத்து யாது? நம் பெருமானே சாட்சி என்பதே யாம். உள்ளத்தில் குடிகொண்டிருக்கும் வள்ளலை உணரும் பக்குவமும் பாக்கியமும் படைத்தோர் ஒரு சிலரே ஆவர். மற்றையோரின் நலத்தை மதித்தே, ஆலயங்களையும் கோயில்களையும் நமது முன்னோர் நன்கு அமைத்து வைத்துளர்; அந்த ஆலயம் சென்று ஆண்டவனை வழிபட நம்மில் சிலர் எண்ணார்; அதற்கு அவகாசம் இல்லை என்றும் சொல்லுவர். அன்னவரின் நலத்தைக் கருதி, அவர்களும் உய்யும் பொருட்டு, நமது பெரியோர் தேர் என்றும், திருவிழா என்றும் நடத்தி வருகின்றனர். திருவிழாவின்போது தெய்வம் வீதி வீதியாக எழுந்தருளும். அப்போதாவது அனைவரும் ஆண்டவனைத் தரிசனம் செய்யாரா; தெய்வம் ஒன்று

உண்டு என்பதை உணராரா; நடமாடும் கோயில்களான ஜீவர்களைக் கண்ணெடுத்துப் பாராரா; ஈசுவர சிந்தை எல்லாருக்கும் உதிக்காதா; புண்ணிய புருஷரின் திருஷ்டி படாதா, என்பதே முன்னோரின் கருத்தாம். தேர் திரு விழாக்களில் கடை கண்ணிகளும் மேளக் கச்சேரிகளும் புராணப் பிரசங்கங்களும் காணவாவது பலரும் புறப் பட்டு வருவர். அப்போது யாருக்கும் தன்னை யறியாமல் தெய்வசிந்தையும் விரிந்த நோக்கும் உதிக்காமல் இரா; தன்னை மறக்கவும், சித்தத்தைச் சிவன்பால் இருத்தவும் சமயம் வாய்க்கும். சிறிது சிந்தனை செய்து பார்த்தால், தேர் திருவிழாக்களின் இரகசியமும் தெய்வ உண்மையும் மாந்தருக்குப் புலப்படும்.

## 2. சைவப் பிரசாரம்

இனி, மக்களில் பலரோ தேர் திருவிழாக்களின் விருத்தாந்தத்தை உணர்வது கிடையாது. உதாரணமாக அறுபத்துமூவரின் புறப்பாட்டை எடுத்துக்கொள்ளலாம். " அறுபத்து மூன்று நாயன்மாரும் ஆண்டவனது பிள்ளை கள்; இவ்வளவு பெரிய குடும்பம் கொண்ட நான் எல்லா ரையும் அரவணைத்துக் காலம் தள்ளுகின்றேன். நீங்களும் இவ்விதம் ஒரு மனம் கொண்டு நடவுங்கள் என்று காட்ட வே ஆண்டவனும் அறுபத்து மூவரும் புறப்படுகின்ற னர்;" என்பது பலருடைய நம்பிக்கை.

இன்னும் பலர் எண்ணியிருத்தல் வெகு விநோதம். "நாயன்மார் அனைவரும் கிழவியாம் காரைக்கால் அம்மை யாரின் பிள்ளைகள். தனக்குள்ள மக்கள் செல்வத்தை உலகறியக் காட்டுகின்றாள் அந்த அம்மை," என்று கூறு வாரும் உண்டு. அன்றியும், " திருஞான சம்பந்த மூர்த்தி என்பவர் செட்டிப் பெண்ணைக் கலியாணம் செய்து கொள்ளுகிறார். இதனைக் கண்டு களிக்கவே அறுபத்து மூவரும் புறப்படுகின்றனர்," என்று எண்ணியிருப் பாரும் இருக்கின்றனர். இவ்விதமெல்லாம் மக்கள் எண் ணிக் கிடப்பது என்? முதலாவதாகப் பலரும் வயிற்றுப் பாட்டில் மூழ்கி, விஷய விவரம் உணராமல் இருப்பதாம். இரண்டாவதாக, சமயத் தலைவரும் துரந்தரரும் போதிய

வளவு பிரசாரமும் பிரசங்கமும் நடத்தாமல் இருப்பதே. கிறிஸ்தவப் பிரசாரகரோ கோடிக் கணக்கில் தங்கள் வேத உண்மைகளை அச்சிட்டு, இனமாக அல்லது மலிவான விலைக்கு அனைவருக்கும் வழங்குகின்றனர்; தெருக் கோடியிலும் சந்து முனையிலும் நின்று பாமரருக்குப் பிரசங்கம் புரிகின்றனர். சைவ சமய துரந்தரர் அங்ஙனம் செய்தல் உண்டா? இல்லை. தேவாரமும் திருவாசகமும் மலிவான விலைக்குக் கிடைக்க வேண்டும் என்று முயலுவோர் படும் கஷ்டத்தை நாம் அறிவோம். மடத் தலைவர்களும் தம்பிரான்களும் புராணப் பிரசங்கிகளும் தேசமெங்கும் சைவ மணம் தழைக்கவும், சிவ சிவ எனும் கோஷம் ஒங்கவும், தேவார பாராயணம் வானமளாவவும், திருவாசக உண்மை எங்கும் பிரகாசிக்கவும் வழிதேட வேண்டும். இங்ஙிலையில் அறுபத்து மூவரின் மகிமையையும் பூம்பாவையின் வைபவத்தையும், காசிக்குப்போனன், காவடி கொணர்ந்தான் என்னும் பான்மையில் எழுதத் துணிந்துளோம்.

## 3. நாயன்மார் மகிமை

பெரியது எது என்று ஒரு சமயம் ஔவைப் பிராட்டியை முருகக் கடவுள் கேட்டார். தொண்டர் பெருமையே பெரிது என்றாள் ஔவை. அறுபத்து மூன்று நாயன்மாரும் சிவபெருமானது உண்மைத் தொண்டர் ஆவர். பரமசிவ மூர்த்தியோ தொண்டரின் உள்ளத்தில் அடங்கியிருக்கிறார். அத் தொண்டரைத் துதித்தால் ஆண்டவன் மன மகிழ்வான்; அருளும் புரிவான். சிவ பக்தராயுள்ளோர் ஆலயம் சென்றதும், முதலில் நாயன்மார்களையே தொழுது துதிப்பர்

நாயன்மார் அனைவரும் நம்மைப் போலவே மானிடராக இருந்தவர்கள். இப்பொழுதோ அவர்களுக்குச் சிலை யடித்து, ஆலயம் அமைத்து, அபிஷேக ஆராதனை செய்து, தேர் திருவிழா நடத்துகின்றோம். இவ்வளவு பெருமைக்கும் காரணம் அவர்களது சிவ பக்தியே யாம். நாமும் பக்தி பண்ணி முக்தி பெறலாம்; ஈசுவரத் தன்மையும் அடையலாம். நாயன்மார்கள் அவதாரம் செய்வதற்கு

முன்பே, அவர்களுடைய சரித்திரம் சிவ இரகசியத்தில் சொல்லப்பட்டுளது. அவ்விதம் சொல்லியவர் சிவ பெருமானே; அதனைக் கேட்டுக் களித்தவர் உலகமாதாவான உமாதேவியார்.

அறுபத்து மூவரில் ஒருவராய் அவதாரம் செய்து, மற்ற நாயன்மாரைத் துதித்து திருத்தொண்டத் தொகை பாடியவர் ஆலாலசுந்தரர். அவர் சிவபிரானது பிரதிபிம்பமேயாம். திருத்தொண்டர் தொகையைப் பாடும்படி பரமசிவனே அவருக்கு அடி எடுத்துக் கொடுத்தார். ஆலாலசுந்தரர் எனும் சுந்தரமூர்த்தி நாயனர் சரிதத்தையும், இதர நாயனர்களின் சரித்திரத்தையும் உபமன்னியு முனிவர் என்பார் இதர இருஷிகளுக்கு எடுத்துச் சொன்னர். நாயன்மார்களின் சரித்திரம், தமிழிலே பெரிய புராணம் எனப்படும். சேக்கிழார் என்பவர் அப்புராணத்தைப் பாடினர்; அவர் பாடுவதற்கு அடி எடுத்துக் கொடுத்தார் நடராஜப் பெருமான்.

பொய்யான சமயங்களைக் கண்டித்து, மெய்யான சிவ சமயத்தை நிலை நாட்ட ஈசுவர அம்சமாய்ப் பிறந்து திக்கு விஜயம் செய்தவர் ஆதிசங்கரர் ஆவர். சிவ பெருமானைக் குறித்து அவர் சிவானந்தலஹரி, சிவபுஜங்கம் எனும் நூல்கள் பாடியிருக்கிறர். அவற்றில் நாயன்மார்களை அவர் புகழ்ந்து பேசி யிருப்பதை அனைவரும் கவனிக்க வேண்டும். சாதியினும் சமயமே அதிகம். சமயத்தில் சைவசமயமே உயர்ந்தது. சிவஞானியோ இன்னும் உயர்ந்தவன். அனைவரும் சிவபெருமானை வணங்கி, நாயன்மார்களிடம் பய பக்தி விசுவாசம் கொள்ளின், எல்லாப் பேறும் பெறலாம். இதற்கு நாயன்மார்களின் சரித்திரமும் மகிமையும் ஊன்று கோல் போல் உதவும்.

## 4. நாயன்மார் வருணம்

நாயன்மார்களிலே தனியடியார் எனப்படுவோர் அறுபத்து மூவர்; திருக்கூட்டத்தார் எனப்படுவோர் ஒன்பது பேர். இவர்களின் வருண விவரம் வருமாறு:—

**அறுபத்து மூவரிலே ஆதிசைவர் நால்வர். அன்னர்:—(1) சுந்தர மூர்த்தி நாயனர், (2) புகழ்த்துணை நாயனர்; (3) சடைய நாயனர்; (4) இசைஞானியார்.**

பிராமணர் பன்னிருவர் :—அவர்கள் (1) குங்கிலியக்கலய நாயனார் ; (2) முருக நாயனார், (3) உருத்திர பசுபதி நாயனார், (4) சண்டேசுர நாயனார் ; (5) அப்பூதியடிகள் ; (6) திரு நீல நக்க நாயனார் ; (7) நமிநந்தியடிகள் ; (8) திருஞான சம்பந்த சுவாமிகள் ; (9) சோமாசி மாற நாயனார் ; (10) சிறப்புலி நாயனார் ; (11) கணநாத நாயனார் ; (12) பூசலார் நாயனார்.

மாமாத்திரப் பிராமணர் ஒருவரே. அவர் சிறுத்தொண்ட நாயனார்.

க்ஷத்திரியர் அறுவர் :—(1) சேரமான் பெருமாள் நாயனார் ; (2) புகழ்ச் சோழ நாயனார் ; (3) நெடுமாற நாயனார் ; (4) இடங்கழி நாயனார் ; (5) மங்கையர்க்கு அரசியார் ; (6) கோச் செங்கண் சோழ நாயனார்.

குறுநில மன்னர் ஐவர் :—(1) மெய்ப்பொருள் நாயனார் ; (2) கூற்றுவ நாயனார் ; (3) நரசிங்க முனையரைய நாயனார் ; (4) ஐயடிகள் காடவர் கோன் நாயனார்; (5) கழல் சிங்க நாயனார்.

வைசியர் ஐவர் :—(1) இயற்பகை நாயனார் ; (2) அமர்நீதி நாயனார் ; (3) மூர்த்தி நாயனார் ; (4) காரைக்கால் அம்மையார் ; (5) கலிக்கம்ப நாயனார் ;

வேளாளர் பதின்மூவர் :—(1) இளையான்குடி மாற நாயனார் ; (2) விறல் மிண்ட நாயனார் ; (3) மானக் கஞ்சாற நாயனார்; (4) அரிவாட்டாய நாயனார் ; (5) திருநாவுக்கரசு நாயனார் ; (6) ஏயர் கோன் கலிக்காம நாயனார் ; (7) மூர்க்க நாயனார் ; (8) சாக்கிய நாயனார் ; (9) சத்தி நாயனார் ; (10) வாயிலார் நாயனார்; (11) முனையடுவார் நாயனார் ; (12) செருத்துணை நாயனார் ; (13) கோட்புலி நாயனார்.

இடையர் இருவர் :—திருமூலநாயனார்; (2) ஆனாய நாயனார்.

குயவர் :—திருநீலகண்ட நாயனார்.

பாணர் :—திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனார்.

பரதவர் :—அதிபத்த நாயனார்.

வேடர் :—கண்ணப்ப நாயனார்.

சான்றர் :—ஏனாதி நாத நாயனார்.

சாலியர் :—நேச நாயனார்.

சேக்கார் :—கலிய நாயனார்.

ஏகாலியர் :—திருக்குறிப்புத்தொண்ட நாயனார்.

புலையர் :—திருநாளைப்போவார் நாயனார்.

மரபு அறியாதவர் அறுவர்:—(1) எறிபத்த நாயனர்; (2) குலச்சிறை நாயனர்; (3) பெருமிழலைக்குறும்ப நாயனர்; (4) தண்டியடிகள் நாயனர்; (5) கணம்புல்ல நாயனர்; (6) காரி நாயனர்.

திருக்கூட்டத்தார் ஒன்பது பேரிலே; ஆதிசைவர் ஒருவர்; அவர் முப்பொழுதும் திருமேனிதீண்டுவார் ஆவார்; பிராம்மணர் ஆவோர் தில்லை வாழ் அந்தணரே. மரபு அறியாதார் எழுபேர்:—(1) பொய்யடிமை இல்லாத புலவர்; (2) பத்தராய்ப் பணிவார்; (3) பரமனையே பாடுவார்; (4) சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்; (5) திருவாரூர்ப் பிறந்தார்; (6) முழுநீறுபூசிய முனிவர்; அப்பாலுமடிச் சார்ந்தார்.

## 5. தேவார திருவாசகம்

அறுபத்து மூன்று நாயன்மார்களிலே, சைவ சமய ஆசாரியர்களாக விளங்குவோர் நால்வர். அவர்கள் (1) திருஞான சம்பந்தமூர்த்தி நாயனர், (2) திருநாவுக்கரசு நாயனர், (3) சுந்தரமூர்த்தி நாயனர், (4) மாணிக்கவாசகர் ஆகிய இவர்களே. அந்த நால்வரில் முதல் மூவரும் மகாதேவனைக் குறித்துப் பாடிய பாடல்கள் ஒரு லட்சத்துக்கு மேலாகும். அப்பாடல்கள் தேவாரம் எனப்படும்; தமிழ் வேதம் என்றும் சொல்லப்படும். இப்பொழுது அவை அனைத்தும் கிடைக்கவில்லை; கிடைத்தவற்றைத் திரட்டி, மூவர் அடங்கன் முறை என்று பேர் கொடுத்திருக்கின்றனர். தேவாரத்தை நாள்தோறும் கிரமப்படி ஓதிவந்தால், இம்மை மறுமை இரண்டு இன்பங்களையும் மாந்தர் அனுபவித்து ஆனந்திக்கலாம்.

மாணிக்கவாசகர் பாடியதோ திருவாசகம் எனப்படும். அத் திருவாசகத்தினுக்கு உருகாதார் ஒருவரும் இரார். அவர்கள் நால்வரும், கடவுளைக் கண்கொண்டு கண்டு ஆனந்தித்தவர்கள். அதனால் அவர்கள் கனிந்துருகிப் பாடிய பாடல்களான தேவாரமும் திருவாசகமும் படிப்போருக்குப் பரவசம் ஊட்டும், போதம் புகட்டும், பிரமானந்தமும் விளைக்கும். தேவார திருவாசகப் பெருமையை உணர ஆவல்கொண்டு, அயல் நாட்டு மேதாவிகளில் சிலர் தமிழ்மொழி பயின்றனர் என்றால், அவற்றின் அருமையும் பெருமையும் பேசப்போமோ?

## 6. சிவநேசர் சிறப்பு

சென்னைமா நகரின் ஒரு பாகம் திருமயிலை; மயிலாப்பூர் என்றும் அதற்கு ஒரு பெயர் உண்டு. முன்னம் உமாதேவியார் மயிலுருக்கொண்டு ஆண்டவனைப் பூசித்தார். அதனால் மயிலை எனும் பெயர் வந்தது. அது பாடல் பெற்ற சிவதலங்களில் ஒன்று; வாயிலாநாயனார், ஐயடிகள் காடவர் கோன், திருவள்ளுவ தேவர் முதலிய பெரியார்கள் தங்கியிருந்த சிறப்பு உடையது. ஆங்கு எழுந்தருளியிருக்கும் ஆண்டவன் பெயர் கபாலீசுவரர்; அம்மையின் பெயர் கற்பகவல்லி. ஆலயத்துக்கு அருகே உள்ள தீர்த்தம் பிரம்ம தீர்த்தம் எனப்படும்.

அங்கே சிவநேசர் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் பெருஞ்செல்வம் படைத்தவர்; சிவ பக்தியிலும் சிறந்தவர். அவர் கீர்த்தி எங்கும் பரவியிருந்தது. அவர் பிள்ளைப் பேறு பெறவில்லை. அதனால் அவர் கவலைகொண்டு கிடந்தார். முடிவில் ஈசன் அருளால் ஒரு பெண் குழந்தை பிறந்தது. பூமகளைப் போல் அக் குழந்தை பேரழகு பொருந்தி யிருந்தது. அதனால் பூம்பாவை என்று அக் குழந்தைக்குப் பெயர் கொடுத்தனர். நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக அப்பூம்பாவை வளர்ந்து வந்தாள். நாளடைவில் அவள் பெதும்பைப் பருவம் (பன்னிரண்டு வயது) அடைந்தனள்.

இதற்கு இடையில் சிவநேசச் செல்வரோ திருஞான சம்பந்தரின் குணாதிசயங்களைக் கேள்வியுற்றார். உடனே சம்பந்தர்மீது சிவநேசருக்கு அன்பு பிறந்தது. இரவும் பகலும் சம்பந்தரின் குணநலங்களையே அவர் பேசிக் கொண்டிருப்பார்; சம்பந்த மூர்த்தியைக் காணவேண்டும் எனும் ஆவலும் அவரிடம் நிரம்பி நின்றது. பூம்பாவை பெதும்பைப் பருவம் அடைந்ததை அவர் அறியலானார்; உடனே, அவர், "என் புத்திரியும் சம்பத்தும் சம்பந்தருக்கே உரியன," என்று சொல்லி, ஆனந்தம் அடைந்தார். பூம்பாவையும் அப் பெருமானிடம் பிரேமை கொண்டனள். அம்மனை ஆடுங் காலத்திலும், பந்தடிக்கும் பொழுதும், சம்பந்தரின் நினைவு அவளை விட்டு அகலாது.

## 7. பூம்பாவை மரித்தல்

ஒரு தினம் பூம்பாவை தன் சேடியருடன் பூஞ்சோலை சென்றுள்; எல்லாரும் சேர்ந்து பூங்காவில் மலர் கொய்தனர். அப்போது நல்ல பாம்பு அவள் விரலில் கடித்தது; காளி, காளாத்திரி, யமன், யமதூதி எனும் நான்கு பற்களும் நன்கு பதிந்துவிட்டன. அதனுல் விஷம் தலைக்கேறியது. உடனே பூம்பாவை பூங்கொடிபோல் வாடி வீழ்ந்தாள். சேடியர் அது கண்டு அச்சம் கொண்டு, அவளைக் கன்னிமாடத்துக்குத் தூக்கிச்சென்றனர். சிவநேசரும் பிறரும் தேம்பித் தேம்பி அழத்தலைப்பட்டனர். வைத்தியர் வந்து, மணி மந்திர ஔஷதங்களைக் கையாண்டு பார்த்தார்கள். நஞ்சோ நீங்கவில்லை. தோல் நரம்பு நாடி சதை இரத்தம் முதலிய பாகமெல்லாம் மயங்கிவிட்டன.

இனி, உயிர்தரியாது என்று வைத்தியர் எல்லாரும் கைவிட்டனர்; சுற்றத்தார் அனைவரும் சோகம் கொண்டனர். விஷத்தைப் போக்குவோர் அளவிறந்த திரவியம் பெறலாம் என்று சிவநேசர் பறையறைவித்தார். மந்திர வாதிகளும் தந்திர வாதிகளும் தக்க மருத்துவரும் வந்து குவிந்து மூன்று நாள் முயன்று பார்த்தும் முடியவில்லை. சிவநேசர் என்ன செய்வார்? பழவினை என்று ஒருவாறு தெளிந்தார்; முடிவில், "நமது மகள் அப் பிள்ளையாருக்கே உரியவள் என்று அன்றே துணிந்தோம். ஆதலின், பூம்பாவையின் உடலைத் தகனம் செய்து, எலும்பையும் சாம்பலையும் சேமித்துவைப்போம்;" என்று துணிந்தார்.

அவ்விதமே பூம்பாவையின் உடலம் தீக்கு இரையாக்கப்பட்டது; எலும்பும் சாம்பலும் பத்திரமாக ஒரு குடத்தில் வைக்கப்பட்டன. பாவையின் கன்னிமாடத்திலே அக் குடத்தை ஓரிடத்தில் அமர்த்தி, அதற்கு ஆடை அணிந்து, ஆபரணம் பூட்டி, அலங்காரமும் செய்து பஞ்சணையில் வைத்தனர்; நாள்தோறும் தவறுமல் அக் குடத்திற்கு மஞ்சனம் மாலை சந்தனம் அன்னம் விளக்கு முதலியவும் அமர்த்தினர். அவ்விதம் என்புக்குச் செய்த விசேஷ உபசாரம் கண்டும் கேட்டும், பலர் வியப்புக் கொண்டார்கள்.

## 8. சம்பந்தர் விஜயம்

இப்படி இருக்கும் நாளிலே, திருஞான சம்பந்தர் தமது திருக்கூட்டத்தாருடன் திருவொற்றியூர் சேர்ந்தார். அச் செய்தி சிவநேசருக்கு எட்டிற்று. உடனே அவர் களிகூர்ந்து பலருக்கும் வஸ்திரதானம் செய்தார்; பணத்தையும் அள்ளிக் கொடுத்தார். பின்பு சிவநேசர் பெருங் களிப்புடன், திருமயிலையிலிருந்து திருவொற்றியூர் வரையில் நடைப்பந்தல் இட்டார்; மேலே நெடுக விதானம் அமைத்தார், வழியெங்கும் வாழை கமுகு நாட்டினர். தோரணங்கள் நிறைத்தார்; கொடிகள் கட்டினர்; மாலைகள் தூக்கினர்; இவ்விதம் அலங்காரம் எல்லாம் செய்த பின்பு, சிவனடியார்களுடன் அவர் திருவொற்றியூர் சேர்ந்து, சம்பந்தரின் திருவடிகளை வணங்கினர்.

சிவநேசச் செல்வரின் வரவும் குறிப்பும் கண்டு சம்பந்த சுவாமிகளும் கருணை கூர்ந்து, அடியார்கள் புடைசூழ முத்துச் சிவிகையில் திருமயிலைக்கு எழுந்தருளினர். பின்பு, சுவாமிகள் ஆலயம் புகுந்து, சிவபெருமானை வலஞ் செய்து வணங்கி, "அன்ப! உமது கருத்தை அறிவோம். பாவையின் எலும்பு நிறைந்த குடத்தைக் கோயிலின் புறமதில் திருவாசலிலே கொண்டுவாரும்," என்று கனிவுடன் கூறினர். சிவநேசர் அது கேட்டு உள்ளம் மகிழ்ந்து, விரைந்து சென்று வீடு சேர்ந்து, கன்னிமாடம் புகுந்து, குடத்தை எடுத்தார். உடனே இரத்தினச் சிவிகையில் அக் குடத்தை வைத்து, சேடியர் சுமந்து சென்றனர். கோயிலின் பின்மதில் புறம் சேர்ந்ததும், அக் குடத்தை எடுத்துக் கீழே வைத்து, அச் செல்வர் வணங்கி நின்றார்.

திருமயிலை வாசிகளும் பிறரும் அயலூராரும் புறசமயத்தாரும் வந்து அங்கே கும்பல் கூடினர்கள். அமரரும் தேவரும் ஆகாயத்திலே நிறைந்து நின்றனர். திருஞான சம்பந்த சுவாமிகளோ அடியார் கூட்டத்துடன் கோபுர வாயிலுக்கு நேரே வந்து, குடத்தைப்பார்த்து, சிவ பெருமானை மனத்திலே நினைத்து, பூம்பாவாய் என்று கூப்பிட்டார்; "மனிதப் பிறவி எடுத்த பயன் சிவனடி-

யாரைப் பூசித்தலாம்; அவர்தம் திருவிழாவைத் தரிசித்தலுமாம். இது உண்மையாயின், பெண்பாவாய்! எழுந்திரு," என்று பதிகம் ஓதினர்.

## 9. எலும்பு பெண்ணாதல்

திருஞான சம்பந்த சுவாமிகளின் திருவாக்காகிய அமுதம் அந்த அங்கத்திலே பொருந்தியது; உடனே, குடத்தினுள் இருந்த என்பு, பெண்ணுருக் கொண்டது; முதல் பாடலில் உருவு பெற்றதும், வேறு எட்டுப் பாக்களும் கேட்டவுடனே, பன்னிரண்டு வயதுகொண்டு, குடத்துக்குள் அடங்கியிருந்தது. குடத்திலுள்ளே பெண் அடங்கிக் கிடத்தல் ஏற்குமோ என்று சிலர் கேட்கலாம். ஆனது பற்றி, பத்தாவது திருப்பாட்டைப் பாடியவுடனே, பூம்பாவையின் கை வெளியே தோன்றிற்று. உடனே குடம் உடைய, அம்மங்கை நல்லாள் வெளிப்பட்டாள். அவ்விதம் எழுந்து நின்ற பாவையைக் கண்டு, எல்லாரும் அற்புதம் அடைந்தனர். சிவனடியார்களோ ஹர ஹர என்று கோஷித்தார்கள். தேவரும் பிறரும் புஷ்பமாரி பொழிந்தனர். "இது சிவபெருமானது பெருங்கருணையே" என்று மாந்தர் அனைவரும் ஆனந்த ஆரவாரம் செய்தனர். சைவ சமயத்தைத் தூஷித்தவர்களோ அந்த அற்புதம் கண்டு அறிவுகொண்டார்கள்.

முன்னம் பிரமன், திலோத்தமையை உண்டாக்கினன்; உண்டாக்கியதும், அவளது பேரழகைத் தனது நான்கு முகமும் கொண்டு நோக்கினன் என்பர். திருஞானசம்பந்தரோ தாம் மீண்டும் படைத்த பூம்பாவையிடம் பரமசிவனது பெருங்கருணை வெள்ளத்தை ஆயிரம் முகத்தினாலே கண்டார். சிவநேசரோ தனது மகளைக் கண்ணெதிரே கண்டு, களிப்பு மிகக் கொண்டு, சம்பந்தரின் திருவடிகளில் விழுந்து வணங்கினர். உடனே பிள்ளையார், "ஐயனே! உமது மகளை மாளிகைக்கு இட்டுச் செல்லலாம்" என்றார். சிவநேசரோ "என் ஐயனே! அன்றே துணிந்தேன், இம்மகளும் என் செல்வமும் உமதே," என்று கூறி வேண்டினர். அது கேட்டதும், சம்பந்தர் "செல்வரே! உமது பெண் விஷம் தீண்டி இறந்தனள்.

பின்பு, சிவபிரான் கருணையை முன்னிட்டு, நாம் எழுப்பினோம். இந்நிலையில் நீர் கூறும் வார்த்தை தகாது,'' என்று உரைத்தார். சிவநேசர் வேறுவழியின்றி மகளை அழைத்துச் சென்றார். பூம்பாவையை வேறொருவருக்கும் விவாகம் செய்து கொடுப்பதில்லை என்று அவருக்கு உறுதி பிறந்தது. பாவையும் அவ்வாறே துணிந்தனள். கன்னி மாடத்திலே பூம்பாவை தங்கி, கைலைநாதனைக் கருத்தில் இருத்தியவளாய்ச் சிவத்தை அடைந்தனள். பின்பு ஞான சம்பந்தர் அச் செட்டியாருக்கு இன்சொல் கூறி, திருவான்மியூர், திருக்கழுக்குன்றம், சிதம்பரம் முதலிய தலங்களைத் தரிசித்துக்கொண்டு, சீகாழி சேர்ந்தார்.

## 10. பதிகம்

பாவையை எழுப்ப நம் சம்பந்தப் பெருமானார் பாடிய பாடல்கள் இவையாம்:—

1. மட்டிட்ட புன்னையங் கானல் மடமயிலைக்
கட்டு இட்டக்கொண்டான் கபாலீச்சுரம் அமர்ந்தான்
ஒட்டிட்ட பண்பின் உருத்திர பல்கணத்தார்க்கு
அட்டிட்டல் காணாதே போதியோ? பூம்பாவாய்!

2. மைப்பயந்த ஒண்கண் மடநல்லார் மாமயிலைக்
கைப்பயந்த நீற்றான், கபாலீச்சுரம் அமர்ந்தான்
ஐப்பசி ஓணவிழாவும் அருந்தவர்கள்
துய்ப்பனவும் காணாதே போதியோ? பூம்பாவாய்!

3. வளைக்கை மடநல்லார் மாமயிலை வளர்மருகில்
துளக்கில் கபாலீச்சரத்தான் தொல் கார்த்திகை நாள்
தளத்தேந்து இளமுலையார் தையலார் கொண்டாடும்
விளக்கீடு காணாதே போதியோ? பூம்பாவாய்!

4. ஊர்திரை வேலை உலாவும் உயர் மயிலைக்
கூர்தரு வேல்வல்லார் கொற்றம் கொள்சேரிதனில்
கார்தரு சோலைக் கபாலீச்சுரம் அமர்ந்தான்
ஆதிரைநாள் காணாதே போதியோ பூம்பாவாய்!

5. மைப்பூசும் ஒண்கண் மடநல்லார் மாமயிலைக்
கைப்பூசும் நீற்றான் கபாலீச்சுரம் அமர்ந்தான்
நெய்ப்பூசும் ஒண்புழுக்கல் நேரிழையார் கொண்டாடும்
தைப்பூசம் காணாதே போதியோ? பூம்பாவாய்!

6. மடலார்ந்த தெங்கின் மயிலையார் மாசிக்
கடலாட்டுக் கண்டான் கபாலீச்சுரம் அமர்ந்தான்
அடலான் ஏறு ஊரும் அடிகள் அடி பரவி
நடமாடல் காணாதே போதியோ? பூம்பாவாய்!

7. மலிவிழா வீதி மடநல்லார் மாமயிலைக்
கலிவிழாக்கண்டான் கபாலீச்சரம் அமர்ந்தான்
பலிவிழாப் பாடல் செய் பங்குனி உத்திரநாள்
ஒலிவிழாக் காணாதே போதியோ? பூம்பாவாய்!

8. தண்ணா அரக்கன் தோள் சாய்த்து உகந்த தாளினான்
கண்ணார் மயிலைக் கபாலீச்சரம் அமர்ந்தான்
பண்ணார் பதினெண்கணங்கள் தம் அட்டமிநாள்
கண்ணாரக் காணாதே போதியோ? பூம்பாவாய்!

9. நற்றாமரை மலர்மேல் நான்முகனும் நாரணனும்
உற்றாங்கு உணர்கில்லா மூர்த்தி திருவடியைக்
கற்றார்கள் ஏத்தும் கபாலீச்சரம் அமர்ந்தான்
பொற்றாப்புக் காணாதே போதியோ? பூம்பாவாய்!

10. உரிஞ்சாய வாழ்க்கை அமண் உடையைப் போக்கும்
இருஞ் சாக்கியர்கள் எடுத்துரைப்ப நாட்டில்
கருஞ்சோலை சூழ்ந்த கபாலீச் சரத்தான் தன்
பெருஞ்சாந்தி காணாதே போதியோ? பூம்பாவாய்!

11. கானமர் சோலைக் கபாலீச் சரம் அமர்ந்தான்
தேனமர் பூம்பாவைப் பாட்டாகச் செந்தமிழான்
ஞான சம்பந்தன் நலம் புகழ்ந்த பத்தும் வல்லார்
வான சம்பந்தத்தவ ரோடும் வாழ்வாரே!

## 11. சம்பந்தர் சரிதம்

சோழ மண்டலத்தில் சீகாழி எனும் தலம் உளது. அங்கே சிவபாத இருதயர், பகவதியார் எனும் தம்பதிகள் இருந்தார்கள். அவர்களின் தவப் பயனாக ஞானசம்பந்தர் அவதரித்தார். மூன்றாம் ஆண்டில் ஒரு நாள் தந்தையார் நீராடச் சென்றார். குழந்தையும் உடன் சென்றது. பிதா நீராடுகையில், அம்மே அப்பா என்று பிள்ளை அழுதது. சிவபிரான் உமையுடன் தோன்றிக் காட்சி தந்தார். அம்மையோ பொன் கிண்ணத்தில் பால் ஊட்டினாள். நீராடி வந்த தந்தை தன் மகன் வாயில் பால் வடியக் கண்டு, "யார் தந்த பாலை உண்டாய்?" என்று அதட்டினார்.

உடனே அப்பிள்ளை "தோடுடைய செவியன் விடையேறி" எனும் பாடல் பாடி, ஆலயம் சென்று பணிந்தது. அது கண்ட அனைவரும் பிள்ளையை வணங்கித் தோளில் தூக்கிச்சென்றனர். உடனே அவர் பெருமையும் புகழும் எங்கும் பரவின.

அது முதல் பல தலங்களைத் தரிசிப்பதும் பாடுவதுமாக இருந்தார் பிள்ளையார். திருநீலகண்ட யாழ்ப்பாணர் அன்று முதல் பிள்ளையாரைப் பிரியாமல் இருந்து, அவர் பாடல்களை யாழில் அமைத்து ஒதிவரலாயினர். பின்பு பிள்ளையார் திருநெல்வாயிலரத்துறை எனும் தலம் சேர, ஆங்குள்ளோர் முத்துச்சிவிகை, முத்துக்குடை, முத்துச் சின்னம் இவை தந்து உபசரித்தனர். அப்பால் பிள்ளைக்கு உபநயனம் நடந்தது. பிள்ளையின் புகழைக் கேள்வியுற்ற திருநாவுக்கரசர் வந்து வணங்கப் பிள்ளையும் எதிர் சென்று வணங்கினர். ஒரு சமயம் திருப்பாச்சிலாச்சிரமத்திற்குச் சென்று, ஆங்கிருந்த கொல்லிமழவன் மகளின் முயலக வியாதியைத் தீர்த்தருளினர்.

திருவாவடுதுறைக்குச் சென்ற சமயம், யாகம் செய்யப் பொன் வேண்டும் என்று அவர் தந்தை விரும்பினர். உடனே பிள்ளையார் ஒரு பாடல் பாட, பூதம் ஒன்று தோன்றி, குறையாத செல்வம் கொடுத்து மறைந்தது.

பின்பு செங்காட்டங்குடி சேர்ந்து, சிறுத்தொண்ட நாயனரிடம் பிள்ளையார் விருந்துண்டார். இவ்விதம் பலதலமும் சென்று பாண்டிநாடு சேர்ந்து, அங்கே சமணரை வாதில் வென்ருர்; பாசுர ஏட்டைத் தீயில் இட, அது வேகாமல் பசுமை கொண்டு விளங்கிற்று; மீண்டும் ஒரு பாசுர ஏட்டை ஆற்றில் இட்டார்; அது ஆற்றுநீரைப் பிளந்து எதிர் ஏறியது; காயாப் பனையைக் காய்க்கச் செய்தார். பின்பு பல தலங்களையும் தரிசித்துக்கொண்டு, திருவொற்றியூர் சேர்ந்தார். அச்சமயத்தில்தான் அவரைச் சிவநேசர் திருமயிலைக்கு அழைத்துச் சென்ருர்.

## 12. மணமும் வீடும்

சம்பந்தர் சீகாழியில் தங்கியிருக்கும் சமயம், அவருக்குத் திருமணம் முடிக்க அந்தணர் அனைவரும் தீர்மானித்

தனர். பிள்ளையாரும் அதற்கு இசைந்தார். திருநல்லூர் வாசியான நம்பியாண்டார் நம்பியின் புதல்வியை மணமகளாக நிச்சயித்தார்கள். உடனே நம்பி தமது நல்லூர் வீதிகள் எங்கும் முத்துப் பந்தரிட்டு, நிலைத்தோரணங்கள் தூக்கி, மாடங்கள் தோறும் மணிவிளக்குகளை அமைத்து அலங்காரம் செய்தார். நாயனரின் திருமணச் செய்தி கேட்டு, சிவனடியாரும் வேதியரும் வந்து கூடினர்கள்.

முகூர்த்த தினத்தில் நாயனர் திருமணக் கோலம் பூண்டு, ஐந்தெழுத்து ஓதித் திருநீறு அணிந்து, மங்கல வாத்தியங்கள் முழங்க, வேதகோஷம் வழங்க, மணவறையிலே பொன் பீடத்தில் அமர்ந்தார். உடனே நம்பியார் தாரை வார்த்து, தமது புத்திரியைப் பிள்ளையாருக்கு அளித்தார். திருநீலநக்கநாயனர் வேதவிதிப்படி சடங்கு யாவும் செய்தார். உடனே சம்பந்தர் தமது பத்தினியுடன் தீயை வலம் வர எழுந்து, தீ வடிவாக விளங்கும் சிவபிரானை வணங்க எண்ணி, ஆலயத்தில் புகுந்து, ஈசனது பாதகமலம் சேரவேண்டி, முழுமுதலைத் துதிக்கலானர்.

உடனே சிவபெருமான் நமது சம்பந்தரை நோக்கி, "அன்ப! நீயும் உன் மனைவியும் மணங்காண வந்தார் யாவரும் சோதியில் வந்தடையுங்கள்" என்று அருளினர். ஆலயமெங்கும் ஒரே சோதிமயமாகத் துலங்கிற்று.

காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி
ஓதுவார்தமை நன்னெறிக்கு உய்ப்பது
வேதம் நான்கினும் மெய்ப்பொருள் ஆவது
நாதன் நாமம் நமச்சி வாயவே

எனும் பதிகம் பாடி, எல்லோரும் இச்சோதியில் புகுங்கள் என்றார் சம்பந்தர். அவ்வளவில திருநீலநக்க நாயனர், திருமுருகநாயனர், சிவபாத இருதயர், நம்பியாண்டார் நம்பி, திருநீலகண்டப் பெரும்பாணர் முதலிய யாவரும் தம் தம் மனைவியருடனும் சுற்றத்தாருடனும் சோதியுட் புகுந்தார்கள். பின்னர் திருஞான சம்பந்த சுவாமி தமது பத்தினியுடன் அச்சோதியை வலம் வந்து சிவபெருமானோடு கலந்தார். சுபம்!

---

முதல் பதிப்பு, பத்தாயிரம் பிரதிகள், 12—3—1932.

KESARI PRINTING WORKS, MADRAS.

ஸ்ரீ சாரதா சதங்கை, மணி - 10

கல்வி இம்மை பயக்கும்! நம்மை விளக்கும்!!

ஸ்ரீ

# வாள் வீர கேசரி

அல்லது

# தியாகமூர்த்தி கதை



எம். எஸ். சுப்பிரமணிய ஐயர் எழுதியது

விலை காலணா

வாரந்தோறும் ஒரு நூல் வெளிவரும்

# தமிழன்பருக்கும் பெரியாருக்கும் வந்தனம் !

ஸ்ரீ

சாரதா சதங்கை மணி

1. கற்பாசி
2. கிருஷ்ண குமாரி
3. சடையப்ப வள்ளல்
4. நீலி பராக்கிரமம்
5. இன்பரசக் கதைகள்
6. மன்மத விலாசம்
7. சிவராத்திரி மான்மியம்
8. வீரசிங்க அமரசிம்மன்
9. அறுபத்து மூவர் மகிமை
10. வாள் வீர கேசரி
11. பிரதாப சிம்மன்
12. விகடக் களஞ்சியம்

ஏஜண்டுகள் தேவை.

நல்ல வரும்படி உண்டு

உடனே எழுதவும்.

அன்பர்காள் !

அன்பர் பணி புரிய என்னை ஆளாக்கிவிட்டுவிட்டால் இன்ப நிலை தானே வந்து எய்தும் பராபரமே! என்று தாயுமானவர் கூறியுள்ளார். பிறருக்குப் பணி புரியவே, நாம் உடல் கொண்டுளோம். அப்பணியின் நடுவே, உடலையும் உயிரையும் விட நேரின், அதுவே பெரும் பேறும். தனது பருத்த தொந்தி இன்னும் பருக்க உழைப்போன் மனிதன் ஆகான். வீரகேசரி, வெற்றி வீரன், அதிசூரன் முதலிய பதினறு பேர் நாட்டாரின் நலத்தை மனத்திற்கொண்டு, உடலைக் கொடுத்தனர்; உயிரை விடுத்தனர்; ஓங்குபுகழ் கொண்டனர். அன்னாரின் சரிதம், "வாள்வீரகேசரி, அல்லது வீரத் தியாகி கதை" எனும் நாமம் தாங்கி, ஸ்ரீ சாரதா சதங்கையின் பத்தாவது மணியாகப்புறப்படுகின்றது. இவ்விதம் வாரம் ஒரு நூல் வெளிவரும். ஒவ்வொன்றும் விலை காலணாவே. பாலரும் அறிய வேண்டி, எளிய நடையில் எழுதியுள்ளோம். அன்பரின் ஆதரவையும் ஆண்டவன் அருளையும் எதிர்பார்க்கின்றோம்.

எம். எஸ். சுப்பிரமணிய ஐயர்,

ஆசிரியர்; ஸ்ரீ சாரதா சதங்கை மணி.

மயில்வாகன் கம்பனி,

32, ஐயப்பசெட்டி வீதி, மண்ணடி, மதராஸ்.

Presented by ... to Vivekananda Sanga



கல்வி இம்மை பயக்கும்! நம்மை விளக்கும்!!

ஸ்ரீ

# வாள் வீர கேசரி

அல்லது

# தியாகமூர்த்தி கதை

## 1. வல்லான் மாளிகை

"வல்லானை வெல்ல வல்லார் யாவர்? சூரபதுமன் வாழ்வை அறிவோம். அவன் பெரும்புறக்கடலிலே ஆகாய மாளிகை கட்டி வாழ்ந்தான். வல்லானே ஏரியின் நடுவே, வானமாளிகைகொண்டு, வீறுகாட்டுகின்றான். அந்த ஏரி வற்றாத சமுத்திரம் போன்றது; அளவிடற்கரிய ஆழமும் உடையது. அதன் மத்தியில் உள்ள மாளிகையின் சிறப்பே சிறப்பு! அதன் அடிப்படையோ வெகு விநோதம். அமைப்பும் அப்படியே!

"நீருக்குமேல் நூறடி உயரம் நீண்டு திரண்ட இருப்புக் கம்பங்களின்மீது அம்மாளிகை எழும்பியுளது. ஆளேற முடியாமல், அக் கம்பங்கள் வழுக்குமரம்போல் விளங்குகின்றன. அக் கம்பங்களின்மீது இரும்புத் தூலம் கிடத்தியுள்ளான்; அத்தூலங்களின்மீது இருப்புக் கைகள் நிரைத்து, தகடுகள் பரப்பி, இருப்பாணியால் தைத்திருக்கின்றான். அந்த அடிப்படையின்மீதுள்ள எழடுக்கு உப்பரிகை வானத்தை முட்டும்; சூரியனது பரிகள் அந்த உப்பரிகையின் உச்சியில் சற்றே நின்று காலாறும்.

"மாளிகையைச் சுற்றி நறுமலர் வனம் ஒன்றுண்டு. தேவலோகத்தில் கிடைக்காத பன்மலர்களும் அவ்வனத்

தில் நிரம்பிக் கிடக்கும். காய் கனி மரங்களோ கணக்கற்றன. அத் தோட்டத்திலே மயில்களும் குயில்களும் கிளிகளும் பூவைகளும் கொஞ்சிக் குலாவும். இன்னும் பல வகைப் பறவைகளும் ஆடிப் பாடி ஆனந்தம் அடையும். அருங்கோடை காலத்திலே அச் சோலை தண்ணென்று குளிர்ச்சி தரும்; குளிர் காலத்திலோ, வாடையைப் போக்கும் விசேஷம் வாய்ந்ததாம். கண்டார் அனைவரும் அதனை அளகாபுரியோ, அமராவதியோ என்று வியந்து பேசுவர். கற்பக தருவைப்போல் அம்மாளிகையில் போகப் பொருள்கள் அனைத்தும் கிடைக்கும். குபேர சம்பத்தும் இந்திர போகமும் எய்தி, அவன் இறுமாந்து கிடக்கின்றான்.

“அவனிடம் இரண்டு புரவிகள் இருக்கின்றன. ஒன்றின் பெயர் சரகேசரி; மற்றொன்றோ சக்கரகேசரி எனப்படும். அம்பு விட்டாற்போல் வான வீதியிலே சரகேசரி விரைந்து செல்லும். சக்கர கேசரியோ திருமாலின் சக்கரமேபோல் சுழன்று பாயும். வல்லான் தரித்திருக்கும் வஜ்ஜிரவாள் எழுவகை உலோகங்களையும் துணித்து எறியும் வன்மை வாய்ந்தது. வஜ்ஜிரதண்டமோ கற்கோட்டைகளையும் தவிடுபொடி பண்ணிவிடும் தன்மையது. வல்லான் பூண்டுள்ள வச்சிர கவசம், அவன் உயிருக்கு ஓர் அரணாகும். அம்பும் குண்டும் வாளும் வேலும் விஷப்புகையும் திராவகமும் வந்து பாய்ந்தாலும் அக்கவசம் அசையாது; அவன் உடலுக்கு ஆபத்தும் நேராது.

“நாள்தோறும் இராக்காலத்திலே நடுநிசி நேரத்தில் அவன் தனது உடலில் கவசம் தரித்து, வாளும் கதையும் கையில் தாங்கி, பரியொன்றின்மீதே ஏறி அமர்ந்து, மனோ வேகமாய் வான வீதியிலே வீறுப்புடன் செல்வான்; கோட்டை கொத்தளங்களை எல்லாம் கண்ணிமைப்பொழுதில் தாண்டி விடுவான்; அரண்மனைக் கதவுகளையும் பொக்கிஷ அறைகளையும் கதையை வீசித் தூள் ஆக்குவான்; எதிர்ப்பவரையோ வச்சிரவாளுக்கு இரை கொடுப்பான். நாட்டாரின் பொருளையெல்லாம் கொள்ளைகொள்வான்; நல்ல மங்கையரையோ சிறை செய்து தூக்கிச் செல்வான். நீதி, நியதி என்பன அவனிடம் கிடையா; அவன் இட்டதே சட்டம்; கொண்டதே கோலம்; கண்டதே காட்சி.

வல்லான் வகுத்ததே வாய்க்கால் எனும் முது மொழிக்கு அவனே மூலகாரணம் என்று மொழிதல்வேண்டும்.

"அவன் இழைக்கும் தொல்லையோ சொல்லி முடியாது; யம ராட்சதனுகவே அவன் விளங்குகின்ருன்; ஏழரை நாட்டுச் சனியையும் நாம் சமாளிக்கலாம்; அவன் செய்யும் உபத்திரவமோ சகிக்கமுடியாது. அவன் யாரிடமும் அகப்படுகிறவனுய் இல்லே; அம்பும் குண்டுகளும் அவன் மீது பாயப் பின் வாங்குகின்றன. அவனே ஜயிக்க வல்லார் யாவர்? அல்லது அவனே அடக்க உபாயம் யாது? அவனே ஓராள்; அவன் துணேவரும் ஒரு சிலரே. நாமோ பலர்; நம் துணேவரோ பல கோடி. அரவத்தைக் கண்டதவளேபோல் நாம் தயங்கித் தவிக்கின்ரேம். இத்தொல்லே என்று தீரும்? நம்மில் சூரரானேர் ஒருவரும் இல்லேயோ? தியாகிகள் ஆவோர் மருந்தினுக்கும் இலரோ? ஒருவனுக்கு அடங்கி அஞ்சி வாழ்வதினும், ஆண்மை காட்டி வீழ்வதே மேலாம் அன்ரே? அன்பர்களே! வல்லானே வெல்ல வல்லார் இருப்பின், உடனே எழுந்திருக்கலாம்; இதோ தாம்புலமும் உளது," என்று நாட்டுக்குப் பெரியார், நானிலமும் மெச்சும் ஒருவர், நவின்ருர்.

## 2. பெரு வீர வாசகம்

மகா நாட்டில் கூடி நின்ற மக்களிலே பட்டவர்த்தனரும் பதவிப் பிரியருமான பலர் அது கேட்டு, சிம்ம சொப்பனம் கண்ட குஞ்சரம் போல் கலங்கினர்; கைகால் விதிர்க்கக் குடரும் குழம்பினர்; அப்பப்பா! வல்லானே வெல்ல வல்லாரும் உண்டோ என்று உள்ளம் ஒடுங்கினர்; கடல் முழுதையும் கவிழ்ந்து குடிக்கக் கூடுமோ என்று குலேந்தனர். எரிமலேயை அணுக ஒண்ணுமோ என்று உரைத்து ஒடுங்கினர். மயிர் முனேயால் மலேயைத் துளேக்க முடியுமோ என்று மாழ்கினர். வல்லான் என்ற பெயரைக் கேட்டாலே, அழுத பிள்ளேயும் வாய் மூடுமே; அவனே பரந்த வானத்தை ஒரு வில்லாக வளேப்பான்; கடல் மணலே நெடுங் கயிருகத் திரிப்பான், நெருப்பாற்றை மயிர்ப் பாலம் கொண்டு கடப்பான்; அவனே வெல்லுதல் என்பது ஆகாத காரியம், என்று பலவாறு இயம்பி நின்றனர்.

அடுத்த ஊரில் சண்டை என்று கேட்டால், அடுப்பங்கரையில் ஒளிந்து கொள்வோரும், வேற்றூரிலே சண்டையானால் வெளிப்புறத்தில் பதுங்கிக் கொள்வோருமான பேர்வழிகள் அங்ஙனம் பேசி, அறிவழிந்து கிடந்தார்கள்.

அச்சபையினரில் வாள் வீர கேசரி, வெற்றிமாலை வீரன், அதிசூரன் முதலிய பதினாறு பேர் எழுந்தனர்; சபையை வணங்கினர்; ஆறிலும் சாவு, நூறிலும் சாவு என்று கூவினர்; காயம் என்பது கருப்புக் கட்டி அன்று என்று கர்ஜித்தனர். உயிர் என்பது வெல்லம் அன்று என்று உறுமினர்; பின்பு சிங்கநாதத்துடன் சென்று, நாட்டுக்குப் பெரியாரை வணங்கி, இவ்விதம் சொல்லத் தொடங்கினர்:—

“தலைவ! நீரும் சரி நாட்டாரும் சரி, இனி அச்சம் விடுத்து ஆறுதல் கொள்ளலாம். உங்கள் ஆசி ஒன்றே எங்கள் துணை. எங்கள் சித்தசுத்தியே எங்களுக்கு ஊன்று கோல்; ஆண்டவன் அருளே எங்களுக்கு அரிய ஆயுதம். இப்போதே நாங்கள் புறப்படுகின்றோம். பொல்லானை வல்லான் தலையை விரைவில் கொண்டுவருவோம்; அல்லது அவனுடன் பொருது, மார்பில் அடியுண்டு மகிமையுடன் மரிப்போம். மரித்து மீண்டும் பிறவி எடுப்பின், வல்லான் தலையைக் கிள்ளவே நினைவு கொண்டு கிளம்புவோம். இரண்டில் ஒன்று நாங்கள் செய்யத் தவறின், பாதகர் ஆவோம்; உண்ணும் சோற்றில் நஞ்சு கலந்த பழி எய்துவோம்; தாயார் பசித்திருக்கத் தன் பாழ் வயிறு நிரப்பிக் கொள்ளும் பேதையர் ஆவோம்; அடைக்கலம் புகுந்தோரைக் காட்டிக் கொடுத்த துரோகிகளும் ஆவோம்; செய்ந் நன்றி கொன்ற கசடர் ஆவோம்; உரிமைவிற்றுப் பிழைப்போர் பிழைக்கட்டும். நாங்களோ நாட்டு நலத்தையே மதிப்போம்”,

என்று சபதம் செய்து வஞ்சினம் பேசினர். நாட்டுப் பெரியோரும் மற்றையோரும் அது கேட்டு, அடங்கா ஆனந்தம் அடைந்து, ஆண்டவனைத் துதித்து, அப்பதினாறு வீரரையும் வாழ்த்தி வழி அனுப்பினார்கள். அன்னை பாரதியை வணங்கி, அன்னார் விடை பெற்று, வல்லான் வசிக்கும் ஏரி நோக்கி விரைந்து சென்றனர்.

## 3. பிணத் தெப்பம்

பேயும் உறங்கும் பாதி ராத்திரியில், ஏரிக்கரை சேர்ந்தனர் பதினறுபேரும். அந்த ஏரியோ பெருஞ் சாகரம் போல் பேரலை கொண்டு துலங்கிற்று. அம்மம்ம! இதனைப் பார்க்கவும் பயமாய் இருக்கின்றதே, என்ருன் ஒருவன். வல்லாள கண்டன் நாடு நகரங்களில் வாசம் செய்யலாகாதா, என்ருன் இன்னொருவன்; காடு மலைகளில் வசிக்காமல், ஏரியிலா மாளிகை கட்டி வாழ வேண்டும், என்ருன் மற்ெருருவன். இந்த ஏரி நூறு புருஷ பாகம் ஆழ்ந்திருக்குமே, என்ருன் வேறு ஒருவன். இதனை நீந்திச்செல்ல ஒண்ணுதே என்று சொன்னன் மற்றும் ஒருவன். தெப்பம் கட்டியே கடக்க வேண்டும், என்ருன் இன்னும் ஒருவன்; தெப்பத்திற்கு உரிய கம்பு கழிக்கு என்ன செய்வது, என்ருன் வாள் வீர கேசரி. முன் வைத்த காலைப் பின் வாங்கலாகாது, என்ருன் வெற்றி மாலை வீரன்.

உடனே பதினறு பேரில் எழுவர் முன்வந்து, "எங்கள் தலைவ! கம்புகழிக்கா கவலை? நாங்கள் எழுவர் இருக்கின்ருேம். என்றைக்காயினும் ஓர் நாள் இறந்தே தீர வேண்டும். நாம் கூறிவந்த வஞ்சினம் வீணுதல் கூடாது. எங்கள் எழுவரையும் வெட்டிச் சாய்த்துத் தெப்பமாகக் கட்டிக் கொள்ளலாம்; எங்கள் தோள்களைத் துணித்து, தெப்பமரத்தின் குறுக்குக் கழிகளாக இணைக்கலாம்; எங்கள் குடர்களைப் பீறிப்பிடுங்கிக் கயிருகத் திரித்து இறுக்கலாம்; அத் தெப்பத்தை ஏரிநீரில் மிதக்க விட்டு, நீங்கள் ஒன்பதின்மரும் ஏறிச் சென்று, வல்லான் மாளிகையைக் குறுகலாம். இஃதே ஏற்ற மார்க்கம். தேவரைக் காக்க முதுகெலும்பு கொடுத்தருளினர் ததீசி முனிவர்; ஒரு புலவன் வறுமையைப் போக்கத் தனது சிரத்தைக் கொடுக்க இசைந்தான் குமணன். புன் புறவைக் காக்க வேண்டியே சூரிய குல திலகன் சிபிச் சக்கரவர்த்தி தன் உடம்பின் சதையை அரிந்து அரிந்து வைத்தான். எங்கள் தியாகம் எம்மாத்திரம்! இந்த உடல் பிறருக்குப் பயன்படாதாயின், இருந்தும் இல்லாததேயாம். வீணே தயக்கம் வேண்டாம். சிந்தனையும் தேவை இல்லை," என்று செப்பினர்.

வாள் வீர கேசரியோ சற்றே ஆலோசித்தான். அந்த எழுவரும் உடனே தமது உடைவாள் கொண்டு, சிரத்தைக் கொய்து நிலத்திலே சாய்ந்தனர்.

## 4. தியாக மூர்த்திகள்

உடனே எஞ்சிய ஒன்பதின்மரும் அவ்விதம் பிணத் தெப்பம் கட்டி, அதன்மீது ஏறி, இருப்புக் கம்பத்தைக் குறுகினர். குறுகியதும், அக் கம்பத்தின்மீது தொத்தி ஏற, அவர்கள் முயன்றுர்கள். வழுக்கு மரத்தினும் அக் கம்பங்கள் வழுவழுப்பாக இருந்தன. அதனுல் ஓரடி உயரங்கூட அவர்கள் ஏற இயலவில்லை. அது கண்டு, யாது செய்வதென ஒன்பது பேரும் திகைக்கலாயினர்.

அதன்மேல் அறுவர், " தலைவ ! கம்பத்தின்மீது ஏறிச் செல்லக் கவலை ஏன்? கருமமே கண்ணுயினுர் வேறு எதனையும் கவனியார்? வந்த காரியம் முடியவேண்டியே நமது அன்பர் எழுவர் தத்தம் உடல்களை உதவினர்; நாமும் தெப்பம் செய்து ஏரியைக் கடந்து வந்தோம். நாம் ஆண் பிள்ளைகள் அல்லமோ? அவர்களுக்கு நாங்கள் பின்வாங்க மாட்டோம். எங்கள் அறுவரையும் வாளுக்கு இரையாக்கி, ஒழுகும் உதிரத்தை வாரி, இக்கம்பத்தின் மீது இறையுங்கள். இரத்தமோ சளிப்பு உடையது ; அஃது கம்பத்தில் ஒட்டிக்கொள்ளும் ; உடனே வழுவழுப்பு மாறும். சருக்கு மரம் ஏறுவதுபோல் மேலாடையைக் கம்பத்தில் ஒரு பாக தூர அளவிற்கு ஒன்றுகக் கட்டி, ஏணிப் படியில் கால் வைத்து ஏறுவதுபோல், அதன்மீது அடிவைத்து ஏறிச் செல்லுங்கள். மீண்டும் அறுவரை இழப்பதா என்று எண்ணவேண்டாம், கொண்ட காரியம் முற்றுப் பெறுதலே முக்கியம். நாய் நரிக்கும் பேய் கழுகினுக்கும் எங்கள் உடலம் உணவு ஆகாமல், நல்ல காரியத்தில் பயன்படல்வேண்டும். உடல் எடுத்த பயன் யாது? ஊருக்கு உழைப்பதே யாம்; வேறில்லை. நாடெங்கும் வாழ, எங்களை அர்ப்பணம் செய்கின்ருேம். தனது தந்தை யயாதியின் நலத்தை மதித்து, பூரு என்பான் இளமை தந்தான் ; பீஷ்மனே அரசுரிமையை விட்டுக் கொடுத்தான் ; சோற்றுக் கடன் கழிக்கவே, கொடையில் சிறந்த கர்ணன் தன் தம்பியர் பாண்ட

வருக்கு விரோதமாகத் துரியோதனனுக்குத் துணையாகி உயிர் ஈந்தான். எங்கள் குலமும் நாடும் விளங்க, நாங்கள் ஆருயிர் வழங்கத் துணிந்துள்ளோம்,'' என்று கூறி அந்த அறுவரும் ஈட்டிகொண்டு உயிரை விடுத்தனர்.

உடனே அந்த அறுவரின் இரத்தத்தை வாரி இரைத்துக் கம்பத்தின் மீது இலகுவாக ஏறி, எஞ்சிய மூவரும் வல்லான் மாளிகை வாயிலைக் குறுகினர். மூவரில் இருவர் சிறிதும் சந்தடி செய்யாமல், வல்லானது சயன அறை சேர, ஒருவனோ குதிரை லாயத்தில் புகலானான். சர கேசரி, சக்கர கேசரி என்னும் அசுவங்களில் ஒன்றோ, வேற்று மனிதனது வாசனை கண்டு, கட்டுத் தறியைப் பிடுங்கிக் கொண்டு, கோடை இடிபோல் கனைத்து அங்கும் இங்கும் ஓடத் தலைப்பட்டது. சவமே போல் தூங்கிக் கிடந்த குதிரைக்காரன் அந்தப் பேரிரைச்சல் கேட்டு, விழித்தெழுந்தான்; பின்பு குதிரையைப் பிடித்து வந்து கட்டிச்செல்லவும் அவன் முயலலானான்.

குதிரை லாயத்தில் இருந்த சூரனோ, குதிரைக்காரனது கண்ணில் படாதிருக்க எண்ணி, பரிக்குப் போடும் புல் படுக்கையின் கீழே பதுங்கிக் கொண்டனன். குதிரைக்காரனோ தூக்க மயக்கத்தில், புல் படுக்கையின்மீது கட்டுத் தறியை வைத்து அடிக்க, அதன் கீழிருந்த சூரன் மார்பில் அக்கட்டுத்தறி பாயலாயிற்று. குதிரைக்காரன் அடிக்க, அடிக்க, அத்தறியோ சூரனது மார்பை ஊடுருவி, முதுகுப்புறம் தாண்டி, நிலத்திலும் பாய்ந்தது. மார்பிலே முளை இறங்கும் காலையில், சூரன் சிறிதும் வாய் திறக்கவில்லை; பெருமூச்சும் விடவில்லை.

“சிறிதேனும் சந்தடி ஏற்படின், வல்லானது சயன அறைக்குள் சென்றிருக்கும் இருவருக்கும் ஆபத்து நேரக்கூடும்; அவ்விதம் நேரின், வந்த காரியம் சிதறிப் போம். அதனினும் நமது உயிர் போதலே மேலாம். பதின்மூவரின் உயிரைவிட நமது உயிர் ஒரு பெரிது அன்று. இந்தச் சித்திரவதை எம்மாத்திரம்? வல்லான் தலையைக் கொய்தல் அன்றோ பிரதானம்?'' என்று எண்ணிக் கிடந்தான். குதிரைக்காரனோ முளையை இறுக அடித்துவிட்டு, முன் போல் படுத்துறங்கப் போய்விட்டான்.

## 5. இந்திர போகம்

வல்லாளனது படுக்கை அறையில் புகுந்த வாள் வீர கேசரியும் வெற்றி மாலை வீரனும் அவ்வறையின் வனப்பைக் கண்டனர். கண்டதும், அதன் பேரலங்காரமும், அமைப்பும் அவர்கள் கண்ணையும் கருத்தையும் கவர்ந்தன. அங்கே நான்கு பக்கமும் சுடர்விட் டெரியும் கிளை விளக்கும் தேர்விளக்கும் கண்டு, கண்கள் கூசின. சுவரெங்கும் நிறைந்து விளங்கும் நிலைக் கண்ணாடிகள், பிரமிப்பை உண்டு பண்ணின; விதம் விதமான சித்திரப் படங்களோ வியப்பும் களிப்பும் ஊட்டின. வாத்தியக் கருவிகளோ கானரசம் புகட்டாநின்றன.

வல்லாளகண்டன் உல்லாசமாக உறங்கும் உயரிய மஞ்சமோ, உள்ளத்தைக் கொள்ளை கொண்டது. மஞ்சத்தின்மேலே மகிமையான சரிகை விதானமும், அதனைச் சுற்றியுள்ள பல வர்ண ஜாலர்களும், நான்கு பக்கமும் மூடிநின்ற ரவைசல்லாத் திரையும், மிக ரமணீயமாய் இருந்தன. அமளியின்மீது அன்னத் தூவி, எலிமயிர், இலவம் பஞ்சு இவற்றால் ஆகிய ஐவகை மெத்தையும், அவற்றின்மீது அழகாக விரித்திருந்த சலவைத் துப்பட்டியும், அதன்மீ துள்ள முகமல் திண்டும், படுக்கையின் நான்கு புறமும் பளபளவென்று பிரகாசம் தரும் பட்டுத் தலையணையும், நேத்திரானந்தம் விளைத்தன.

கட்டிலைச் சுற்றி அணி அணியாக நிறுத்தியுள்ள சூத்திரப் பதுமைகள் பலவும் இந்திரஜாலம்போல் செயல் பல புரியாநின்றன. உதாரணமாக, அப் பதுமைகளில் சில, வெண்சாமரை வீசி நின்றன; சில, அழகிய ஆலவட்டம் அசைத்தன; சில, எக்காளம் ஊதி நின்றன; சில, இனிய கீதம் பாடின; சில, மத்தளம் கொட்டின; சில, தாளம் போட்டன. சிலவோ, வீரரைப்போல் வாளும் வேலும் தாங்கி, வீறுகொண்டு விளங்கின; சிலவோ, சிங்கார நடனம் செய்தன; சிலவோ, இனிய பலகார வகைகளை எடுத்து ஏந்தி நின்றன. சில, காய்ச்சின பசும் பாலைக் கைதனில் தாங்கியிருந்தன. சில, இங்கும் அங்கும் உலாவிக் காவல்புரிந்து நிற்கலாயின.

மரகதத் தட்டுக்களில் வாசனைத் திரவியங்களை ஏந்திச் சில சூத்திரப் பதுமைகள் காத்திருந்தன. பாரசிகப் பன்னீரை எடுத்துச் சில தெளியாநின்றன. வல்லானது தலைமாட்டுப் பக்கத்தில், கோமேதகத் தம்பலப்படிகம் கதிரொளி வீசியது; காச்மீர ஜரிகை சால்வைகொண்டு உடலெங்கும் மூடிக்கொண்டு, வல்லான் சயனித்திருந்தான். அவன் பக்கத்திலே அதி ரூப லாவண்யமுள்ள பெண்ணொருத்தி பலவகை அணிகளும் பூண்டு, பரிமள திரவியம் பூசி, நறு மணம் வீசும் மலர் மாலை சூடி, மோகினியே போல் ஒய்யாரமாகப் படுத்திருந்தனள்.

அம்மாளிகையில் மற்றுமுள்ள அதிசயங்களை எல்லாம் இருவரும் நோக்கி, வல்லானது வாழ்வைக் கண்டு, "இத்துணை போக போக்கியம் படைத்த இவன் மாபாவி ஆயினனே. பாவிக்கும் பெருவாழ்வு அளித்தல் பிரமனுக்கு ஏற்குமோ? நாள் தோறும் இவன் எண்ணிறந்த மக்களைக் கண் கலக்கம் காண்பவன் அன்றோ? கும்பகர்ணனைப் போல் இவன் உறங்கிக் கிடக்கின்றான். இந்த உறக்கத்தினின்று இவன் விழித்து எழு முன், வந்த காரியத்தை நாம் சாதித்துக் கொள்ள வேண்டும். சற்றேனும் தாமதிப்பின், பொழுது விடிந்துபோம்; அப்பால், இவனை ஆராலும் வெல்ல முடியாது;" என்று கருதினர். உடனே வாள் வீர கேசரி என்பான் தாவிக் கிளம்பி, வல்லான் மார்பில் தொப்பெனக் குதித்து, அவன் கழுத்தை இறுகப் பற்றிய வண்ணம், வீர வாளை ஓங்கலானான்.

## 6. மாங்கல்யப் பிச்சை

அவ்வேளை வல்லான் திடுக்கிட்டு எழுந்து, "அந்தோ! நாம் கண்ட கனு உண்மையாகி விட்டது" என்று எண்ணி வீர கேசரியை நோக்கி, "வீரர் வீர! அபயம்! அபயம்! ஒரு வாரமாக நான் பல துர் நிமித்தங்கள் கண்டேன்; அவை இப்போது தப்பாமல் பலித்து விட்டன. ஏரியின் நடுவே அழியாக் கோட்டை கட்டி வாழ்ந்தும், என்ன பயன்? இன்றளவும் என் மாளிகையை எவரும் அணுகியதில்லை; நீயோ மகா வீரனாக இருத்தல் வேண்டும். இல்லையேல் இங்கு வந்திருக்க இயலாது. வல்லானை வெல்லும்

பெரு வல்லான் இல்லாமல் போவனே, என்று என் தேவி எந்நேரமும் இசைத்து வந்தாள். அப் பத்தினியின் வார்த்தை பழுது படவில்லை,'' என்று கூறினன்.

இதற்குள் அம்மோகினிப் பெண் எழுந்து, பதிக்கு நேர்ந்த கதியைக் கண்டு கலங்கி, "ஐய! சரணம் சரணம்! மாங்கல்யப் பிச்சைத் தந்து, என்னை வாழ்விக்க வேண்டும்'' என்று இரந்து கேட்டனள். வல்லானும், "அதி சூர! என் கழுத்தை அறுப்பதில், உனக்கு என்ன பயன் கிட்டும்? என்னை உயிரோடு விடின், ஏவின வேலையெல்லாம் இயற்றிக் காத்து நிற்பேன். இராட்சதனுக்கும் ஒரு புரோட்சதன் இருப்பான் என்று இப்போது உணர்ந்து கொண்டேன். இனி, யான் யாரையும் துன்புறுத்தேன்; எவர்க்கும் இனிமை புரியவே எண்ணம் கொள்வேன். கருணை கூர்ந்து காத்தல் வேண்டும்; வீரர்க்கு அதுவே அழகு,'' என்று கைகூப்பினன்.

அருகே யிருந்த வெற்றிமாலை வீரனே, "அன்ப! பாதகனைத் தொலைக்காமல் பெருங்கருணை காட்டுதல் தகுமோ? கட்டிலின் மேல் ஏறிய பின்பும், முறை பார்ப்பது உண்டா? இவன் தலையைக் கொணர்வதாக நாம் வீறு பேசி வந்துள்ளோம். இதனை மறக்க ஒண்ணாது,'' என்றனன். அது கேட்டதும், மோகினிப் பெண், "வீரர்காள்! பெண் என்றால் பேயும் இரங்குமே. என் வாழ்வைக் குலைப்பதில் உங்களுக்கு ஒரு லாபமும் இராது. இனி, என் கணவர் யாருக்கும் தீங்கு இழையார். அவரைக் கொல்லாமல் விட்டு விடுங்கள். நாங்கள் இருவரும் வேறு தேசம் சென்று, பிச்சை யெடுத்தேனும் வாழ்ந்து வருவோம். இந்த மாளிகையில் உள்ள பொருள்களை எல்லாம் நீங்கள் எடுத்துச் செல்லலாம்; உயிர்ப் பிச்சையும் மாங்கல்யப் பிச்சையும் வேண்டுகின்றேன்,'' என்று கண்ணீரும் கம்பலையுமாகக் கூறி நின்றாள்.

வீரகேசரி, "பெண்ணே! நல்லது! வல்லான் தலையைக் கொண்டு வருவதாக எங்கள் தலைவனிடம் உரைத்து வந்துளோம். இதற்கு என்ன செய்வது?'' என்று வினவினன். அப்பெண், "ஐயனே! அங்ஙனமாயின், மாற்றுத் தலை யொன்று கொண்டு செல்லலாம். எனது கணவன்

கொட்டம் குலைந்துவிட்டது. அவருக்கு உரிய பரிகளையும் ஆயுதங்களையும் எடுத்துக்கொள்ளுங்கள். அப்பால் அவர், கரையில் கிடக்கும் முதலைபோல் வலியற்றுவிடுவார். அம் பிகையின்மீது ஆணை. இனி என் கணவர் நல்லவராக விளங்குவார்,'' என்று சொல்லினள். வல்லானும் தனது வாளைத் தொட்டுச் சபதம் செய்து கொடுத்தான்.

பெருவீரர் இருவரும் பெண்ணின் வார்த்தையை நம்பி, வாளை உறையில் இட்டனர். உடனே வல்லானும் அவன் மனைவியும், வீரர் இருவரையும் அழைத்து மாளிகையின் வனப்பனைத்தையுங் காட்ட எண்ணினர். அக்குறிப் பறிந்து சித்திரப் பதுமை இரண்டு, பந்தம் பிடித்து வழி காட்டிச் சென்றன. மெத்தையின் ஏழடுக்குகளையும் அவர் கள் ஏறிப் பார்த்தார்கள்; குதிரை லாயமும் மாட்டுக் கொட்டிலும் பிரபுக்களின் வீடுகளை மிஞ்சி விளங்கின; உப்பரிகையைச் சுற்றியுள்ள சோலையோ, இந்திரனது பூங்காவேபோல் தோன்றியது. சோலையிலே செடி கொடி களுக்கு நீர் இறைக்கும் சூத்திரங்களோ அந்தமாக அந்தர மளாவி நின்றன. வல்லான் ஜலக்கிரீடை செய்வதற்கான தாமரைத் தடாகம், பளிங்குக்கல்படுத்து, மரகதக்கரை யோட்டி, வயிரப் படிகட்டி, முத்துப்போல் தெளிந்த நீர் கொண்டு துலங்காநின்றது.

## 7. சித்திரவதை

சோலையின் நடுவே, தங்கச் சுவர் எழுப்பி, வெள்ளித் தூண்நிறுத்தி, நிலப்பாவுக்கல் ஏற்றி, பவளக் கொடுங்கை அமைத்துப் பார்ப்போரின் மனத்தைக் கொள்ளைகொள் ளும் பளிங்கு மண்டபம் வானளாவி நின்றது. அதன் சுவர்களிலே ஒரு புறம் இராம ராவண யுத்தமும், மற் றொரு புறத்தே மாபாரதப் போரும், இன்னொரு புறத்தே சூரபதுமன் சண்டையும், வேறொரு புறத்தே அறுபத்து நான்கு திருவிளையாடல்களும் ஓவியரால் அதி உன்னத மாக வரையப்பட்டிருந்தன. அம் மண்டபத்தின் மத்தி யிலே வல்லான் வீற்றிருக்கும் நவரத்தின சிங்காதனமும், அதனருகே பத்மராக பீடமும், தந்த நாற்காலிகளும் தொழில் திறமையைக் காட்டாநின்றன.

அச்சோலையிலே மரக்கிளைகளில் பனங்காய்கள்போல் வரிசை வரிசையாக மனித சிரங்கள் தொங்கியிருந்தன. ஈதென்ன கோரம் என்று, வீர கேசரியும் வெற்றிவீரனும் வினவினர். மோகினிப் பெண்ணோ நாக்குழற, "வீரர்காள்! இக் கொடுமையை என்னென்று உரைப்பேன். என் நெஞ்சம் பதைக்கின்றது. நிதியும் கணவனும் நேர்படுதல் விதியின் பயன் அல்லவா? என் கணவர் கொன்று குவித்த அரசரின் தலைகள் இவை. வெட்டொன்றும் துண்டிரண்டுமாக அவர் பலரையும் கொன்று, முண்டங்களை அங்கேயே துடிக்கவிட்டு, மண்டைகளை மட்டும் இங்கே கொணர்ந்து கட்டிக் காட்சி கொள்ளுதல் வழக்கம். தேவருக்குத் தோன்றிய இடுக்கண்கள் எல்லாம் முன்னம் முருகக் கடவுளால் தொலைந்துபோயின. இப்போதோ என் கணவரால் பிறருக்கு நேரும் இன்னல்கள் புண்ணியவான்களான உங்களால் அகன்றன. நீங்களும் உங்கள் குலமும் ஓங்கி உயர உத்தமனை வழுத்துகின்றேன்," என்றனள்.

அரண்மனையின் வனப்பனைத்தையும் பார்வையிட்ட பின்னர், வீரர் இருவரும் திரும்பி, சயன அறை சேர்ந்தனர். மோகினிப் பெண் உரைத்தவண்ணம், பொய்த் தலையொன்று சமைக்கப்பட்டது. பின்னர் இருவரும் குதிரைலாயம் சென்று பார்க்க, அங்கே அரிய நண்பன் மாண்டு கிடந்தனன். அது கண்டு இருவரும் பெருந் துக்கம் எய்தினர். பின்பு, இருவரும் ஒரொரு குதிரைமீதேறி விரைந்து, நாடு சேர்ந்தனர். வீரரின் வரவை எதிர்நோக்கி நின்ற நாட்டார் அனைவரும் முதலில் பரமானந்தம் அடைந்தார்கள்; அப்பாலோ, பதினறுபேரில் இருவரே வந்தமைகண்டு நெடுந்தூரம் எண்ணிநெஞ்சம் வியர்த்தனர்.

## 8. பச்சை ரத்தம்

வாள்வீர கேசரியின் வலது கையிலே வச்சிரவாள் தகதக என ஒளி வீசாநின்றது. இடது கையிலோ வல்லானது பொய்த்தலை மெய்த்தலையே போல் பிரகாசிக்க, கண்கள் இரண்டும் சுழல, கண்ணீர் பெருக, புருவம் இரண்டும் நெரிய, உதடுகள் துடிக்க, தலைமயிர் அவிழ்ந்து குலைய, நெற்றியிலே திருநீறும் வீரபட்டமும் மிளிர, கழுத்திலே

பச்சை ரத்தம் ஒழுக, அக்காட்சி கண்டு அனைவரும் பிரமிப்புக் கொண்டனர். பின்பு, நாட்டாரும் பிறரும் அச்சூரரின் தோற்றம் நோக்கி பரபரப்புக் கொள்ளா நிற்க, பெரியதனக்காரனே உற்றது முற்றும் கேட்கப் பொறுமையின்றி, "வல்லான் தலையை எங்ஙனம் துணித் தாய்?" என்று வீரகேசரியை வியந்து கேட்டான்.

வீரகேசரியோ, "தலைவ! இவ்விதந்தான் துணித் தேன்," என்று கூறி வாள்கொண்டு தனது தலையை வெட் டிக்கொண்டு, கீழே வீழ்ந்தனன். உடனே தலை யொரு பக்கமும் உடல் ஒரு பக்கமுமாக விழுந்து துடித்தன. அது கண்டு சிலர், அந்தோ! அந்தோ! என்று அழு தனர்; சிலர், இது யார் செய்த பாவம், என்றனர்; சிலர், வல்லானை வென்ற வல்லான் போயினனே, என் செய் வது, என்றனர். சிலர், போருக்குப் போனோர் பதினறு பேர் அன்றோ? இருவர் போக மற்றையோர் எங்கே?, என்றனர். சிலர், வெற்றிவீரனும் இனி உயிருடன் இரான், என்று அஞ்சினர்.

அவ்வேளை வெற்றிவீரன் தனது ஈட்டியை உருவி, "என்னே! என்னே! நான் மட்டும் உயிருடன் இருத்தல் அழகோ? உடன் வந்தோரில் எழுவர் தெப்பமாகி உதவி புரிந்தனர்; அறுவரோ, இரத்தம் ஈந்து உபகாரம் செய் தனர்; ஒருவனே முளையறை பட்டு மாண்டு போனான்; வீரகேசரியும் தன் நண்பர்களைத் துறந்த துயரம் தாளா மல், ஆவியை விட்டான். என் உயிர்த் தோழர் அனை வரும் வீரத்தியாகிகளாக விளங்க, நான் மட்டும் உடல் கொண்டு திரிவதோ? திரியின் உலகம் ஏற்குமோ? எனது அன்பர் அனைவரையும் தேடிக் காண அடியேனும் போதலே மேலாம்," என்று எண்ணி, அக்கூரிய ஈட்டி ஈட்டியைத் தனது மார்புக்கு நேரே நீட்டிக் குத்திக் கொள்ள முயன்றான்.

## 9. ஈசனருள்

வல்லானுடன் சிறைபட்டு வந்த மோகினிப் பெண் அச்சபையின் முன்னே தோன்றி, வல்லானை முன்னிட் டுக்கொண்டு வணங்கி, சபையோரை வாழ்த்தி, சிவபெரு

மானைத் துதித்தனள்; பின்பு வெற்றிவீரனைக் குறுகி, "வீர! நேற்று இரவு மாங்கல்யப் பிச்சை தந்தாய். இன்று உன் உயிரை நான் பிச்சை ஏற்கின்றேன். உனது தோழர் பதினொருபேரும் கணப்பொழுதில் உயிர்பெற்று எழுவர். இதில் இம்மியும் ஐயம் வேண்டாம்; நாட்டின் நலத்தை மதித்து, நல்லுயிரையும் பொருள் படுத்தாமல் வீரத் தியாகிகளாக விளங்கும் உங்கள் உயிரை யமதர்மன் தன் வாயில் போட்டுக் கொள்வானோ? போட்டுக் கொள்ளின், சத்தியம் சிதறுமே. தவிர, இந் நாட்டாரும் நிம்மதியாக வாழ ஒருப்படுவரோ? எனக்கு மாங்கல்யப் பிச்சை தந்து காத்த உங்களை எழுப்பித்தருதல் எனது பொறுப்பாம். நாயகனை நல்வழிப்படுத்த இன்றளவு நான் முயன்றது உண்மை ஆனால், கலி காலத்தில் குமார கடவுளே கண் கண்ட தெய்வம் என்பதும் மெய்யானு ஷடாக்ஷரத்தை உருச் செய்வேன்," என்று சொல்லி, அந்தக் கடவுளின் மூல மந்திரத்தை முழுமனதுடன் ஜபித்தனள். முகூர்த்த நேரத்திலே வீரகேசரி உயிர் பெற்று எழுந்தான்; மற்றைய பதினொன்கு வீரரும் அயலூரிலிருந்து வருவார் போல் விரைந்து வந்து, சபையில் குதித்தனர். பின்னரே, வெற்றி வீரன் தனது ஈட்டியை நழுவ விட்டான், தனது அன்பர்களைக் கட்டித் தழுவிக் கொண்டான்; ஆனந்தக் கண்ணீர் வடித்து, அம்மோகினிப் பெண்ணை வணங்கி நின்று, தோகை மயில் வாகனனைத் துதியா நின்றனன். சபையோர் அனைவரும் ஆனந்த சாகரத்தில் ஆழ்ந்தனர்.

முருகனே! செந்தி முதல்வனே! மாயோன்
மருகனே! ஈசன் மகனே! ஒருகை முகன்
தம்பியே! நின்னுடைய தண்டைக்கால் எப்பொழுதும்
நம்பியே கைதொழுவேன் யான்.

---

முதல் பதிப்பு, ஐயாயிரம் பிரதிகள்; 21—3—'32.

Kesari Printing Works, Madras.